# உதயணன்

# சரித்திரச் சுருக்கம்

டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்

(பெருங்கதையைத் தழுவிய வசனம்)



கலைமகள் வெளியீடு

-ரவி-

# உதயணன்
# சரித்திரச் சுருக்கம்

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

(பெருங்கதையைத் தழுவிய வசனம்)







கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை

[விலை ரூ. 2/-

# முகவுரை

கொங்கு நாட்டிலிருந்த வேளிர்களுள் ஒருவரான கொங்கு வேளிர் என்பவரால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழில் அகவல் பாக்களால் இயற்றப் பெற்ற பெருங்கதை யென்னும் நூலின் கதைப்போக்கைத் தழுவி எழுதி அதற்கு அங்கமாக அதனோடு சேர்த்துப் பதிப்பிக்கப்பெற்ற இவ்வசன நூலைச் சில அன்பர்கள் விரும்பியபடி தனியாகவும் வெளியிடலாயிற்று.

குருகுலத்தில் பிறந்தவனும் கௌசாம்பி நகரத்து அரசனும் சதாணிகனுடைய புதல்வனுமான உதயணன் என்பவன் பிறந்தது முதல் அவன் துறவு பூண்டமை இறுதியாகவுள்ள வரலாறுகள் இதன்பால் விரிவாகக் காணலாகும்.

பண்டைக்காலத்து அரசாட்சி முறையையும் நாடுகளின் அமைதிகளையும், நீதிகளையும், சிற்பம் முதலிய பலவகைக் கலைகளின் நுட்பங்களையும் இதுகாறும் அறியப்படாத இன்னும் எத்தனையோ அரிய பெரிய விஷயங்களையும் அறிந்துகொள்வதற்குத் தக்க கருவியாகும் இது.

இக்கதையின் சம்பந்தமாக வடமொழி முதலியவற்றில் இயற்றப்பட்டுள்ள நூல்கள் பல வழங்கப்படினும் குணாட்டியர் என்னும் மஹாகவியால் பைசாச பாஷையில் முதலில் இயற்றப் பெற்ற பிருஹத்

கதையை முதல் நூலாகக்கொண்டு கங்கநாட்டு அரச னாகிய துர்விநீதன் இயற்றியதாகத் தெரியவரும் ஒரு வடநூலே கோங்கு வேளிர் இயற்றிய பெருங்கதைக்கு முதல் நூலாக இருத்தல் வேண்டுமென்பது சில அறிஞர்களின் கருத்து.

இந்நூல் உஞ்சைக் காண்டம், இலாவாண காண் டம், மகத காண்டம், வத்தவ காண்டம், நரவாண காண்டம், துறவுக் காண்டம் என்னும் ஆறு பகுதிகளை உடையது. படிப்பவர்கள் மூலத்தின் இனிமையை ஒருவாறு அறிந்து இன்புறும்பொருட்டு முக்கியமான இடங்களில் சில சில மூலப்பகுதிகள் அங்கங்கே சேர்க்கப்பட்டுள்ளன.

கிடைத்த பெருங்கதைக் கையெழுத்துப் பிரதி யில், மகத காண்டத்தின் முற்பகுதியும், நரவாண காண்டத்தின் பிற்பகுதியும், துறவுக் காண்டமும் இல்லாமையால் அந்தப் பகுதிகளுக்குரிய கதையை உதிதோதய காவ்யம் முதலிய வேறு நூல்களிலிருந்து அறிந்து எழுதி இது பூர்த்திசெய்யப் பெற்றது.

அரும்பதங்களுக்கு உரையும், அபிதான விளக்க மும் படிப்பவர்களுக்கு உபயோகமாக இருக்குமென் றெண்ணி இதன்பால் சேர்க்கப்பெற்றுள்ளன.

"சிதம்பரம்"
20—8—26

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

# உதயணன் சரித்திரச் சுருக்கம்

## 1. உஞ்சைக் காண்டம்

ஜம்புத்தீவிற் சுதர்சனமென்னும் மலையின் தெற்கேயுள்ள தான பாரதவருடத்திலுள்ள [1]தரும கண்டத்தில் [2]வத்தவநாட்டில் [3]கௌசாம்பி நகரத்தில் குருகுலத்திற் பிறந்து அதனை விளக்கிய சதானிகனென்னும் அரசன் சேதிநாட்டிலுள்ள வைசாலி நகரத்தரசனும் [4]ஏயர்குலத்தவனுமாகிய [5]சேடகனென்பவனுடைய புதல்வி மிருகாபதி என்பவளை மணஞ்செய்து இல்லறத்தை இனிது நடத்தி அரசாட்சி செய்துவந்தான். அவன், அரசர்க்குரிய குணவிசேடங்களை யுடையவனாதலின், மந்திரச்சுற்றத்தாரும் ஏனையாரும் மிக்க இன்பமுற்று அவன் குடைநிழலில் வாழ்வாராயினர். இங்ஙனம் சில ஆண்டுகள் சென்றன.

சாற்காலத்தில் ஒருநாள் மேகந் தோன்றுவதையும் அழிவதையுங் கண்டபொழுது வைராக்கியம் பிறந்தமையால், மேற்கூறிய சேடகராஜன், ஞாலங் காவலை நஞ்செனவெறுத்துத் தன் புதல்வர் பதின்மர்களுள் மூத்தவனான தனமித்திரனை அழைத்து, "இனித் தவஞ் செய்யச் செல்வேன்; நீ இந்த இராச்சியபாரத்தை ஒப்புக்கொள்ள வேண்டும்" என்றான். அவன், "யானும் தவஞ் செய்தற்கு வருவேன்" என்று கூறி மறுப்ப, சேடகன், அவன் தம்பிகள் எண்மரைத் தனித்தனியே அழைத் தழைத்துச் சொல்ல அவர்களும் மூத்தவன் கூறியதையே கூறி மறுத்துவிட்டனர். அப்பால் அவன் பத்தாம் பிள்ளையாகிய விக்கிரனை அருகழைத்து மிகவும் வற்புறுத்திக் கூறித் தன்

---

1. ஆரியகண்டமெனவும் வழங்கப்படும். 2. வத்ஸதேசம்.
3. கோசம்பியென இந்நூலுள் வழங்கப்படும். 4. ஹேஹயர்.
5. உதிதோதய காவியத்தில் இப்பெயர் காணப்படுகின்றது.

அரசாட்சியை அவனிடம் ஒப்பித்துவிட்டுச் சென்று விபுலமென்னும் மலையொன்றின் சாரலில் ஆலங்கானத்தில் தவஞ் செய்துகொண் டிருந்த ஸ்ரீதரரென்னும் முனிவரைச் சரணமடைந்து உபதேசம் பெற்றுத் தவஞ் செய்வா னாயினன்.

தந்தை முதலியவர்களுடைய பிரிவாற்றுமல் வருத்த முற்ற விக்கிரன், நிகழ்ந்தவற்றைச் சதானிகனுக்கும் தன் தங்கை மிருகாபதிக்கும் தூதுவர் மூலமாகத் தெரிவித்து விட்டுத் தந்தையின் கட்டளையின்படி அரசாட்சி செய்து கொண்டிருந்தான். இச் செய்தியை அறிந்த சதானிகன் வியந்தான்; மிருகாபதி மிக்க வருத்தத்தை யடைந்து மூர்ச்சையுற்றுள். பின்பு கணவன் பலவாறு தேற்றத் தேறி அவள் ஒருவாறு ஆறுதலுற் றிருந்தாள். இருவரும் இங் ஙனம் சில நாள் வாழ்ந்து வந்தார்கள். சில காலம் சென்ற பின் மிருகாபதி கருப்பமுற்றுள். அக்கருப்பத்தில் புண் ணிய புருடனுகிய தேவனொருவன் வந்து தங்கினுன். அவ ளுக்கு வேண்டிய பொருள்களை வருவித்தளித்தும் விரும்பிய இடங்களுக்கு அழைத்துச் சென்றும் அவளது மயற்கை (மசக்கை)யைப் போக்கி அரசன் அவளைப் பாதுகாத்து வந்தான். கருப்பம் நிரம்பியது. அக்காலத்தில் ஒரு நாள் இரவில் மேல்மாடத்துள்ள நிலாமுற்றத்தில் தான் இருந்த இடங்களையெல்லாம் சாதிலிங்க முதலியவற்றுற் சிவந்த நிறமுள்ளனவாகச் செய்வித்துச் சிவந்த மலர்மாலைகளையும் சிவந்த அணிகலங்களையும் தான் அணிந்துகொண்டு தன்னைச் சூழ்ந்துள்ள தோழியர்களையும் அங்ஙனம் அணிந்துகொள்ளச் செய்துவிட்டு அவர்களின் இடையே ஒரு மஞ்சத்தின் மேல் சிவந்த பட்டாடை யொன்றைப் போர்த்துக்கொண்டு அவள் அயர்ந்து நித்திரை செய்தாள். அப்பொழுது ஆகாய வழியே சென்றதும் பல்வன்மை யுடையதுமான [1]சரபப் பறவை யொன்று ஈரம் புலராத

1. கண்டப்புள்ளென்றும் கண்டபேரண்டமென்றும் கருடப் பறவை யென்றும் வேறு நூல்கள் கூறும்.

தசைத்தொகுதி யென்று நினைத்து அவளை மஞ்சத்துடன் தூக்கிக்கொண்டு பறந்து சென்று விபுலகிரியிற் சேடக முனிவருடைய பள்ளியினருகே மெல்ல வைத்து உண்ணத் தொடங்குகையில், அவள் விழித்துக்கொண்டாள். அதனைக் கண்ட அப்பறவை, "இது தசைத்தொகுதி யன்று. உயிரோடு கூடிய ஒரு பெண்வடிவம்" என்று நினைத்து உண்ணுமல் திடீரென் றெழுந்து தன்னிடம் சென்றுவிட்டது. அப்பால் அவள் நாற்புறத்தையும் பார்த்துத் தான் வேறிடம் வந்திருத்தலை யறிந்து திகைத்து அஞ்சி வருந்துவாளாயினள். பின்பு அச்சத்தாலும் ஆகாய வழியே வந்த வருத்தத்தாலும் கருப்ப வேதனை அதிகரிக்கப்பெற்றுச் சூரியோதய காலத்தில் எல்லாக் கோள்களும் நல்வழி நோக்கத் திருமணி விளக்கம் திசைநின் றழல ஓர் ஆண் குழந்தையைப் பெற்றுள்.

"பொருகடற் பருதிபோலப் பொன்னனுன் பிறந்த போழ்தே
மருளுடை மாத ருற்ற மம்மர்நோய் மறைந்தது"

(சீவக. 304)

பின்பு அவள் மிக்க விருப்பத்தோடு அக்குழந்தையைத் தழுவி யெடுத்து அந்தச் சமயத்துள்ள தன் நிலைமையை நினைந்து பலவாறு புலம்பினுள். அப்பொழுது நீராடுதற் பொருட்டு இயல்பாக அந்த வழியே அவ்விடம் வந்த சேடகமுனிவருடைய காதிற்கு அவளுடைய புலம்பலொலி எட்டியது. உடனே அவர் வந்து கண்டு அவளைத் தம்முடைய மகளென் றறிந்த தன்றி நிகழ்ந்தவற்றையும் தம்முடைய ஞானத்தா லறிந்துகொண்டு, "நீ அஞ்சாதே" என்று அபய மளித்துக் குழந்தையுடன் அவளை அழைத்துச் சென்று தம்முடைய பள்ளியின் ஒருபால் இருக்கச் செய்து ஆதரித்து வருவாராயினர். அவரைத் தன் தந்தை யென்றறிந்த மிருகாபதி ஒருவகையாக ஆறுதலுற்றிருந்தாள். அங்கே தவஞ் செய்துகொண் டிருந்த பரமவிருடிகள் பல்லோருக்குத் தலைவரும், தருமத்தையும் விரதத்தையும் தாங்கியவருமாகிய பிரமசுந்தர முனிவரும் அவர் மனைவி பழிப்பில் கற்பிற் பரமசுந்தரியும் சேடக முனிவ

ருடைய விருப்பத்தின்படி மிருகாபதியைக் குழந்தையுடன் பாதுகாத்து வந்தமையின் அவள் சிறிதும் கவலையின்றி யிருந்தனள்.

சூரியோதய காலத்திற் பிறந்தமையின் அவன் உதயணனென்னும் பெயர் பெறுதற்கு உரியனென்று சேடகமுனிவர் நாமகரணஞ் செய்ததன்றி அவனுடைய வரலாறு அநேகருடைய வரலாறுகளுக்கு இடமாக விளங்குமென்றுங் கூறினர்:

"அதிரா ஞாலத் தரசுவீற் றிருந்த
கதையுரைக் கெல்லாங் காரண மாதலிற்
புதையிரு ளகற்றும் பொங்கொளி மண்டிலம்
உதய மிவர்தர வுதித்தோன் மற்றிவன்
உதயண னெனப் பெயர்முதற் கொளீஇ" (2.11 : 79-83)

உதயணன், பிறைபோல் வளர்ந்து மேற்கூறிய பிரமசுந்தர முனிவர்க்குப் பரமசுந்தரிபாற் றோன்றிய யூகியுடன் நட்புற்று விரும்பி விளையாடிப் பின் அம்முனிவரிடத்தும் சேடக முனிவரிடத்தும் அரசர்க்குரிய பலவகைக் கலைகளையும் வேறு கலைகளையும் அவனுடன் கசடறக் கற்று இயற்கை அறிவாலும் செயற்கை அறிவாலும் மேம்பட்டு விளங்கினான். அவர்களுடைய ஆக்கத்தைக் கண்ட முனிவர்கள் மிகவும் பாராட்டி ஆசி கூறினார்கள்.

அப்பால் ஒரு நாள் பிரமசுந்தரமுனிவர் யானையின் கோபத்தை அடக்கி வயப்படுத்தி ஆளுதற்குரிய மந்திரமொன்றை உதயணனுக்கு உபதேசித்ததன்றி இசைப் பயிற்சி பண்ணுவித்து, முன்பு இந்திரனால் தமக்குக் கிடைத்திருந்ததும் யானை முதலியவற்றை வயமாக்குவதற்குரியதுமாகிய கோடபதியென்னும் யாழை அவனுக்குக் கற்பித்து அதனை அவன் வாசித்து வருகையிற் கேட்ட காட்டு யானைகள் முதலியனவும் பறவைகளும் பிறவுயிர்களும் மிகுந்த உவகையுடன் வந்து அவனுக்கு வேண்டிய ஏவல்கள் செய்தலைக் கண்டு வியந்து அந்த யாழை அவனுக்கே கொடுத்து, "நீ இந்த வித்தையில்

மிக்க ஆற்றலை அடைவாயாக" என்று ஆசி கூறினர். கூறியவர், "இவன் உனக்கு அடைக்கலம்" என்று தன் புதல்வனாகிய யூகியையும் அவன்பால் ஒப்பித்தனர். "கடந்துளோர்களுங் கடப்பரோ மக்கண்மேற் காதல்." பின்பு உதயணன் யூகியை உயிர்த்துணையாகக் கொண்டு எல்லா வகையிலும் சிறப்புற்று விளங்கினான்.

ஒரு நாள், தான் சென்ற காட்டில் பலபிடிகள் சூழப் பெற்றதும் பதினாயிரம் யானைகளின் பலமுள்ளதுமான ஒரு தெய்வ யானை நின்றது. அதனைக் கண்ட உதயணன் மந்திரத் தியானத்தோடு கோடபதியை வாசித்தான். வாசிக்கவே அஃது அவனருகே வந்து மிக்க அன்பு பாராட்டி அவன் ஏவிய தொழில்களைச் செய்தது. அதன் நிலையைக் கண்ட உதயணன் அதன் மேலேறித் தன்னிடமடைந்தான். அஃது அவனைவிட்டுப் பிரியாமல் அவனுக்குரிய பணிகளைச் செய்துவந்தது. சில நாட்கள் சென்ற பின்பு ஒரு நாள் இரவில் அந்த யானை அவன் கனவில் தோன்றி, "என்மேற் பாகரை யேற்றினாலும் தோற்கயிற்றால் என்னைக் கட்டினாலும் யான் உண்ணுதற்கு முன்னமே நீ உண்டாலும் உன்னைவிட்டு நீங்கிவிடுவேன்" என்றது. கேட்ட உதயணன் உடனே விழித்தெழுந்து அதுமுதல் மேற்கூறிய மூன்று தவறுகளும் உண்டாகாதபடி சாக்கிரதையாக நடந்து வந்தான். தெய்வ யானையும் அவனை விட்டு நீங்காமற் பணிபுரிந்து ஒழுகியது.

இப்படி யிருக்குங் காலத்தில் அரசாட்சியில் வெறுப்புற்றுத் துறவறம் பூணுதற்கு விரும்பிய விக்கிரன் தனக்குச் சந்ததியில்லாமையினால் தன் இராச்சியத்தைப் பாதுகாத்தற்கு யாரும் இல்லையேயென்று துன்பமுற்றுப் பின் தன் தந்தையாகிய சேடக முனிவர்பாற் சென்று வணங்கி முதலில் தன் கருத்தைத் தெரிவித்து அப்பால் அவருடைய உபதேச மொழிகளை விருப்பத்துடன் கேட்டுக் கொண்டிருந்தபொழுது, இயல்பாகவே அவ்விடம் வந்த உதயணனைக் கண்டு, ஒளியாலும் தோற்றப் பொலிவாலும்

சிறப்புற்று விளங்கிய அவனை நன்கு மதித்து, "இவன் யார்?" என்று கேட்டனன். கேட்கவே முனிவர், "குரு குலத்தரசனாகிய சதானிகன் தேவியும் உன் தங்கையு மாகிய மிருகாபதியின் புதல்வன் இவன்; ஊழ்வினை வயத் தால் அவள் இங்கே வந்து அவனைப் பெற்றனள். கல்வி கேள்விகளில் அவன் சிறந்தவனாயினன். உரிய பிராயம் வந்துவிட்டமையால் இவனுக்கு இனி அறிவிக்க வேண்டிய வற்றை அறிவித்துக் கௌசாம்பி நகர்க்கு அனுப்ப எண்ணி யிருக்கிறேன்" என்றனர். உடனே விக்கிரன் மிகவும் உவந்து, "இவனை அடியேனுக்கு அளித்தால் ஏயர்குலத் திற்கு உரிய உரிமையை இவன்பால் ஒப்பித்து இவனை அரசனாக்கிவிட்டுத் துறவு பூண்டு தவஞ் செய்து உய் வேன்" என்று முதலில் அவரையும் அப்பால் மிருகாபதி யையும் இரந்து அவர்களுடைய அனுமதி பெற்று யூகி யோடு உதயணனையும் மிருகாபதியையும் வைசாலி நக ருக்கு அழைத்துச் சென்று அங்கே யுள்ள மந்திரிகளுக் கும் சேனைத் தலைவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிவித் துத் தன் அரசாட்சியை அவன்பால் ஒப்பித்துவிட்டுத் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளுதற்குத் தவ வனஞ் சென்றான்.

மேற்கூறிய தெய்வ யானை உதயணனுடனே வைசாலிக்கு வந்து வழக்கப்படியே உதயணனுக்குச் செய்தற்குரிய ஏவல்களைச் செய்துகொண்டு அவனுடைய யாழிசையை நுகர்ந்து அந்நகரில் இருந்தது.

அப்பால் உதயணன் யூகியைத் தன்னுடைய முதல் மந்திரி யாக்கி அரசாட்சி செய்துகொண்டு வைசாலி நகரத்திலிருந்தான். அப்போது அவன் தன்னுடைய வீரத்தாலும் யூகியின் உதவியாலும் தெய்வ யானையின் உபகாரத்தாலும் பல பகைவர்களை வென்று அடக்கி அவர்களுடைய நாடுகளைத் தன்வயமாக்கி வாழ்ந்து வந்தான்.

நிலாமுற்றத்தில் உறங்கிய தேவியைக் காணுமற் சதானிகன் திடுக்கிட்டு நிகழ்ந்ததை அறியாமல், பல இடங் களுக்கும் தன் பரிவாரங்களை அனுப்பித் தேடுவித்துக் கொண்டே காலங் கழித்துவந்தான். வருகையில் ஒரு நாள் அவன் முக்கால உணர்ச்சியுள்ள ஸௌவ்ருதரென்னும் முனிவரை யடைந்து தன் குறையைத் தெரிவித்து வருந்தினன். அவர் மிருகாபதியைச் சரபப் புள் எடுத்துச் சென்று விபுலகிரியில் வைத்தது முதல் உதயணன் வைசாலியில் அரசாட்சி செய்துகொண் டிருப்பது இறுதி யாகவுள்ள செய்திகளையெல்லாம் விளங்கக் கூறியதன்றிச் சதானிகனுடைய பிற்காலச் செய்திகளையும் தெரிவித்த னர். உடனே சதானிகன் வைசாலி நகரத்தை யடைந்து மிருகாபதியைக் கண்டு அவளுடைய குணவிசேடங்களைப் பாராட்டிப் புகழ்ந்தனன். பின்பு அவள் வாயிலாக உதயணனைக் கண்டு அவனுல் உபசரிக்கப்பெற்றுச் சில நாள் அங்கேயிருந்து, அப்பால் அவனை அந்நகரிலேயே அரசாட்சி செய்துகொண் டிருக்கும்படி சொல்லிவிட்டுத் தான் தேவியுடன் கௌசாம்பியை யடைந்து முன்போல அரசு புரிந்து வந்தான். அப்போது மிருகாபதி இரண்டு புதல்வர்களைப் பெற்றுள். அவர்கள் முறையே பிங்கலன், கடகன் என வழங்கப்பெற்றனர். அவர்கள் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினுர்கள். உதயணன் இடை யிடையே கௌசாம்பிக்கு வந்து தந்தையுடன் சிலகால மிருந்துவிட்டுச் செல்வதுண்டு. இங்ஙனம் சில ஆண்டுகள் சென்ற பின், சதானிகனுக்குத் தன் அரசாட்சியில் வெறுப்பும் துறவில் விருப்பமும் உண்டாயின. அதனுல், உதயணனை வருவித்து அவன்பால் அரசாட்சியை ஒப்பித்துவிட்டுத் தான் எண்ணியவாறே தவஞ் செய்தற்கு வனஞ் சென்றுன்.

அப்பால் உதயணன், கௌசாம்பி, வைசாலியென்னும் இரண்டு இராச்சியங்களையும் கௌசாம்பியிலேயிருந்து கொண்டு செவ்வனே சில நாள் ஆண்டு பின் வைசாலியிலே

யிருந்து அரசு புரியும்படி யூகியை நியமித்துவிட்டுத் தான் கௌசாம்பியை மட்டும் ஆளுவானாயினன். யூகியை யல்லாமற் கல்வியறிவிற் சிறந்தவர்களும் புறத்தே சென்று உலாவி வரும் உயிர் போன்றவர்களுமான வயந்தகன், உருமண்ணுவா, இடவகனென்று வேறு மூன்று மந்திரி களும் உதயணனுக்கு உண்டு. அவர்களும் வேறு சில தோழரும் அவனுக்கு அங்கே உதவி புரிந்து வந்தார்கள். மேற்கூறிய தெய்வ யானையும் அவனுக்கு வேண்டிய பணிகள் புரிந்து அங்கே உதவி செய்துவந்தது. அப் போது உதயணன் பல பகைவர்களை வென்று அவர்க ளுடைய இடங்களைக் கைக்கொண்டு மிக மேம்பாடுற்று விளங்கினான். கல்வியாலும், வீரத்தாலும், ஆட்சி முறை யாலும், பிரதாபத்தாலும், உதயணன் சிறந்தவனென்ற புகழ் எங்கும் பரவியது.

இங்ஙன மிருக்கையில் ஒருநாள் உதயணன், சேனை யையும் தெய்வ யானையையும் ஊரில் நிறுத்திவிட்டு உரு மண்ணுவா முதலிய சில தோழரோடும், சில வீரரோடும் மட்டுஞ் சென்று ஒரு காட்டில் வேட்டையாடிக் களைத்து மயங்கி நீர் வேட்கையுற்று வருந்தினன். மற்றவர்களும் அப்படியே வருத்தமடைந்தார்கள். பின் எல்லோரும், "இந்தக் காட்டில் ஏதேனும் தெய்வமிருக்குமாயின் இரங்கி நம்முடைய தாகத்தை அது போக்கியருளும்" என்று நிச்சயித்துக் கொண்டவர்களாகி அங்கே ஒரு புரசமரத்தி னிழலிலே சோர்ந்து கிடந்தார்கள். கிடக் கையில், வெண்டுகில் உடுத்திய வண்ணம் மிக மெல்லிய மேற் போர்வையை யுடையவனும் அரையிற் கச்சணிந்த வனும் சந்தனம் பூசிய மார்பை யுடையவனும் ஒளிவிட்டு வீசுகின்ற மேனியை யுடையவனும் பிறைவடம் விளங்கு கின்ற கழுத்தை யுடையவனும் செங்கழுநீர் மாலையைச் சூடிய குஞ்சியை யுடையவனும் ஆயிரம் இதழை யுடைய செந்தாமரை மலர் போன்ற கண்களை யுடையவனுமாகிய மிக அழகிய ஓரிளைஞன் அங்கே வந்து அவர்களை

நோக்கி, "நீவிர் யாவிர்? மிகுந்த இளைப்பை யடைந்திருக்கி றீர்களே; நேர்ந்த துன்பம் யாது?" என்று வினவினன். அவர்கள் தமக்கு அப்போதுள்ள நீர் வேட்கைத் துன் பத்தைக் கூறினர். அவன் உடனே இனிய நன்னீரைக் கொணர்ந்து அவர்களுடைய தாகத்தை நீக்கினன். நீக்கிய பின் வேறொன்றையும் எதிர்பாராமல் அவன் செல்லத் தொடங்கியபொழுது அவர்கள் அவனுடைய உப காரத்தை மிகவும் பாராட்டி அவனை நோக்கி, "இது போன்ற துன்பம் இனி எங்களுக்கு ஏதேனும் உண்டாகு மாயின், உம்மை நினைத்துப் போக்கிக் கொள்ளக் கருது கின்றோம்; நீர் இன்னாரென்று எமக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று கேட்டனர். கேட்கவே அவன், "நான் குபேரனுக்குத் தொண்டு செய்யும் இயக்கர்களில் ஒருவன். என் பெயர் நஞ்சுகனென்பது; உங்க ளுடைய இனிய நட்பினனாக என்னைக் கருதுக; நீங்கள் எந்தச் சமயத்தில் நினைத்தாலும் உடனே நான் வந்து நும் குறையைத் தீர்த்தற்குரிய கடப்பாடுடையேன்; என்னை நினைத்தற்குரிய மந்திரம் இஃது" என்று சொல்லி அம் மந்திரத்தை உருமண்ணுவாவுக்கு உபதேசித்து விட்டுத் தன்னிடஞ் சென்றனன்; அவர்கள் அவனுடைய பேருதவியை மறவாதவர்களாகி அவனைப் பாராட்டிக் கொண்டு நகரம் வந்து சேர்ந்தார்கள்.

பின்பு ஒரு நாள் நாடக அரங்கில் ஆடிய ஆடன் மகளிருடைய கூத்திலும் பாட்டிலும் மனத்தைச் செலுத்தி மயங்கிப் போய்ப் பசி மிகுதியால் உதயணன் மேற்கூறிய தெய்வ யானைக்கு வழக்கம்போலே உணவளித் தலை மறந்து தான் முந்தியுண்டான். அதனையறிந்த அந்த யானை, "உதயணன் எனக்கு வாக்களித்ததை மறந்து விட்டு உண்டது தன் புண்ணியக் குறைவாலேதான்" என் றெண்ணி உடனே தன்னிடம் சென்றுவிட்டது. பின்பு கோடபதியை வாசிக்கும்போது கேட்பதற்கு வழக்கப் படியே தெய்வ யானை வாராமையை அறிந்த உதயணன்

தான் செய்த பிழையை நினைந்து மிகவும் வருந்தினன்; அதனை அறிந்த மந்திரிமார், "அந்த யானையை எப்படி யாவது தேடித் தருவோம்" என்று வாக்களித்தனர். அங்ஙனம் வாக்களித்தும் வருத்தந் தணியாதவனாகிக் கவலைக் கடலில் அழுந்திய உதயணன் அநேக இடங்களுக்குத் தன் பரிசனங்கள் பலரை அனுப்பி அதனைத் தேடச் செய்தனன். செய்தும் அஃது அகப்படாமையால் யாழுங் கையுமாகத் தானே காடுகளுக்கு நாள்தோறுஞ் சென்று சென்று அதனைத் தேடித் திரிவானாயினன்.

அவந்தி நாட்டில் உச்சைனி நகரத்தில் [1]பிரச்சோதன னென்னுஞ் சக்கரவர்த்தி, வீரம் முதலியவற்றால் சிறந்து பல அரசர்களும் திறை கொடுக்க அரசாட்சி செய்து செங்கோல் செலுத்தி வந்தான். அவனுடைய பதினாயிரந் தேவிமார்களில் முதன்மை வாய்ந்த பதுமகாரிகை யென்பவள்பால் அவனுக்கு இந்திரனுடைய அருளினாற் பெண் ஒருத்தி உதித்தனள். அதனால் அவளுக்கு வாசவ தத்தை யென்று பெயரிடப்பட்டது. அவள் மிக்க அழகுடையவள் :

"யாற்றற லன்ன கூந்தல் யாற்றுச்
சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்;
வில்லெனக் கிடந்த புருவம் வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்;
பிறையெனச் சுடருஞ் சிறுநுதல் பிறையின்
நிறையெனத் தோன்றுங் கறையில் வாண்முகம்;
கிளியென மிழற்றுங் கிளவி கிளியின்
ஒளிபெறு வாயி னன்ன வொள்ளுகிர்;
வேயெனத் திரண்ட மென்றோள் வேயின்
விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவல்;
காந்தண் முகி ழன்ன மெல்விரல் காந்தட்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை" (4·11 : 64-79).

---

1. பிரத்தியோதனன்.

அவள் மற்ற எல்லாவகையிலும் சிறந்தவள்; வேறுள்ள பட்டத் தேவியர்களிடம் பிரச்சோதனனுக்கு உதித்த பிள்ளைகளும் பெண்களும் மிகப் பலர். பிள்ளைகளுள்ளே மிகச் சிறந்தவர்கள் பாலகன், பாலகுமரன், கோபாலகன் என்பார். மிக்க வீரியமுடையதும் மிகப் பெரியதுமான ஒரு பட்டத்து யானை அவனுக்கு உண்டு. அதன் பெயர் நளகிரி யென்பது. அவனுக்கு மந்திரிகள் பதினாறாயிரவர்.

அந்தச் சக்கரவர்த்தி ஒரு நாள், "எல்லா அரசர்களும் கப்பம் செலுத்திவருகிறார்களா?" என்று விசாரித்த பொழுது கணக்கர், "வத்தவ நாட்டரசனும் வைசாலி நகரத்தரசனும் வழக்கப்படி செலுத்தவில்லை" என்று தெரிவித்தனர். அதற்குரிய காரணத்தை வினவியதன்றி அவர்களைப் பிடித்து வரும்படி செய்து விசாரிக்க வேண்டுமென்று அரசன் மந்திரிகளை நோக்கிக் கூற, அவர்களுள்ளே முதன்மை வாய்ந்தவனும் நீதிநூற் பயிற்சியிலும் தந்திரத்திலும் மிக்கவனுமாகிய சாலங்காயனென்பவன், "உதயணனுக்குத் தெய்வயானையொன்றும் பராக்கிரமசாலிகளான மந்திரிகளும் துணையாக இருத்தலின் அவன் இப்பொழுது வெல்லப்படான். இப்போது வைசாலி நகரத்தரசனாக இருப்பவனும் உதயணனுடைய நண்பனுமாகிய யூகியும் வெல்லுதற்கரியன். அவனும் உதயணனும் சேராமலிருக்கும்படி முதலிற் செய்ய வேண்டும். யூகியுடன் போர் செய்தற்காகச் சதுரங்க சேனைகளையும், தக்க வீரர்களையும் நாம் வைசாலிக்கு அனுப்பினால், யூகி தன் சேனைகளோடு வந்து நம்முடைய சேனைகளுடன் போர் செய்வான்; அவன் வந்து உதயணனுக்கு உதவி செய்ய இடமிராது. இயல்பாகவே எல்லா நலமும் வாய்ந்த உதயணன் தனக்குப் பணி புரிந்துவந்த தெய்வ யானையைப் பிரிந்தமையால் இப்போது அதனைத் தேடிக்கொண்டு யாழுங் கையுமாகக் காடுகளில் அலைகின்றான். அதனாலும், யூகி வந்து உதவுவதற்கு இடமில்லாமையாலும் உதயணனை நாம் பிடித்துக்கொண்டு

வருவதற்குத் தக்க சமயம் இது. யாம் மாய யானை யொன்றை நிருமித்து அனுப்பி மயக்கி உதயணனைப் பிடித்துவரச் செய்வதுதான் தக்க உபாயம்" என்றான். கேட்ட பிரச்சோதனன் உடனே யூகியுடன் போர் செய்வதற்காகச் சில வீரர்களைச் சேனைகளுடன் வைசாலிக்கு அனுப்பினன். சிறந்த சிற்பிகளைக் கொண்டு அரக்கு முதலியவற்றாலும், மரங்களாலும் மிகப் பெரிதாக எந்திர யானை யொன்றைச் செய்வித்து ஆயுதபாணிகளான தொண்ணூற்றாறு போர்வீரர்களை அதன் வயிற்றில் இருக்கும்படி செய்து அதன் துதிக்கையுள்ளும், நான்கு கால்களுள்ளும் பலவகையான ஆயுதங்களை வைப்பித்து அனுப்பியதன்றிப் பதினாறாயிரஞ் சதுரங்கப் படைகளுடன் மேற்கூறிய சாலங்காயனையும் ஒரு சேனைத் தலைவனையும் அதன்பின் கௌசாம்பிக்கு அனுப்பினான்.

பிரச்சோதனன் கட்டளைப்படியே சென்ற சேனைகளுடன் வைசாலி நகரத்தைச் சூழ்ந்துகொண்ட வீரர் முதலியவர்களுக்கும் யூகிக்கும் பெரும் போர் நிகழ்ந்தது.

உதயணன் தேடிக்கொண் டிருக்கும் காட்டின் நடுவில் நீலமலை போன்ற அந்த எந்திர யானையானது மேகம் போற் பிளிறிக்கொண்டு சென்று உலாவியது. சாலங்காயன் பிறர் அயாதபடி பெரும் படையோடு சென்று அதன் பின்னே வேறிடத்து ஒளித்திருந்தான். அந்த வஞ்ச யானை தன்னை உயிருள்ள யானைபோற் காட்டிப் பல பிடிகள் சூழ அக்காட்டில் உலாவுகையில் அதனைக் கண்ட காட்டு வேடர்கள் முன்னம் காணமற்போன தெய்வ யானையென்று நினைத்து மகிழ்ந்து உடனே சென்று உதயணனுக்குத் தெரிவித்தார்கள். அப்போது உதயணன் மகிழ்வுற்று அவர்களுக்கு வேண்டிய சம்மானங்களைச் செய்துவிட்டு யாழுடன் புறப்பட்டான். பகைப்படை வருமென்று வயவனென்னும் பறவையின் ஒலியால் தெரியவந்தது. பின்னும் பல தீய நிமித்தங்கள் காணப்பட்டன. உடன்வந்த வயந்தகன் தடுத்தான்.

உதயணன் அவற்றைச் சிறிதும் உட்கொள்ளாமல் விரைந்து காடு சென்று அந்த யானையைக் கண்டு தனக்குப் பழக்கமுள்ள தெய்வ யானையாகவே நினைந்து முழு மதியைக் கண்ட சகோரம்போல் மகிழ்ந்து தன்னுடன் வந்த சேனைகளை வெகு தூரத்திற்கப்பால் நிறுத்திவிட்டுத் தான்மட்டும் அதனருகிற் சென்று [1]இனிய இராக மொன்றை யாழில் வாசித்தான். அப்போது அது யாழிசையில் மிக்க விருப்ப முள்ளதுபோல் வந்து அவன் எதிரே நின்றது. அவன் மகிழ்வடைந்து மெய்ம்மறந்து நின்றான்; நின்றவுடன் உள்ளிருந்த போர்வீரர்கள் மிக விரைவாக அதன் பொறிகளைக் கழற்றிக்கொண்டு திடீரென்று வெளியே வந்து கொடிய சொற்களைச் சொல்லிக்கொண்டு போர் செய்யத் தொடங்கினார்கள். இது மிகச் சிறியவர்களுடைய செயலென்று எண்ணிப் புன்முறுவல் செய்துகொண்டு உதயணன் கம்பீரமாக நின்றான். நிற்கையில், ஐந்நூறு போர்வீரர்களோடு பின்னே நின்ற வயந்தகனால் அந்தத் தொண்ணூற்றறுவரும் கொல்லப்பட்டார்கள். மறைந்து சேனையுடன் பின்னே ஒருபாலிருந்த சாலங்காயன் மிகுந்த கோபங்கொண்டு பல வீரர்களோடு வந்து எதிர்த்துப் போர் செய்து உதயணனால் தோல்வியுற்றான்; சேனாதிபதியும் மாண்டான். சாலங்காயனை வெட்டுவதற்குத் தன் வாளை உயர்த்திய உதயணன், மந்திரியைக் கொல்லலாகாதென்ற நூல் விதியை யுட்கொண்டு அவனைக் கொல்லாமல் விட்டுவிட்டு அவ்வாளாற் பல யானைகளை வெட்டி வீழ்த்திப் பின்பு ஒரு யானையை வெட்டத் தொடங்கியபொழுது அதன் கொம்பிற் பட்டு அவ்வாள் ஒடிந்து போயிற்று. ஆயுதமின்றித் தனியே நின்ற உதயணனைப் பிடித்துக்கொள்ளுதற்குச் சாலங்காயன் முதலியோர் சூழ்ந்துகொண்டார்கள். அப்

1. மாளவராகமென்றும் தக்கராகமென்றும் வேறு நூல்கள் கூறும்.

பொழுது உதயணன் நிகழ்ந்தவற்றை ஓர் ஓலையிலெழுதி அதனை யூகியிடம் சேர்ப்பிக்கும்படி வயந்தகனிடம் கொடுத்தனுப்பிவிட்டுத் தான் அவர்கள் வசமாயினன்.

அப்பால், ஒரு மதயானையைத் தாமரைத் தண்டின் நூலாற் கட்டுவது போலத் தன் மேலாடையாற் சாலங்காயன் உதயணனைக் கட்டி ஒரு தேரின்மேலேற்றிக் கொண்டு உச்சைனி சென்று பிரச்சோதனனிடம் தெரிவித்து அவன் கட்டளைப்படியே [1]இருண்மயமாகிய ஒரு பெருஞ் சிறையிற் கால்களில் விலங்கிட்டு மிகத் துன்பமுறும்படி அவனை வைத்துவிட்டான். இஃதிவ்வாறாக;

வயந்தகன் விரைந்து சென்று வைசாலியின் புறத்தே பெரும் போர் நிகழ்த்திக்கொண்டு நின்ற யூகியைக் கண்டு நிகழ்ந்தவற்றைக் கூறி உதயணனது திருமுகத்தை அவனிடங் கொடுத்தான். அதனைப் பிரித்துப் படித்தறிந்த யூகி முதலில் மிகுந்த துன்பமுற்றுத் தன் தலைவனது நிலைமைக்கு வருந்தி, அப்பால் மிக்க சினங்கொண்டு[2], "இரும்பை எலி விழுங்கிற்று" என்றதற்கு, "குழந்தையைப் பருந்து கொண்டுபோயிற்று" என்றது போல உலகில் வஞ்சகச் செயல் செய்தவனை வஞ்சகச் செயல் செய்தே

---

1 "வேழ வேட்டத்து வீழ நூறி, யருஞ்சிறைப் பள்ளி யாப்பொடு புக்க, பெருஞ்சிறைப் பள்ளிப் பேரிருள்" (1·15 : 132-4) எனப் பெருங்கதையிலும், "வான்றளை விடீஇய" (15 : 63) என மணிமேகலை யிலும், வாரார் வனமுலை வாசவ தத்தையென், றாரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன், பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே, காரார் தடந்தோட் டளைக்காலன் பின்போனாள், ஊரா ரிகழ்ந்திடப் பட்டாளே?" (சிறிய திருமடல், 66-8) எனத் திருமங்கையாழ்வார் வாக்கிலும் காணப்படுதலால், உதயணனிருந்த சிறைச்சாலை மிக்க இருண்மயமாக இருந்ததென்றும் அவன் காலில் விலங்கு இடப்பட் டிருந்த தென்றுந் தெரிகின்றன.

2 உதிதோதய காவியம்.

வெல்லவேண்டுமென்று தன்னுள்ளே நிச்சயித்துக்கொண்டு அங்கே சூழ்ந்து நின்ற நண்பர்களை நோக்கி, "கள்ள யானையால் மயக்கி எம்மரசனைப் பிடித்துத் தன்னகர்க்கு வருவித்த பிரச்சோதனனுடைய நகரத்தை யான் ஒரு யானையாலேயே அழிப்பித்து உதயணனை மீட்பதல்லாமல் உஞ்சை நகரத்தைத் தீக்கிரையாக்கியும் அவனைக்கொண்டு வாசவதத்தையைப் பிரித்துப் பிரச்சோதனன் அறியாமல் வலித்துக் கொண்டுவரச் செய்தும் அவனுக்கு அவளை மணஞ் செய்விப்பேன்" என்று சபதஞ் செய்துவிட்டு வைசாலி நகரத்தைப் பாதுகாத்து வரும்படி தன் சுற்றத்தார்களை நியமித்தான். கௌசாம்பி நகரத்தைப் பாதுகாக்கும் வண்ணம் பிங்கல கடகருக்குச் சொல்லி அனுப்பினான்.

அவந்திநாட்டின் எல்லைப்புறத்ததாகிய புட்பக நகரத்தில் உதயணனுடைய சுற்றத்தார்களை இருக்கச் செய்து சேனைகளோடே அங்கிருந்து அவர்களைப் பாதுகாப்பதுடன் பின்பு செய்ய வேண்டுவனவற்றை அப்பொழுதப் பொழுது ஆலோசித்துச் செய்து வரும்படி சொல்லி இடவகனை அந்த நகருக்கு அனுப்பினான். சயந்தி நகரத்தில் உருமண்ணுவாவை இருக்கச் செய்தான்; இங்ஙனம் இன்னும் செய்ய வேண்டியவற்றைச் செய்து முடித்த யூகி, "உதயணனுடைய பிரிவினுக்கு ஆற்றாமல் வருந்திய யூகி இறந்து போய்விட்டான்" என்ற செய்தியை எல்லா நாடுகளிலும் நகரங்களிலும் பரவச் செய்துவிட்டு ஒருவருக்குந் தெரியாதபடி தான் மறைந்து நின்று, ஒரு பிணத்தைத் தன்னுடைய பிணமாகப் பிறர் நினைக்கும்படி செய்து அதனைத் தன்னுடைய அணிகல முதலியவற்றாற் புனைந்து அதைச் சுடுவிக்கும்படி செய்துவிட்டுத் தான் மாறுவேடம் பூண்டு அப்படியே வேறு வேடம் பூண்ட பல வீரர்களோடும் வயந்தகன் முதலிய தோழர்களோடும் கூனர், குறளர், சிந்தர் முதலியவர்களோடும் உஞ்சையை

யடைந்து அதன் புறத்தேயுள்ள தனியிடமொன்றில் இருந்து மேல் நிகழ்த்த வேண்டியவற்றை எல்லோருக்கும் தெரிவித்துவிட்டுப் பிரச்சோதனனது அரண்மனையிலும், அகநகரத்திலும், புறநகரத்திலும், அயலூர்களிலும் பிறர் அறியாதபடி அவ்வவ்விடத்திற்கேற்ற வேலைகளைப் பெற்று இருந்து வரும் வண்ணம் சொல்லி அவர்களை அனுப்பிவிட்டுச் சென்று தான் அந்த நகர்ப் புறத்தேயுள்ள மாகள வனத்தே யிருக்கும் காளி கோயிலில் இருந்து மேல் ஆக வேண்டியவற்றை முதலில் ஆராய்ந்தான்.

யூகி இறந்துவிட்டா னென்பதைக் கேட்ட பிரச்சோதனன் மிக மகிழ்ந்து போருக்குச் சென்ற சேனைகளை வைசாலியினின்றும் வருவித்துவிட்டுக் கவலை நீங்கி, உதயணனுடைய நாடுகளிற் சில பகுதிகளையும் வலிந்து கைப் பற்றினன்.

பிங்கல கடகர் யூகி, இறந்தானென்ற செய்தியைக் கேள்வியுற்று வருந்திப் புலம்பி மயான மடைந்து அங்கே யுள்ள சாம்பலில் அவனுடைய அணிகலன்கள் முதலியவற்றைக் கண்டு மிகத் துன்புற்றுக் கௌசாம்பி நகர்க்கு மீண்டனர்.

அப்பால் யூகி உச்சைனியின் புறத்தேயுள்ள[1] ஓர் ஊரை யடைந்து அங்கே ஒருவருமில்லாத பாழ்வீடொன்றில் வயந்தகன் முதலிய சில அன்பர்களுடன் இருந்து ஆலோசித்து வேறு பாஷைகளை அவர்களுக்குக் கற்பித்துக் கடைவீதி முதலிய இடங்களில் வியாபார முதலியவற்றைச் செய்யும்படி அவர்களை அனுப்பினன். வயந்தகன் பிரச்சோதனனுடைய குமாரர்களோடு சேர்ந்து கல்வி கற்பானாகி அவர்களுக்கு ஏவல் செய்துகொண்டிருந்தான்.

---

1 அவ்வூர்ப் பெயர் பாகமென்று தெரிகிறது; உதீதோதய காவியம், உதயண.

யூகியால் அனுப்பப்பட்ட வீரர்களிற் சிலர் ஊமை வேடமும் சிலர் செவிடர் வேடமும் தரித்துக்கொண்டு அரண்மனை முதலிய இடங்களில் தாம்தாம் செய்தற்குரிய வேலைகளைப் பெற்று அவற்றை நன்கு செய்பவர்களாகி அப்பொழுதப்பொழுது அங்கே நிகழும் செய்திகளையும் ஆண்டுள்ளார் செய்யும் ஆலோசனைகளையும் மெல்ல அறிந்து வந்து யூகிக்குச் சொல்வாராயினர். மற்றையோரிற் பலர் பிறரறியாமல் அங்கங்கே சென்று தாங்கள் அவ்வவ் விடங்களில் அறிவனவற்றை யூகிக்கு அறிவித்தும் அவன் கூறுவனவற்றைத் தாம் அறிந்துகொண்டும் தத்தம் இடம் செல்வார்கள். பிரிந்தவர்கள் ஒருங்கு சேர்வதற்கும் சேர்ந்தார்கள் பிரிந்து செல்வதற்கும் சில குறிப்பொலி களும் குறிப்புக்களும் அவனால் அறிவிக்கப்பட்டிருந்தன.

அவர்கள் அப்படி யிருக்கையில் சேதிநாட்டின் அயல்நாடான பாஞ்சால தேசத்து அரசனாகிய ஆருணி யென்பவன், ஏயர் குலத்தவர்க்கும் தன் குலத்தவர்க்கு முள்ள பரம்பரை வைரத்தால் அக்குல வுரிமை பூண்ட உதயணன்பாற் பகைமை கொண்டவனாதலின், அவன் சிறைப்பட்டதை அறிந்து உடனே சேனைகளுடன் புறப்பட் டுப் போய்க் கௌசாம்பி நகரத்தைக் கைப்பற்றி அதனையே தன்னுடைய இராசதானியாகக் கொண்டு ஆளத் தொடங்கி விட்டான். அவனுக்கு அஞ்சிப் பிங்கலனும் கடகனும் சில சேனைகளோடு அயலிடஞ் சென்று மறைந்திருப்பா ராயினர்.

உச்சைனி நகரில் இங்ஙனம் சங்கேதமான சில ஏற்பாடு களைச் செய்துகொண்டு புறத்தே இருந்த யூகி, ஒரு நாள் மிகுந்த நோயுடையவன் போலவும் தெய்வாவேசங் கொண் டவன் போலவும் தன்னைக் காட்டி நீர்க் கரகம் ஒன்றைத் தலையில் ஏந்திக்கொண்டும் கையைத் தட்டிக்கொண்டும் பாடிக்கொண்டும் நகர வீதியிற் சென்று, "தேவ லோகத்தி லிருந்து ஒரு தேவன் இந்நகரில் வந்திருக்கிறான். அவன் என்னுடைய தலைவன்; யான் அவனைப் பின்தொடர்ந்து

வந்தேன்;[1] ஐந்தலை நாகம் ஒன்றை இவ்வூர் அரசன் வைத்திருக்கிறான். அஃது எவ்விடத்தே யுள்ளது?'' என்று மயக்கமும் தெளிவுமுள்ள பல வகையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே[2] பல சனங்கள் வியந்தும் பயந்தும் இரங்கியும் தன்னைச் சூழ்ந்துவர நடித்துக்கொண்டும் உதயணன் இருக்கும் சிறைச்சாலையின் பக்கத்தை யடைந்தான். அடைந்தவன் உதயணனும் தானுமே கற்றதும் பிறர் அறியாததுமான ஒரு பாட்டைப் பாடினான். கேட்ட உதயணன் யூகி வந்திருக்கிறானென்று தெரிந்து மகிழ்ந்து கவலை தீர்ந்து தான் அங்கிருந்தலை வேய்ங்குழலை ஊதி அவனுக்குத் தெரிவித்துவிட்டுச் சிறை காப்பாளரிடஞ் சொல்லிக்கொண்டு வேடிக்கை பார்ப்பவன் போலப் புறத்தே வந்தான். யூகியும் அவனுடன் வந்த வீரர்களும் உதயணனைக் கண்டு ஆறுதலுற்றார்கள். பின்பு யூகி பிறர் தன்னைப் பேயென்று நினைக்கும்படி நடித்துக்கொண்டு தான் இருக்கும் இடஞ் சென்றான்.

யூகி மேற்கூறியவாறு வேடம் பூண்டு சனங்கள் ஐயுறுதற்கிடமான சில வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு பின்

---

1 'ஐந்தலை நாகம்' என்றது, தோழர் நால்வர்க்கும் உதயணனுக்கும் உயிரொன்றாக இருத்தல்பற்றி; "ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்கலுற்றார்'' (சீவக சிந்தாமணி, 746) "புற்றினி லுறையும் பொறிவரி யைந்தலைப் பற்றரு நாகம் பற்றிவந் தினிதா, வுற்றவிந் நகரத் துட்சிறை வைத்தார்'' (உதயண குமார காவியம், 1: 76), "உடம்பா திரண்டிற் குயிரொன் றெனஎ'' (திருவிளையாடல், 46: 13) என்பவை அறியற்பாலன.

2 "கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய, வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை, வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய, உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன், உருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு, பரிவுறு மாக்களிற் றாம்பரி வெய்தி'' மணிமேகலை, 15: 61-6.

னும் சில நாள் வீதிகளில் உலாவி வருகையில், சிறைச்சாலை வேலைக்காரர்களிற் கூர்த்த புத்தியையுடைய ஒருவன் பிரச்சோதனனிடஞ் சென்று வணங்கி, "அரசர்க்கரசே! சில தினங்களாகப் பல சனங்கள் தன்னைச் சூழ்ந்துவர நோயாளி ஒருவன் வினோத வேடம் பூண்டு ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் சிலவற்றைச் சொல்லிக்கொண்டும் வீதியில் வருகின்றான். அவன் பாட்டைக் கேட்குஞ் சமயங்களில் உதயணன் வேய்ங்குழல் ஊதுகின்றான். இவற்றைத் தெரிவிக்க வந்தேன்; பாதுகாத்தருள்க" என்றான். என்றபொழுது, அரசன் அருகிலிருந்த மந்திரிகளை நோக்க, அவர்களிற் சாலங்காயன், "அரசே, அவன் யூகியாக இருக்கலாமென்று நான் ஐயுறுகிறேன்; அவன் இறந்திருக்கமாட்டான். அவன் மார்பில்[1] யானைக் கொம்பு குத்தியதால் உண்டாகிய தழும்பு ஒன்று உண்டு. அதனை எப்படியேனும் அறிந்து வரும்படி செய்தல் நன்று" என்று தெரிவித்தான். அதனைக் கேட்ட அரசன் அதைப்பற்றி நன்கு ஆராய்ந்து அதை அறிந்துகொள்ளுதற்கு வேண்டிய முயற்சியைச் செய்விப்பானாயினன். தான் கேளாதவன் போல அவற்றை எல்லாம் அறிந்துகொண்டிருந்தவனும் செவிடன் வேடம் பூண்டவனுமாகிய (யூகியின் ஒற்றன்) ஒருவன் உடனே வந்து நிகழ்ந்தவற்றை யூகியினிடம் தெரிவித்தான். அப்பால் யூகி தன் மார்பிலுள்ள தழும்பை அயலார் ஒருவரும் தெரிந்துகொள்ளாதபடி கந்தைகளால் மறைத்துக் கொண்டு வழக்கம்போலே வீதியிற் போய்வருவானாயினன்.

இப்படிச் சில தினங்கள் சென்றன. பின்பு ஒரு நாள் யூகி, "இனி உதயணனைச் சிறையினின்றும் விடுவித்தற்கு

---

1 "வலிந்துமேற் சென்ற கலிங்கத் தரசன், குஞ்சர மருப்பிற் குறியிடப் பட்டுச், செஞ்சாந்து மெழுகிய சேடுபடு செல்வத்து, மார்பினது வனப்புந் தோளினது திரட்சியும்" பெருங்கதை, 1·45 : 20-23.

உரியஉபாயம் யாது?" என்று தன்னுள் ஆராய்ந்துபேய்வடிவங் கொண்டு நள்ளிரவில், பிறர் அறியாமல் நகரத்துள்ளே சென்று, குணஞ் சிதைந்து கெட்டு மயங்கித் திரிந்து பிறரை வருத்தும்படி நளகிரிக்கு அகிற்புகையை யூட்டியும் ஒருவகை மருந்தைக் கொடுத்தும் மதவெறியையும் கோபத்தையும் பலத்தையும் உண்டாக்கி அதனருகிற் சென்று, "இந்நகரத்தை அழித்து அரசன் முதலியோர்களுக்குக் கவலை உண்டாகும்படி செய்து உதயணனைச் சிறையினின்றும் நீக்கல் உன்னுடைய கடன்" என்று சொல்லி உச்சாடன மந்திரம் ஒன்றை அதன் செவியில் ஓதினன். ஓதியவுடன் அது மிகுந்த கோபமுற்று மதவெறிகொண்டு கட்டுத்தறியை முறித்துத் தன்னைக் கட்டிய சங்கிலியையும் அறுத்துவிட்டுப் பெரு முழக்கம் செய்துகொண்டு சுழன்று ஓடி ஓடி ஊரை அழிக்கத் தொடங்கிற்று. அது கண்ட யூகி உடனே தானிருந்த ஊரை அடைந்தான்.

பழகிய பாகர்கள் அதனை அடக்குவதற்கு மிக்க முயற்சி பண்ணவும் அந்த யானை அடங்காமல் அவர்கள் எல்லோரையும் கொன்றுவிட்டது. நகரத்தார் யாவரும் நடுங்குவாராயினர்; இச் செய்தியைக் கேள்வியுற்று,

> "நாவாய் கவிழ்த்த நாய்கன் போல
> ஓவா வவலமொடு காவலன் கலங்கி" (2·9: 46-7)

மிக்க கவலையை யடைந்து, அரண்மனையின் சூளிகையில் ஏறி நின்று பார்த்தான். அந்த யானை, மாளிகைகள் பலவற்றையும் கோபுர முதலியவற்றையும் தன் கொம்புகளாற் குத்தி அழித்தலையும், சனங்கள் கொல்லப்படுதலையுங் கண்டான். அதனை அடக்குதற்குப் பல வீரர்களை அனுப்பினன். அந்த யானை ஐந்நூறு வீரர்களைக் கொன்றுவிட்டு மதிற்புறம் போந்து அறுநூற்றைம்பது சேரிகளையும் இரண்டாயிரத் தெண்ணூறு பாடிகளையும் பல உப்பாணங்களையும் அழித்தது. நகரம் நிலை குலைந்தது. அதனல் கவலைக் கடலில் அழுந்திய பிரச்சோதனன், "இத்துன்பத்தை நீக்குவதற்குரிய உபாயம் யாது?" என்று கேட்ட

பொழுது, "இந்த யானையின் கோபத்தை அடக்குதற்குரிய கருவி சிறைச்சாலையில் இருக்கும் உதயணனும் அவன் கையிலுள்ள யாழுமே. ஆதலால், அவனை யாழுடன் இவ்விடம் அனுப்பின் இந்த யானையை அடக்கி விடுவான்" என்று சாலங்காயன் கூறினன். பிரச்சோதனன், "வெல்ல முடியாமல் வஞ்சனையால் மாய யானையைக் காட்டிப் பிடிப்பித்து வருவித்துச் சிறையில் வைத்ததன்றி உதயணனை மதங்கொண்ட யானையின் முன்பும் அனுப்பினேனென்ற பழி நமக்கு வருமே" என்று தன்னுள் எண்ணி, "அது செய்தற்கு என் மனம் துணிந்திலது" என்று மறுத்தான். சாலங்காயன், "இந்திரனுடைய யானையாக இருந்தாலும் அவனுடைய யாழிசைக்கு வசமாகி அடங்கி நடக்குமேயன்றி யாதும் செய்யாது. ஆதலால் அவனை நளகிரியின் முன்பு அனுப்பலாம். இல்லையாயின் இனி என்ன என்ன தீங்கு விளையுமோ!" என்று வற்புறுத்திக் கூற அரசன், "இச் செய்தியை உதயணனிடம் தெரிவித்து நீயே அவனை அழைத்து வருக" என்று சொல்ல, அவன், "வஞ்சனையாற் பிடித்து வந்தேனாதலின், அவனிடம் செல்லுதற்கு அச்சமும் நாணமும் உடையேன்" என்று மறுத்தான். பின்பு சிவேதனென்னும் மந்திரியை அனுப்ப அவன் சென்று உதயணனைக் கண்டு பலபடப் பாராட்டி, "அரசர் கட்டளைப்படி இங்கே வந்தேன். இப்போது இவ்வூருக்கு நளகிரி யென்னும் யானையால் நேர்ந்திருக்கிற பெருந் துன்பத்தை நீக்குதல் உம்முடைய கடமை. சிறையினின்றும் நீக்கி உம்மைக் கௌசாம்பி நகருக்கு அனுப்புதல் நம்முடைய கடமையென்று அவர் தெரிவிக்கச் சொன்னார்; ஆதலால், அருள் செய்ய வேண்டும்; மனத்தில் யாதொன்றையும் வைத்துக்கொள்ள வேண்டாம்" என்று பல முறை வணக்கத்துடன் சொல்லி உடன்படுவித்து மிக்க மரியாதையோடு மெல்ல அழைத்துக்கொண்டு வெளியே வந்து அவனைச் சிவிகையில் ஏற்றுவித்துக் கண்டோர் இன்புறும்படி அழைத்துச் சென்று, பல

பருந்துகளும் கழுகுகளும் மேலே வட்டமிடக் கீழே மிகுந்த கோபாவேசத்தோடு உலாவித் திரியும் அந்த நளகிரியின் முன்பு இறக்குவித்து நிறுத்தினான். உதயணன், மந்திரத்தின் மகிமையால் முதலில் அதனை அசைவறச் செய்துவிட்டு அங்கே நின்று மிகுந்த கருணையுடன் பாடி யாழையும் வாசித்து அருகிற் செல்ல, கேட்ட யானை உடனே சினந் தணிந்து [1]ஆணையாசாற் கடியுறை செய்யும் மாணி போல மிகவும் அடங்கி அவனருகில் வந்து அன்புடன் அவனை வணங்கி அவனுடைய ஏவல் கேட்டு நின்றது. கண்டோர் மிகவும் வியந்தார்கள். உதயணன், வணங்கி நிற்கும் அதன் மருப்பின் மீது அடிவைத்தேறி அதன் பிடரியில் இருந்துகொண்டு செலுத்த, யாதோர் இடையூறுஞ் செய்யாமலே அஃது எல்லா வீதிகளிலும் உலாவியது. உலாவவே, கண்டவர்கள்,

> "மன்னவன் வாழ்க வத்தவன் வாழ்க
> ஒலிகெழு நகரத் துறுபிணி நீக்கிய
> வலிகெழு தடக்கை வயவன் வாழ்கெனப்
> பூத்தூய் வீதிதோ றேத்தின ரெதிர்கொள." (2·9 : 62-5).

பிரச்சோதனன் இதனைக் கேட்டு மகிழ்ந்து தேவிமாரோடும் புலிமுக மாடத்து வந்து உதயணனைக் காணுதற்கு விரும்ப, உதயணன் அதனை யறிந்து யானையைச் செலுத்திக்கொண்டு சென்று அவன் முன்னே நிறுத்தினன். அந் நிகழ்ச்சியைக் கண்ட பிரச்சோதனன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்து உதயணனை நோக்கி, "நீ புண்ணியவான்; தூய்மை யமைந்த குலத்திற் பிறந்தவன்;

---

1. "பிரிந்தநற் புதல்வர் வந்து பெற்றதந் தந்தை பாதம், பரிந்தநற் காதலாலே தாம்பணிந் திடுவ தேபோல், இருந்து தற் பணிந்த யானை யெழின்மருப் படிவைத் தேறிப், பெருந்தகை யேவல் கூறப் பெருங்கையாற் றேட்டி கொண்டான்" (உதயண குமார காவியம், 1 : 91) என இந் நிகழ்ச்சிக்கு வேறு உவமை கூறப்பட்டுள்ளது.

குணக் கடல்; மிக்க பராக்கிரமசாலி; மந்திர நூலில் வலியை; உன் நிலையை யறியாமல் யான் உனக்கு மிக்க தவறு செய்துவிட்டேன்; பொறுத்திடுக" என்று சொல்லி விலை வரம்பில்லாத ஆரமொன்றை அணிந்துகொள்ளும் படி அவன்பால் அனுப்பினன். உதயணன் அதனை ஏற்றுக் கொண்டு அவன் விரும்பியபடி எதிரே வந்தான். பிரச்சோதனன், உதயணனையும், யானை அவனுக்கு அடங்கி அவன் ஏவிய தொழில்களைச் செய்துகொண்டு நிற்றலையும் கண்டு மகிழ்ந்து, "உன்னுடைய அருமைச் செயல்களைக் கண்டு மகிழ்ந்தேன். நீ கற்ற வித்தைகள் யாவை? அவற்றை அறிந்துகொள்ள என் மனம் அவாவுகின்றது" என்று சொல்ல, [1]உதயணன் தான் கற்ற கலைகள் இன்னவையென்று அவற்றை விரித்து விளங்கச் சொல்லியவுடன், "இந்த இளமையில் இவ்வளவு வித்தைகள் இவன்பால் நிறைந்திருப்பதற்குக் காரணம் இவன் பழம் பிறப்பிற் செய்த பெருந் தவமே யாகும்" என்று தன் உள்ளே வியந்து அன்புற்ற பிரச்சோதனன், "இங்கே எம்மால் இயன்ற அளவு உனக்கு வேண்டுவனவற்றைச் செய்யாநிற்போம். கௌசாம்பி நகர்க்கு உன்னை அனுப்பும்பொழுது உன் தம்பியர் வந்து உன்னை வழிபடுவார்களாகுக" என்று சொல்லி மதிப்புப் பெற்ற இராசகுமாரர்கள் சிலரை அவன்புடையே நின்று குற்றேவல் செய்யும்படி நியமித்துவிட்டு மனங்கலந்து பேசிக்கொண்டிருந்தான். இருந்த அவன் பின்னும் உதயணனை நோக்கி, "இந்த யானை தன் நிலைமை திரிந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்ப, உதயணன், அதனைக் கூறுவதற்குத் தலையெடுத்துப் பிரச்சோதனனைப் பார்த்த பொழுது, அவன் பின்னே தாய்மார்களின் இடையே நின்ற வாசவதத்தையைக் கண்டான். காணவே ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கி, மதங்கொண்ட களிறும் பிடி

---

1. கிடைத்த பெருங்கதை யேட்டுப் பிரதியில் இது வரையிலுள்ள கதையின் மூலப் பகுதி யில்லை.

யும் பாகர்களுக்கு அடங்காமல் ஒன்றை யொன்று உற்று நோக்கி, இன்புற்றாற்போல் இன்புற்று வேறொன்றையும் அறியாராகி ஒருவர் உள்ளத்தில் ஒருவர் மாறிப் புகுந்து நின்றனர். அப்பால், இடம் அரசன் முன்னிலை யாதலால், உதயணன் தன் மனத்தை ஒருவாறு தேற்றிக் கொண்டு, நளகிரி தன்மை திரிந்ததற்குரிய காரணத்தைத் தக்க ஆதாரங்களுடன் விளங்க விரித்துக் கூறினன். அப்போது பாகர்களும் சபையில் உள்ளவர்களும் அவன் தேர்ச்சியை அறிந்து கைவிதிர்த்துப் புகழ்ந்தார்கள். அரசன் அயலில் நின்ற பரிசனங்களை அனுப்பிவிட்டுக் கணக்கர் முதலியவர்களை அழைத்துத் தான் எண்ணியவற்றைத் தன் கையிலிருந்த ஏட்டில் வரைந்து அதனை அவர்களுக்குக் காட்டிக் குறிப்பித்து, "இவற்றை யானைச் சேரியிலுள்ள அரண்மனையில் விரை வில் ஆயத்தஞ் செய்துவிட்டு வந்து தெரிவித்திடுக" என்று கட்டளையிட்டனன். அவர்களும் அப்படியே சென்று,

"பன்மணி விளக்கும் பள்ளிக் கட்டிலும்
பொன்னி னடைப்பையும் பூரண கலசமும்
கவரியுங் கடமும் கதிர்முத் தாரமும்
நிகரின் மாண்கல நிதியொடு நிறைந்த
ஆரியச் செப்பும் யவனமஞ் சிகையும்
பொன்செய் பேழையொடு பொறித்தாழ் நீக்கி
நன்கனம் படுத்து நறுமலர் பரப்பி
விரைவிரி யாளர் புரைவுறப் புணர்த்த
பண்டம் புதைத்த வண்டுபடு வளநகர்
மடையரு மகளிரு மல்லரு மமைச்சரும்
கடையருங் கணக்கருங் காப்பரு முளப்பட
இறைவினை திரியாப் பழவினை யாளரை
வழிமுறை மரபிற்றந் தொழின்முறை நிறீஇ
(1·32:72-84)

எல்லாம் நிறைவேறின" என்று பணிந்து விண்ணப்பஞ் செய்தார்கள். அரசன் உதயணனை நோக்கி, "இஃது உன்னு டைய நகர்; யாங்கள் யாவரும் உனக்குரியவர்களே.

எம்முடைய பொருள்களெல்லாம் உன்னுடையனவே. ஆதலால் இனி உன்னுடைய மாளிகை சென்று இளைப் பாறுக" என்று முக மலர்ந்து அனுப்பி அவன் பின்னர்ச் செல்லும்படி ஊர்தியையும் செலுத்திவிட்டுத் தான் அரண்மனையை அடைந்தான். உதயணன், கண்டோர் யாவரும் எழுந்து எழுந்து தன்னைக் கைதொழுது புகழ்ந்து மிகப் பாராட்டும்படி வீதிவழியே சென்று குஞ்சரச் சேரியை அடைந்து நளகிரியினின்றும் இறங்கித் தனக்கு அமைத்திருந்த மாளிகையை அடைந்தான்.

பின்னர் அவன், அம்மாளிகையில் உள்ள பல் வாயில்களையும் கடந்து சென்று அங்கங்கே அமைந்துள்ள,

"அந்தக் கேணியு மெந்திரக் கிணறும்
தண்பூங் காவுந் தலைத்தோன் றருவிய
வெண்சுதைக் குன்றொடு வேண்டுவ பிறவும்
இளையோர்க் கியற்றிய விளையாட் டிடத்த
சித்திரப் பூமி வித்தக நோக்கி" (1·33: 2-7)

வியந்து, "துரியோதனுதியர் பாண்டவர்களை அகப்படுத் தற்குச் செய்த அரக்கு மாளிகையைப்போலப் பிரச் சோதனன் நம்மை அகப்படுத்தற்கு வஞ்சனையாக அமைத்த இடமாகவும் இவ்விடம் இருத்தல் கூடும். இதன் உண்மையை ஆராய்ந்தே தெளிய வேண்டும்" என்று எண்ணி உடனிருக்கும் வேலைக்காரர்களுடன் ஒவ்வோரிடத்தும் சென்று சென்று அம்மாளிகையிலும் அதன் சுற்றுப்புறத்திலுமுள்ள,

முட்டு முடுக்கு மிட்டிடை கழியும்
கரப்பறை வீதியுங் கள்ளப் பூமியும்
மரத்தினு மண்ணினு மதியோர் புணர்க்கும்
எந்திர மருங்கி னிழுக்க மின்மையை (1·33: 16-9)

ஆராய்ந்து ஆராய்ந்து பார்த்துப் பார்த்து அதிற் சிறிதும் தீங்கில்லை யென்றறிந்து தேறி அதன்பாலுள்ள சோலையின் வளத்தைக் கண்டு அங்குள்ள இரட்டைகளான பறவைகளும் மான் முதலிய மிருகங்களும்

தம்முள் ஒன்றை யொன்று அன்புடன் பாராட்டு தலை யறிந்து "மதரரி நெடுங்கண் வேற்கடை கான்ற, புள்ளி வெம்பனி கரந்த கள்விதன், காரிகை யுண்டவென் பேரிசை யாண்மை, செறுநர் முன்னர்ச் சிறுமை யின்றிப் பெறுவேன் கொல்" என்று வாசவதத்தையை நினைந்து நினைந்து காமபரவசனாகிக் கவலையுற்றான். உறுகையில், [1]உலகையெல்லாம் ஆண்ட சக்கரவர்த்தி தன்னிலைமை வேறுபட்டுக் குறைந்தது போலச் சூரியன் அத்தமித்தது. உடுக்கள் விளங்கின;

"முலைப்பாற் காலத்து முடி முறை யெய்திக்
குடைவீற் றிருந்த குழவி போல்" (1·33: 52-3)

பிறை உதித்தது. அப்போது உதயணன் வாசவதத்தை யின் நினைவால் வருந்தி மயங்குவானாயினன்.

புலிமுக மாடத்திலிருந்து தாய்மாருடன் சென்ற வாசவதத்தை தோழிமார்களுடன் கன்னிமாடத்தைச் சார்ந்த பூஞ்சோலையின் ஒரு பக்கத்தை யடைந்து உதயணனை நினைந்து நினைந்து மயங்கி, "அரசிளங் குமரனைச் சுற்றத்தினின்றும் பிரித்து வருவித்துச் சிறைப் படுத்தியதன்றித் தனியனென்று நினையாமல் நளகிரியை அடக்குவதற்கு யாழொடு செல்கவென்றுங் கூறி அவன் அதனை அடக்குஞ் செயலை உற்று நோக்கிக்கொண்டே நின்ற அரசன் கண்கள்தாம் மரத்தால் இயன்றனவோ!" என்று தந்தையை வெறுத்துப் பொறியற்ற பாவை போலச் செயலற்று நிறையழிந்து, "காமனென்னு நாமத்தை மறைத்து வத்தவனென்னும் நற்பெயர் கொண்டு யானையைப் பிணித்ததன்றி என் உள்ளத்தையும் பிணித்த கள்வனை இன்னும் காணவும் பெறுவேனோ" என்று புலம்பி அவன் போலக் காமபரவசையாகி உருவம் வேறுபட்டனள். அவளைப் பிரிந்து தனித்தனியே

---

1. பிரச்சோதனனுடைய பெருமையின் குறைவு இங்கே கூறிய சூரியாஸ்தமய வருணனையாற் குறிப்பிக்கப்படுகின்றது.

பூக்கொய்தல் முதலியவற்றிற்கு வேறு வேறிடங்களுக்குச் சென்ற தோழிமார்களெல்லோரும் வந்து அவளுடைய வேறுபாட்டை யறிந்து, "தத்தையே! இந்த நிலைமை உனக்கு வந்ததற்குக் காரணம் என்ன?" என்று வினவி வினவி ஒன்றும் அறியாதவர்களாகி அவளை மெல்ல அழைத்துச் சென்று மலரணையிற் படுக்கச் செய்தனர். அவள் அதிற் கிடந்து இமை பொருந்தாளாய் மிகத் துன்புற்றனள்.

இங்ஙனம் இருவர் நெஞ்சமும் அந்த இராமுற்றும் இப்படியே நிலை குலைந்து வருந்தின; அப்போது [1]"எல்லாம், விடிந்தது விடிந்ததென்ன விடிந்தது கங்குற்காலம்."

உதயணனையே நினைந்துகொண் டிருந்த பிரச்சோதனன் துயிலுணர்ந் தெழுந்து, கண்களுக்கு மையெழுதிப் பசுவைத் தரிசித்துக் காலைக்கடனை முடித்துக்கொண்டு மகளைத் துறந்த மாசறு படிவத்தையுடைய துறவிகளை வணங்கிப் பெரியோர் மந்திரித்து அளித்த தீர்த்தத்தை உட்கொண்டு பேரத்தாணியில் மாலை தொடர்ந்த மங்கலப் பந்தரின் கீழே விரிநூலந்தணர் இருக்கும் வெண்மணை சூழ்ந்த ஆசனத்தே இருந்து கேட்க வேண்டிய தருமங்களையும் பிறவற்றையும் அறிஞர்பால் கேட்டான். கேட்டபின், அங்கே வந்தவர்களை அனுப்பிவிட்டு அரண்மனை சென்று உதயணனோடு தனியே பேச விரும்பி, அவனை விரைந்து அழைத்து வருகவென்று உழையர்களை அனுப்பினான். அவர்கள் ஓடிச் சென்று தெரிவிக்கவே உதயணன், 'இழையணி இரும்பிடி யெருத்தமேறிக் கடையணி யாவணம் கைதொழுப்படி' வந்து அரண்மனை வாயிலில் நிற்க, அதனை யறிந்த அரசன், தருமணல் முற்றத்துத் தான் எதிர்சென்று மிக்க உபசாரத்துடன் அழைத்துக்கொண்டு உள்ளே சென்று மணியம்பல மொன்றில் இரட்டைத்

---

1. திருக்குற்றலப்புராணம், 12, 72.

தவிசில் அவனை முதலில் இருக்கச்செய்து தானும் அதில் உடனிருந்து, "இஃது உன்னுடைய இடமென்று இனி நான் சொல்லுவது மிகை". என்பது போன்ற உபசார வார்த்தைகள் பலவற்றைச் சொல்லி, முகவாச முதலிய வற்றை யளித்து, "இனி உரிமை பூண்டு எண்ணியவாறு நீ நடப்பாயாக" என்று சொல்லி அவனை அங்கே இருக்கச் செய்துவிட்டு, "உதயணனை எந்த வகையாலாவது சில காலம் இவ்விடத்திலேயே இருக்கும்படி செய்ய வேண்டும்" என்கிற எண்ணத்தோடு, தான் அரண்மனைக் குள்ளே சென்று சிவேதனை வருவித்து அவனை நோக்கி, "நீ உதயணனிடஞ் சென்று, 'இராசகுமாரர்க்கு ஆயுத வித்தை முதலிய பலவகைக் கலைகளையும் வாசவதத்தைக்கு வீணையையும் பயிற்றுவிக்க வேண்டும்; இஃது எம்மு டைய குறை' என்று யாம் விரும்புவதாகச் சொல்லி எப்படியேனும் அவனை உடன்படுவித்து வருக" என்று சொல்ல அவனும் அப்படியே சென்று அரசன் சொல்லிய வற்றை உதயணனுக்கு மிக்க வணக்கத்துடன் தெரிவித்த னன். அப்பொழுது உதயணன் நெடுநேரம் யோசித்து, "அரசன் கூறியவண்ணம் இத் தொழிலைச் செய்தல் நமக் குச் சிறுமையென்று நாணினால், விரும்பிய கன்னியைப் பெறுதற்கு வேறு வழியில்லாமையின் யாம் பிழைத் தற்கு இடமில்லை; அங்ஙனம் கற்பிக்குமிடத்துப் புலிமுக மாடத்தில் அன்று கண்ட கன்னியாரை யாம் காணுதல் கூடும்; காணின் நாம் உய்தற்கு வழி உளதாம்; நமக்கு

> 'உயிர்கெட வருவழி யொழுக்கங் கொள்ளார்
> செயிரறு கேள்வி தேர்ந்துணர்ந் தோர்' (1·34: 88-9);

என்ன சிறுமை வரினும் இனி அரசன் கூறுவனவற்றைச் செய்வதே நன்று" என்று தெளிந்து, "விரும்பிய வண் ணம் செய்வேனென்பதைச் சொல்லுமின்" என்று சொல்ல, சிவேதன் சென்று அரசனுக்கு உதயணன் உடன்பட்டதைத் தெரிவித்தனன். அப்பால் அரசன் தன் தேவியர் பலர் பெற்ற மகளிருள் பெதும்பைப் பரு

வத்து மகளிர்கள் யாவரும் வருவார்களாக என்று சொல்லி விடுப்ப, செவிலித் தாயார் முதலியோர்,

"பளிக்கறைப் பூமியும் பந்தெறி களத்தும்
மணிக்கயிற் றூசன் மறலிய விடத்தும்
கொய்ம்மலர்க் காவும் பொய்கைக் கரையும்
அந்தக் கேணியும் வந்துபெயர் கூவி (1.34: 115-18)

முத்தினரும், உத்தியரும், மும்மணிக் காசினரும், கச்சினரும், கண்ணியரும், வெள்வளையினரும், சில்கலத் தியன்ற அணியினரல்லது பல்கலஞ் சேரா மெல்லென் யாக்கையருமாகிய அவர்களை அழைத்துக்கொண்டு வர, அவர்கள் பால்பரந்தன்ன பஞ்சு மெல்லணையிற் சேக்கை மெலியச் செம்மாந்திருந்த முடிகெழு தந்தை முன்னர்த் தோன்றி வணங்கி நின்றனர். நின்றவர்களை யெல்லாம் அரசன் முறையே நோக்கி அவர்களுள்ளே,

"ஒண்மையு நிறையும் ஓங்கிய வொளியும்
பெண்மையும் பெருமையும் பிறவு முடைமையிற்
பாசிழை யாயத்துப் பையென நின்ற
வாசவ தத்தை வல்ல ளாகென" (1·34: 151-4)

எண்ணி, பந்தும், கிளியும், பசும்பொற் றூதையும், கந்தியன் மயிலும், கரந்துறை பூவையும், கழங்கும், கச்சும், முற்றிலும் பவழப் பாவையும், பளிக்குக் கிளிக்கூடு மாகிய இவற்றில் விரும்பியவற்றை அவர்களுக்கு அளித்து, "நீங்கள் இது வரையிற் கற்ற,

அடிசில் வினையும் யாழின் றுறையும்
கடிமலர்ச் சிப்பமுங் கார்துறை கணக்கும்
வட்டிகை வரைப்பும் வாக்கின் விகற்பமும்
கற்றவை யெல்லாங் காட்டுமி னெமக்கு" (1·34:166-9)

என உரைத்து ஒருவகையாக மகிழ்வித்து அவர்களை யெல்லாம் அனுப்பிவிட்டு, அயலில் நின்றவர்களை நோக்கி, "இனி வாசவதத்தை உதயணகுமரன்பால் யாழ் கற்றுக் கொள்ளத் தொடங்குவாள்; அதற்கு வேண்டியவற்றை விரைவில் அமைமின்" என்றனன். அதனைக் கேட்ட முதற்

பெருந்தேவி தன் மகளுக்கு இப்பயிற்சி மிக்க மாட்சிமையைத் தருதற்குரியது என்று தன்னுள் மகிழ்ந்தாள். மற்றத் தேவியர் மிகப் புகழ்ந்தார்கள். சக்கரவர்த்தியின் மகளுக்கு யாழ் கற்பித்தற்குரிய ஆசானாக வருபவன் பெரும் புண்ணியமுடையோன் என்று அடியவரும் ஆயத்தாரும் வியந்தார்கள். வத்தவர்பெருமானுக்குரிய வீணை விச்சை தத்தைக்கே உரியதென்று முற்றத்தே நின்றவர்கள் தம்முள் மெல்லப் பேசிக்கொண்டார்கள்.

அப்பொழுது செவிலியர்கள் பூக்கள் முதலியவை வைக்கப்பட்டுள்ள பொன் அகல்களை அங்கே அலங்காரமாக வைத்து இசைக்குரிய தெய்வங்களை அழைத்துத் துதித்து வாசவதத்தையைச் சந்தன நறுநீரால் ஆட்டி அலங்கரிப்பாராய் யானைத்தந்தத்தாற் செய்த மங்கலச் சீப்பாற் கூந்தலை வாரிப் பொன்னூற் கட்டி முடித்துப் பொற் சின்னங்களை அதன்மேலே சிதறி, நெற்றியிற் சுட்டியையும் முத்தணிகலன்களையுஞ் சேர்த்தி, முன்னமிருந்த ஓலையையும் குழையையும் நீக்கிக் காதுகளிற் கடிப்பிணைகளையணிந்து, சந்தனக் குழம்பால் தோள்களில் பூங்கொடி ஒன்றை எழுதி, மார்பில் முத்தவள்ளியையும் மும்மணியையும் பொற்றேரையையும் பூட்டி, இடையிற் கட்டியமட்டஞ் செய்த பட்டுடைமீது மேகலையைச் சேர்த்தி, பின்னும் அணிய வேண்டிய மெல்லிய ஆபரணங்களையணிந்து, நடைப்பெருந்தவிசின்மீது அவளை மெல்ல நடத்தி வருவாராயினர். அப்போது மிகவும் அழகிய நான்கு ஆலவட்டங்கள் பக்கத்தே கன்னியர்களால் அசைக்கப்பட்டன. அவள் தன் தாய்மாரோடு மெல்லென வந்து பொற்றகடு பொதிந்த சுவர்களை யுடையதும் யானைக்கொம்பாலாகிய தூண்களை யுடையதும் மேற்கட்டி கட்டியதுமாகிய கீதசாலையின் வேதியின்மீது செவ்வரக்கு வழித்த பூமியின் மேலே சுற்றத்தோடு புகுந்து மெல்லிய பலவகையான மலர் பரப்பிய தனியிடம் ஒன்றில் திரை மறையில் நின்றனள். அப்போது தாய்மார்கள், "யாழைப் பூசித்தற்கும் அதனைக் கற்பிக்கத் தொடங்குவதற்கும் உரிய நல்ல

வேளை வந்துவிட்டது. இதனை உதயணனுக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்று சொன்னார்கள். உடனே சில மகளிர் ஓடிச் சென்று தெரிவிக்கவே அவன் வந்து அங்கே அமைக்கப்பட்டுள்ள மெல்லிய ஆசனத்தின்மேல் வீற்றிருந்தனன். வாசவதத்தையை அழைத்து வந்து மேற்கூறிய திரைமறைவிலேயே வேறொரு தவிசில் இருக்கச் செய்தனர். அப்போது "யாழ் கற்றுக்கொள்ள இங்கே வந்திருப்பாள் என் மனத்தை முன்பு கவர்ந்த பெண்மணியோ, இல்லளோ?" என்று உதயணன் எண்ணிக்கொண்டிருந்தான். "நமக்கு யாழைக் கற்பித்தற்கு இங்கே வந்திருப்பவன் அன்று நளகிரியை அடக்கி அதனை ஊர்ந்து வந்து புலிமுக மாடத்தின் எதிரே நின்று நம் மனத்தைக் கவர்ந்து சென்ற ஆடவர் சிங்கமோ, வேறு யாரோ?" என்று வாசவதத்தையும் எண்ணிக்கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் தோழிமார், "ஆசிரியனுக்குச் செய்ய வேண்டிய வழிபாடு இதுவாகும்'' என்று சொல்லி, வாசவதத்தையின் கையைக் குவிக்கச் செய்து திரையைத் திறந்தனர். திறந்தபொழுது, ஒருவரை ஒருவர் கண்டு இருவரும் களித்து ஐயம் நீங்கி இன்புற்றனர்;[1] "செம்புலப் பெய்ந்நீர் போல அன்புடை நெஞ்சந் தாம்கலந்தன"[2] "பிரிந்தவர் கூடினாற் பேசவும் வேண்டுமோ?" அப்பால், தாய்மாரும் கைக்கோற் சிலதரும் கன்னியரும் புறத்தே பாதுகாத்து நின்றனர். அப்போது அவன் யாழை அளித்துக் கற்பியாநிற்க, அவள் அதனை ஏந்திக் கற்பாளாயினள்.

இங்ஙனம் அவன் நாடோறும் வந்து வாசவதத்தைக்கு யாழைப் பயிற்றுவிக்கையில் அந்நகரத்துள்ள வம்பமாக்களில் ஒரு சாரார், "பகைவர் குறுக வொண்ணாத அந்தப்புரத்தி லிருத்தற்குரிய தன்மகள் ஒருத்திக்கு யாழ் கற்பிக்கும்படி அயலானாகிய அரசிளங் குமரன் ஒருவனை ஆராயாமல் தெளிந்து ஆசானாக நியமித்த நம் பேதை மன்

1 குறுந்தொகை, 40   கம்பராமாயணம், மிதிலை. 37.

கண்ணினு முள்ளே......
குறிப்பி னெச்ச நெறிப்பட நாடித்
தேன்றோய்த் தன்ன கிளவியிற் றெளிபடத்
தான்றெரிந் துணருந் தன்மை யறிவினள்
உறுப்புப்பல வுறுப்பினு முயிர்முத றருக்கினும்
நிறுத்துப்பல வூசி நெருங்க வூன்றினும்
கறுத்துப்பல கடியக் காட்டினுங் காட்டாது
சிறப்புபல செயினுந் திரிந்துபிறி துரையாள்;
பிறைப்பூ ணகலத்துப் பெருமக னவன்மாட்டுக்
குறித்தது கூறுதல் செல்லாக் கொள்கையள்;
இன்னது செய்கென வேவ லின்றியும்
மன்னிய கோமான் மனத்ததை யுணர்ந்து
முன்னியது முடிக்கு முயற்சிய ளொன்றோ
சிறந்தன பின்னுஞ் செயினு மறியினும்
புறஞ்சொ லாற்றாது புகழுந் தன்மையள்;
புல்லோர் வாய்மொழி யொரீஇ நல்லோர்
துணிந்த நூற்பொருள் செவியுளங் கொளீஇப்
பணிந்த தீஞ்சொற் பதுமை யென்னுங்
கட்டுரை மகளொடு" (4.10: 13 - 35)

மேம்பாடுற்ற காரியக்காரரும் கணக்கரும் திணைகளும் காவலாளருமாகிய இவர்கள், ஐம்பது யவன வையம் முதலிய பொருள்கள் பலவற்றைக் கொணர்ந்து வைத்து ஆயிரம் தோழிமார்களையும் *மேற்கூறிய நருமதை முதலிய நாடக மகளிர்களையும் பிறரையும் உள்ளே அழைத்து வந்து நிறுத்தி உதயணனுக்குக் காட்டி, "இவற்றையும் இவர்களையும் உம்மிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்பது எங்கள் அரசனது கட்டளை" என்று தெரிவித்த பொழுது பதுமையென்னுங் கட்டுரைமகள் வணங்கி, அருகில் சென்று பிரச்சோதனன் கொடுத்த திருமுகத்தை வணக்கத்துடன் உதயணன்முன்பு நீட்டினள். உடனே அவன் ஆசனத்தினின்றும் இறங்கி மிகுந்த வணக்கத்துடன் கைகளால் ஏற்று அதனைப் படித்துப் பார்த்தனன்.

---

* 26-ஆம் பக்கம் முதலியவற்றைப் பார்க்க.

அதில், "பிரச்சோதனனென்னும் அரசனுடைய ஓலையை உதயணன் காண்க; தன்னுடைய உறவைக் கொள்ள விரும்பிய யான் போர்செய்து தன்னை வெல்லுதல் அருமை என்று நினைத்து மாய யானையைக் காட்டித் தன்னைப் பிடித்து வரும்படி முன்னம் என்னுடைய மந்திரி முதலியோரை அனுப்பினேன். இப்பொழுது அந்த நினைவை விட்டுவிட்டேன்; தன்னுடைய தந்தையாகவே என்னைக் கொள்ள விரும்பினேன்; யானும் பட்டத்தேவியும் உவக்கும்படி வாசவதத்தையோடு தான் இங்கே வந்து மகிழ்ச்சியை விளைவித்திடுக. பாஞ்சாலனை வென்று தான் கொற்றங்கொண்டதைக் கேள்வியுற்றேன். யான் செய்ய வேண்டுவதைத் தான் செய்தனன். தன்னுடைய குடை நிழலில் தங்கி உலகு இன்புறும்படி குழவி கொள்பவரின் இகழாது ஓம்பிப் புகழ்பட வாழ்க. யூகியை விரைவில் இவ்விடத்திற்கு அனுப்புக. அவனைப் பார்க்க வேண்டும் என்னும் விருப்பம் எனக்கு மிகுதியாக உண்டு. இதில் எழுதியவற்றை யெல்லாம் யான் விருப்பத்தோடு எழுதினேனென்று எண்ணிக்கொள்க" என்பது எழுதப் பட்டிருந்தது.

உதயணன் எல்லாவற்றையும் பார்த்து அவற்றை மனத்தில் அடக்கிக்கொண்டு பதுமையை நோக்கி, "வாசவதத்தை தீயிற்பட்டது பொய்ச்செய்தி ஆயினும் அச் செய்தியை இவ் வோலையில் ஏன் எழுதவில்லை?" என்று கேட்கவே அவள் கைகுவித்து, "எங்கள் சக்கரவர்த்தி இச் செய்தியைக் கேள்வியுற்று மிக வாட்டமடைந்து அறிவில் சிறந்த ஒரு முனிவர்பால் சென்று ஒன்றும் சொல்லாமல் முகவாட்டத்தோடும் அவர் முன்னே நின்றார். உடனே அவர், உம்முடைய மந்திரிகளோடு ஆராய்ந்து தெளிந்தவர்போல, 'வாசவதத்தை மறைந்திருக்கும் நாட்கள் இத்துணை; அவள் உம்மை அடையுங் காலம் இன்னது' என்று தொடுத்த மாலையை எடுத்தது போலச் சொல்லியதன்றி இன்றுவரையில் நிகழும் நிகழ்ச்சிகளையெல்லாம் விளங்கக் கூறினர். அம்

முனிவர் அன்புடையவராதலின் அதனை அரசன் தெளிந்து அடங்கினன். அரசர் தலைவ, யான் சொல்லியவை ஒத்துள்ளனவா" என்று கூறினள். அதற்குள் உதயணன், "எல்லாம் சரியாகவே இருக்கின்றன" என்று சொல்லி அம் முனிவரைப் புகழ்ந்து இனிய தோழர்களோடு சென்று அங்கே வைக்கப்பட்டுள்ளனவாகிய பல பொருள்களையும் பார்த்து மகிழ்ந்து வந்தவர்களுக்கு இனிய வார்த்தைகளைக் கூறி அச் செய்திகளை எல்லாம் வாசவதத்தைக்கு அவர்களைக் கொண்டு சொல்லும்படி செய்வித்து அவர்களுக்குத் தனி இடங்களை வேறே அமைப்பித்து உபசரித்து வேண்டியவற்றை அளித்தனன். யூகியை நோக்கி, "நீ பிரச்சோதனனிடம் சென்று இங்கே நிகழ்ந்தவற்றையெல்லாம் சொல்லி உன்னுடைய நீதி நூல் பயிற்சியையும் நன்கு விளக்கித் தாமதியாமல் விரைவில் வருக" என்று சொற்றனன்.

அங்ஙனம் சொன்னபின்பு உதயணன், "தம்முடைய நாட்டிற்கும் எங்கள் நாட்டிற்கும் இடையே உள்ள காடுகெழு குறும்பும் கனமலைவட்டமும் நான் இங்கில்லாத பொழுது எல்லையற்றுப் பிறர்வசமாகி அழிந்துபோயின. அவை எங்கள் ஆட்சிக்கு உட்பட்டாலன்றி எம்மவர் புகுதற்கு இடங்கொடா" என்று மிக்க வணக்கத்துடன் எழுதிய ஓலை ஒன்றைப் பிரச்சோதனனுக்குத் தூதர்வசம் அனுப்பியதன்றி, 'எந்தக் காலத்தும் இருகுலத்தவரும் இனிப்பணம் ஒத்தே நடக்கும்படி செய்வித்திடுக' என்பதையும் தெரிவிக்குமாறு சொல்லியனுப்பினன். பிரச்சோதனனுக்குக் கொடுக்கும்படி பல பொன்னணிகளையும், இலக்கணத்தில் சிறந்த நாலாயிரங் குதிரைகளையும், ஐந்நூறு தேர்களையும், நூறு யானைகளையும், பதினாறாயிரம் பசுக்களையும், வாசவதத்தையின் நற்றாய்க்குப் பணிபுரியும்படி பாஞ்சாலனுடைய உரிமைப் பள்ளியினின்றுங் கொணர்ந்த பல மகளிரையும் அனுப்பினன். அப்படியே கோபாலகன் நற்றாய், கோபாலகன், பாலகுமரன், பரதகன், சிவேதன் என்பவர்களுக்குக் கொடுக்கும்படி தக்க பொருள்கள் பல

வற்றை வகை வகையாக அனுப்பி மிகவும் அழகிதாகிய வையாக்கிரம் என்னும் தேரை யூகிக்கு அளித்து, விண்ணுத்தராயன் என்பவனை மெய்காவலனாக அவனுடன் செல்லும்படி கட்டளையிட்டு நல்ல தினத்தில் எல்லோரையும் பிரச்சோதனன்பால் விடுத்தனன். விடுத்தபின் இரண்டு தேவியர்களும் தனக்கு வழிபாடு செய்ய அவர்களோடு பல இடங்களுக்குச் சென்று உண்டாடி மிகவும் மகிழ்ச்சியுற்றிருந்தனன்.

பின்பு உதயணன், பாஞ்சால ராசனுடைய உரிமைப் பள்ளியினின்றும் பற்றிக்கொண்டு வந்த அரங்கியன்மகளிர் ஆயிரத்தெண்மர்களைப் பங்கிட்டு இரண்டு தேவியர்களுக்கும் அளித்தனன். அளித்தபின் தேவியர் இருவரும், அரசன் புறத்தே சென்று உலாவிவரும் சமயம் பார்த்து முற்ற வெளியின்கண் பந்தடித்தற்கு எண்ணி நின்றார்கள். அச்செய்தியை அறிந்த வயந்தகன், "தேவியர் இருவரும் தோழியருடன் பந்தாடுதற்கு நிச்சயித்திருக்கின்றார்கள்; அது காணத்தக்கது; ஆதலால் நீ புறத்தே செல்லாமல் பெண் வடிவங்கொண்டு பிடியின்மீது ஏறி அவர்கள் அறிந்துகொள்ளாதபடி பார்த்தருள வேண்டும்" என்று தெரிவித்தனன். உதயணன் அதற்கு உடன்பட்டுத் தான் புறத்தே செல்வதாகப் பிறர் நினைக்கும்படி செய்து சேனைகளைமட்டும் வெளியே அனுப்பிவிட்டுத் தான் ஒரு பெண் வடிவங்கொண்டு வந்து பல மகளிர்களினிடையே பெண் யானை ஒன்றன் மேல் இருந்து காண்பானாயினன்.

அங்கே தேவியர் இருவரும் தத்தம் தோழிமார்களுடன் அந்த முற்ற வெளியில் ஒருவர்க்கொருவர் எதிரெதிர் நின்றார்கள். அப்பொழுது பதுமையின் தோழியாகிய இராசனை என்பவள் ஏழு பந்தை எடுத்து ஆயிரங்கை அடித்துவிட்டுச் சென்றனள். அப்பால், காஞ்சனமாலை பந்துகளைக் கைக்கொண்டு, ஆயிரத்தைந் நூறுகை அடித்துவிட்டுச் சென்றாள். பின்னர், பதுமையின் மற்றொரு தோழியாகிய ஐராபதி என்னும் கூனி

ஈராயிரம் கை அடித்துச் சென்றாள். வாசவதத்தையின் தோழியாகிய விச்சுவலேகை என்னும் குறளி அடித்தற்குரிய கோலைக் கைக்கொண்டு பந்துகளை எடுத்து ஈராயிரத்தைந்நூறுகை அடித்துவிட்டுச் சென்றனள். பதுமையின் உயிர்த்தோழியாகிய ஆரியை என்பவள் அதிவிசித்திரமாக மூவாயிரங்கை அடித்துப் பந்தைப் போகட்டுவிட்டுச் சென்றாள். அப்பால் பந்துகள் அடித்தற்கு யாராலும் எடுக்கப்படாமல் கிடந்தன.

அப்பொழுது வாசவதத்தை தலை சாய்த்து, "அடித்தற்குரியார் யாவர்?" என்று கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டு சிறிது மனவருத்தத்துடன் நின்றாள். அக்குறிப்பறிந்து, அவளிடம் பணி புரிந்துகொண் டிருப்பவளும் பேரழகியும் மானனீகை என்னும் பெயர் உடையவளுமான மங்கை ஒருத்தி வந்து அங்கே நின்று, தனக்கு முன்பு ஆடியவர்களுடைய ஆட்டத்தை இகழ்ந்துகூறிச் சிரித்துப் பந்தாட்டத்தின் இலக்கணங்கள் பலவற்றை அங்கே நின்ற யாவரும் அறியும்படி சொல்லிவிட்டு ஆடத் தொடங்கி இருபத்தொரு பந்துகளை எடுத்துப் பிறர் வியக்குமாறு ஆடினள். ஆடுகையில்,

"சுழன்றன தாமம்; குழன்றது கூந்தல்;
அழன்றது மேனி; அவிழ்ந்தது மேகலை;
எழுந்தது குறுவியர்; இழிந்தது சாந்தம்;
ஓடின தடங்கண்; கூடின புருவம்;
அங்கையி னேற்றும் புறங்கையி னோட்டியும்
தங்குற வளைத்துத் தான்புரிந் தடித்தும்
இடையிடை யிருகா றெறிதர மடித்தும்
..........................................
நித்திலக் குறுவியர் பத்தியிற் றுடைத்தும்
பற்றிய கீதகஞ் சுற்றுமுறை யுரைத்தும்
தொடையுங் கண்ணியு முறைமுறை யியற்றியும்
அடிமுதன் முடிவரை யிழைபல திருத்தியும்
படிந்தவண் டெழுப்பியுங் கிடந்தபந் தெண்ணியும்
தேமலர்த் தொடைய பிறந்திறப் பிணைத்தும்
பந்தவ ரேக்கியும் பாணிவர கொடித்துஞ்

சிம்புளித் தடித்துங் கம்பிதம் பாடியும்
ஆழியென வுருட்டியும் தோழியொடு பேசியும்
சாரிபல வோட்டியும் வாழியென வாழ்த்தியும்
அந்தளிர்க் கண்ணி யவந்திகை வெல்கெனப்
பைந்தொடி மாதர் பற்பல வகையால்
எண்ணு யிரங்கை யேற்றின ளேற்றலும்"
(4·12: 225-45)

வாசவதத்தை மிக வியந்து, "அரசன் இவளைக் காணின் அவனது மனம் வேறுபடும்" என்று எண்ணி நின்றனள்.

நிற்கையில், மானனீகையின் சிறந்த தோற்றத்தைக் கண்டு மயங்கி அவளை அடைந்த தன் மனத்தை ஒருவாறு மீட்பதற்கும் சிறிதும் ஆற்றல் இல்லாதவனாகி உதயணன் உரிய வடிவத்தோடு அங்கே தோன்றினன். அவனைக் கண்ட தேவியர் இருவரும் தோழிமார்களோடு தம்மிடஞ் சென்றனர்.

அவர்கள் அங்ஙனம் செல்ல, காம மிகுதியால் நொந்து தளர்ந்த உதயணன் பள்ளியம்பலத்துள்ளே தான் இருந்து தேவியர் இருவரையும் அழைத்துவரும்படி சொல்லிவிடுத்தனன். தோழியர்கள் சென்று சொன்னவுடன் அவ்விருவரும், அரசன் அழைத்ததற்குக் காரணம் இன்னதென்பதை அறியாதவர்களாகி ஐயமுற்று மானனீகையைமட்டும் ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட்டு மற்றத தோழிமார்களுடன் சென்று அவர்களைப் புறத்தே நிறுத்தித் தாம்மட்டும் அரசனிடம் போய் வணங்கினர். வணங்கவே உதயணன், "இவர்களுடைய தோழியர்களையும் இங்கே வரவிடுக" என்றனன். அவர்களும் வந்து வணங்கி நின்றபொழுது, அவர்களையெல்லாம் முறையே நோக்கி, "உங்களுடைய சுற்றத்தாரையும் உங்கள் பெயரையும் சொல்லுக" என்றனன். அவர்கள் அவற்றைச் சொன்னபோது, உதயணன் பாராதவன்போலவே அவர்களை முறையே பார்த்து வாசவதத்தையை நோக்கி, "உன்னுடைய தோழிமார்களுள் ஒருத்திமட்டும் இங்கே வாராமைக்குக் காரணம் என்ன?" என்று வினவ, வாசவதத்தை,

"அவளுக்குச் சொல்ல வேண்டியது ஏதேனும் இருப்பின், அதனைத் தனியே பார்த்துக்கொள்க; இக் கூட்டத்தில் ஆக வேண்டுவது யாது?" என்று சொல்லி மிக்க கோபங் கொண்டனள் அவளுடைய கண்கள் மிகச் சிவந்தன. அவளது சீற்றத்தைக் கண் சிவப்பால் அறிந்த அரசன், "பாஞ்சாலராசன் பெற்ற செல்வத்தையும் அவனுக்குள்ள பிறவற்றையும் அவள் நன்கு அறிவாளென்று மந்திரி களால் அறிந்துள்ளேன். அவற்றைத் தெரிந்துகொள்ளுதற்பொருட்டே அவளைக்குறித்து இப்பொழுது யான் வினவினேன்; காரணம் வேறே லொன்றும் இல்லை" என்றனன்.

அப்பால், வாசவதத்தை மானனீகையை அங்கே வருவித்தனள். அவள் வந்து அடிவணங்கினள். உதயணன் அவளை நோக்கி, "பாஞ்சால ராசனுக்குரிய பல பணிகளிலும் அவனுடைய அந்தப்புரத்தார்க்கு அலங்காரஞ் செய்தலிலும் நீ வல்லாயென்று சொல்லக் கேட்டுளேன். உன் பெயரையும் உன் சுற்றத்தார் பெயர்களையும் சொல்" என்று கேட்க, அவள் மீட்டும் வணங்கி அஞ்சலிசெய்து கொண்டு அரசனை நோக்கி, "அடியேன் கோசல தேசத்து அரசனுடைய பெருந்தேவியாகிய வசுந்தரி என்பவளுடைய சேடியாவேன். என் பெயர் மானனீகை. பாஞ்சால ராசன் படையெடுத்து வந்து எம் அரசனுடைய படைகளை வென்று அவனுடைய அந்தப்புரத்திலிருந்த சேடியரோடு என்னையும் பற்றிக்கொண்டு சென்று தன் தேவிக்கு அளித்தனன். அப்போது, அடிச்சி அத்தேவிக்கு வண்ணமகளாக இருந்தேன். இது ஒன்றன்றித் தேவரீர் அருளிச்செய்த வேறொரு சொல்லையும் அறியேன்" என்று சொல்லி அழுதுகொண்டு நின்றாள். நிற்கவே உதயணன் அவளை நோக்கி, "நீ வாசவதத்தைக்கு இன்றுமுதல் வண்ணமகளாக இருந்து அவளை நாள் தோறும் அலங்கரிப்பாயாக" என்று கட்டளையிட அவள் அப்படியே சென்று, கண்டோர் வியக்கும்படி அடிமுதல் முடியளவாக அவளைப் புனைந்தனள். பின்பு வாசவதத்தை

வந்து உதயணனுக்கு அவ்வணியைக் காட்டினள். அப்போது உதயணன், "மானனீகை அலங்காரம் செய்வதில் வல்லுநள் அல்லள்; யான் அலங்கரிக்கின்றேன்; பார்" என்று அவள் செய்த அலங்காரத்தைச் சிதைத்துவிட்டு யவன பாஷைக்குரிய எழுத்துக்களை மானனீகை நன்கு கற்றவள் என்பதை முன்பு கேட்டிருந்தவனாதலின், பூந்தாதினையும் சந்தனக் குழம்பையும் கூட்டி வாசவதத்தையின் நெற்றியில், "உதயணன் ஓலையை மானனீகை காண்க; நீ ஆடிய பந்தாட்டத்தில் உன்னுடைய கண்கள் என் நெஞ்சத்தைப் பிளக்க அதனால் புண்ணுற்றேன். அப் புண்ணைத் தீர்க்கும் மருந்தினை நீ அறிவாய். என்னுடைய துயரம் ஆற்றுதற்கு அரியது. இரப்போர்க்கு அவர் விரும்பியதை அளித்தல் நன்று. இங்கே எழுதுவதற்கு இடம் இன்மையின் நான் சுருக்கமாக எழுதினேன். நீ என் கருத்தை நன்றாக அறிந்துகொள்ள வேண்டும்" என்று எழுதிவிட்டு வாசவதத்தையை நோக்கி, "உனக்கு யான் செய்த அலங்காரம் இப்பொழுது ஒத்திருக்கின்றது" என்று சொல்லி அவளை அனுப்பினன். உடனே வாசவதத்தை தன்னுடைய அந்தப்புரத்தை அடைந்து அங்கே வந்த மானனீகைக்கு, "இந்த அலங்காரத்தை நீ பார்" என்று காட்டினள். அவள் அதனைப் படித்தறிந்து கூசி, "அரசர் செய்துள்ள அலங்காரம் மிகவும் அழகுடையது" என்று வாசவதத்தையை மருட்டினள். அந்நாள் நீங்கியது.

மறுநாள் காலையில் வழக்கம்போலவே வாசவதத்தையை மானனீகை அலங்கரித்துவிட்டு அவன் எழுதிய பாஷையாலேயே அவனுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்க நினைந்து, "அடியேனைப் பொருளாக எண்ணித் தேவரீர் எழுதிய திருமுகம் முழுவதையும் தவறின்றி அறிந்தேன். அடியேனிடத்து அருள் இருந்தாலும் அதனை இப்பொழுது தவிர்த்தல் வேண்டும். தேவியர்க்கு மிக்க வருத்தத்தை உண்டுபண்ணும் செயலைச் செய்தற்கு என் மனம் துணிந்திலது. காவலில் இருக்கும் அடியேன்

பிறர் காணார் என்று தகாததைச் செய்தல் இயல்பன்று; செய்தால் பழிப்பு உண்டாகும். தருமமும் நீங்கும். சிறிய என்னிடத்தே வைத்த விருப்பத்தை மறப்பது நன்று" என்று அவளுடைய நெற்றியில் எழுதி, "என்னால் செய்யக் கூடிய அலங்காரம் இதுவே" என்று சொல்லி அனுப்பினள்.

வாசவதத்தை சென்று அரசனை வணங்கினள். வணங்கவே அவன் மானனீகை எழுதியதைக் கண்டு அவளுடைய கருத்தை அறிந்து அழலால் உண்டாகிய புண்ணின் மேல் கோலிட்டாற்போலக் கலங்கி அவ்வணியை அழித்து, "உன்னை நான் விரைவில் அடையேனாயின் என் உயிரைச் சென்றதாகவே எண்ணிக்கொள்க" என்று அவள் நெற்றியில் எழுதி, "இந்தப் புதியதோர் அலங்காரத்தை அவளுக்குக் காட்டுவாயாக" என்று கூறி மீளவிடுத்தனன். அதனைக் கண்டு தன் மனத்தைத் திண்ணிதாக்கி மறுநாள் காலையில் மானனீகை, "இற்றை இரவின் கண்ணே கூத்தப்பள்ளியினிடத்தே குச்சரக்குடிகை வேதிகையின்பால் வந்தருள்க" என்று அந்த இடமும் புலப்படும்படி சங்கேதமாக ஒருவகைக் கோலத்தை எழுதி அனுப்பினள். வாசவதத்தை வந்து வணங்கி நின்றாள். அதனைக் கண்ட உதயணன் அவள் எழுதிய குறிப்பை அறிந்து மகிழ்ந்து, "மானனீகை இன்றைக்குப் பயந்து செய்த அலங்காரம் மிகவும் அழகுடையது" என்று சொல்லி வாசவதத்தையோடு அளவளாவிக்கொண்டிருந்தனன். பகற்காலம் நீங்கியது.

இரவில் வாசவதத்தைக்குத் தெரியாமல் மானனீகை தான் குறிப்பிட்ட இடத்தில் சென்றிருந்தனள். உதயணன், "வாசவதத்தைபால் துயில்ச்செல்வேன்" என்று பதுமையிடத்தும், "பதுமைபால் துயிலச் செல்வேன்" என்று வாசவதத்தையிடத்தும் விருப்பக் குறிப்பின்றிக் கூறினன். கூறவே வாசவதத்தை ஐயமுற்று ஓரிடத்தில் சென்று இருந்தனள். அப்பொழுது

உதயணன் எழுந்து ஒதுங்கி வேறிடம் செல்வானாயினன். அதனைக் கண்ட வாசவதத்தை காஞ்சனமாலையைக் கை கொட்டி அழைத்து, "அரசன் செல்லும் இடத்தை நீ அறிந்து வருக" என்று சொன்னாள். சொல்லவே அவள் அவன் அறிந்துகொள்ளாதபடி பின்னர்ச் சென்று, அரசன் ஆடல் பேரறையைச் சார்ந்தபின் அவளும் பின் சென்று அங்கே ஒரு பக்கத்தில் மறைந்திருந்தனள்.

சென்ற உதயணனும் முன்னமே அங்கு வந்திருந்த மானனீகையும் ஒருவரை ஒருவர் கண்டு அளவளாவி நெடுநேரம் விளையாடிக்கொண் டிருந்தபின்பு, வாசவதத்தையின் நெற்றியில் காதலோடு எழுதிவிடுத்த வாசகங்களையெல்லாம் இருவரும் சொல்லிக்கொண் டிருந்தனர். இருந்தபின் அரசன், "நாள்தோறும் தவறின்றி இங்கே வர வேண்டும்" என்று சொல்லித் தன்னுடைய சிறுவிரல் மோதிரத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டு நீங்கினன்.

எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே இருந்த காஞ்சனமாலை மிக்க மனப்பொருமலோடு சென்று நிகழ்ந்தவற்றையெல்லாம வாசவதத்தைக்குச் சொன்னாள். கேட்ட வாசவதத்தை கோபத்தை மனத்தில் அடக்கிக் கொண்டிருந்துவிட்டுக் காலையில் அரசனை அடைந்து வணங்கி அவனை நோக்கி, "நேற்றிரவில் யான் ஒரு கனுக் கண்டேன்; அது குற்றமற்றது" என்று சொல்ல அவன், "அஃது யாது?" என்று வினவினன். உடனே அவள், "நீர் எனக்குத் தெரியாமல் தனித்துச் சென்று ஒரு மடந்தையோடு ஆடரங்கு ஒன்றில் ஏறி நெடுநேரம் விளையாடிக்கொண்டு தங்கி என் நெற்றியில் மாறிமாறி எழுதிய வாசகங்களை எல்லாம் சொல்லிக்காட்டி உமது அன்பைப் புலப்படுத்திக்கொண்டே இருந்து புறப்படும்பொழுது அவளுக்கு மோதிரத்தை அளித்து வந்துவிட்டீர். அப்பால் என் கண்கள் விழித்தன" என்று சொன்னாள். உதயணன், "என் மனத்திலும் இல்லாததை நீ கண்டாயாதலால் கலக்கம் அடைந்தாய்போலும்" என்பது முத

வியவற்றைச் சொல்ல, அவள், "கனவில் கண்டதைப் பிறரோடு சொன்னால் அதனால் உண்டாகும் தீமை நீங்கும் என்று நூல்கள் கூறுதலின் நான் இப்போது தெரிவித்தேன். அன்றியும் எவற்றைக் கண்டாலும் அவற்றை அரசனிடத்தன்றி யாரிடத்துப் பேசுவது?" என்று சொல்லிவிட்டு மனத்துள்ளே நகைத்துக்கொண்டு சென்றனள். உதயணன், "தேவிக்கு உண்டான கவலையை ஒரு வழியாகப் போக்கிவிட்டோம்" என்று உவந்திருந்தான். இப்படி இருக்கையில் பகற்காலம் நீங்கிற்று; இரவு வந்தது.

வாசவதத்தையோ மானனீகையைப் பிடித்துக் கொண்டுவரச் செய்து காவலில் வைத்துவிட்டுப் பிறர் அறிந்துகொள்ளாதபடி காஞ்சனமாலையோடு சென்று ஆடரங்கில் ஏறி மானனீகை இருந்த இடத்திலே இருந்தாள். இருக்கவே உதயணன் நிகழ்ந்ததை அறியாமல் மெல்லச்சென்று அவள் சமீபத்தை அடைந்தான். அடையவே வாசவதத்தை, "அரசன் இங்கே என்ன செய்கின்றான்? அவன் இனிச் செய்வதை அறிவோம்" என்று எண்ணிக் கையால் நீக்க உதயணன், "மானனீகை ஊடியிருக்கின்றனள்" என்று நினைந்து,

> "முரசுமுழங்கு தானை யரசொடு வேண்டினும்
> தருகுவ லின்னே பருவர லொழியினி
> மானே! தேனே! மான னீகாய்!" (4·13: 227-9)

என்று அவள் காலைக் கையால் பற்றினன். பற்றவே காலைக் கொடாதவளாகி வாசவதத்தை அப்பால் சென்றனள். அதனைப் பொறாத உதயணன், "ஏதேனும் புதிய செய்தி ஒன்றைச் சொல்லி இவளுடைய ஊடலைத் தீர்த்து முன்னிலைப் படுத்திக்கொள்வோம்" என்று நினைந்து அவளை நோக்கி, "நேற்றிரவில் நம் இருவர்க்கும் இங்கே நிகழ்ந்தவற்றையெல்லாம் கனவில் கண்டதாக வாசவதத்தை சிறிதும் தவறின்றிச் சொல்லிச் சினப்ப நான், 'என் நெஞ்சில் சிறிதும் அந்த எண்ணம் இல்லை' என்று சொல்லி அவ் வருத்தத்தை நீக்கினேன்; அதனையும் நீ

அறிந்தாயில்லையே. மானனீகாய்! அருள்செய்ய வேண்டும்'' என்று அடுத்தடுத்து உரைப்பவும், ஆற்றுனுகவும், இந்தச் சொல் சொல்லவும், வணக்கம் செய்யவும், ஒன்றையும் மதியாதவளாகி வாசவதத்தை சிரித்துக்கொண்டு, "நீ கூறிய மானும் தேனும் மானனீகையும் யான் அல்லேன். என் பெயர் வாசவதத்தை'' என்றனள். உடனே உதயணன் திடுக்கிட்டு விரைந்து ஓடிச்சென்று வேறொரு மண்டபத்தில் தனித்து ஒளித்துக்கொண்டிருந்தான். வாசவதத்தையும் சினங்கொண்டு அவனைப் பாராமல் சென்றாள். செல்லவே கங்குல் புலர்ந்தது.

புலர்ந்தவுடன் வாசவதத்தை மானனீகையை வருவித்து மிகவும் கோபித்துக்கொண்டு ஒரு தூணோடு சேர்த்துக் கட்டி அவளை நோக்கி, "கூத்தப்பள்ளியில் நீ அரசனோடு பேசிய வார்த்தைகளையெல்லாம் சொல்'' என்று கூறி அருகே நின்ற ஒருத்தியைப் பார்த்து, "இவள் கூந்தலை அரிதற்கு ஒரு கத்தரிகை கொண்டு வருவாயாக'' என்று சொன்னாள். அதனை அயலிடத்தே இருந்த வயந்தகன் அறிந்து விரைந்து சென்று உதயணனுக்குக் கூற அவன், "மானனீகையின் ஒரு மயிரைக் கத்தரிகை தீண்டுமாயின், என்னுடைய உயிர் நீங்கும். இந்தக் கொடுஞ்செயலை விலக்குவாயாக'' என்றனன். வயந்தகன், "நிகழ்ந்தது யாது?'' என்றான். உதயணன், "எல்லாம் உன்னாலே முடிந்ததுதான்'' என்ன, வயந்தகன், "பந்து விளையாட்டை யான் பார்க்கச் சொன்னது உண்டேயன்றி வேறு எதையேனும் செய்யச் சொன்னது உண்டோ? இராசமாதேவியினுடைய தணியாக் கோபத்தைத் தீர்க்கும் வன்மை யாவர்க்கு உண்டு? ஆனாலும் ஆறேழு நாழிகை அளவில் அக் கோபத்தைத் தணிப்பேன். அதற்குள் வேறு யாரையேனும் அங்கே விடுத்தருள வேண்டும்'' என்று சொல்லிவிட்டு விரைந்து சென்று தேவியை அடைந்து, "அரசன் எங்கே யுள்ளனன்?'' என்று தேட, அங்கே உள்ள காவன்மகள் ஒருத்தி, "இது தலைவிக்குக் கோபமுள்ள சமயம்''

என்று அருகில் வந்து மெல்லச் சொல்லி, "சும்மா இரும்" என்று கையை அமைத்தனள். உடனே வயந்தகன் நடுங்கி, "தலைவிக்குள்ள குறை யாது?" என்று கேட்டனன். அதனை வாசவதத்தை அறிந்து அவனை நோக்கி, "அரச வடிவம் கொண்டிருக்கும் தூர்த்தக் கள்வனைக் கேட்பீராயின் என்னுடைய கோபத்தின் காரணத்தை நீர் எளிதில் அறிந்துகொள்ளுதல் கூடும்" என்று சொல்லி ஆண்டு உள்ளாள் ஒருத்தியை நோக்கி, "இக் கத்தரிகையால் இவள் கூந்தலைக் குறை" என்று மிகவும் சினந்து மொழிந்தனள். வயந்தகன், "அப்படியானால் கேசம் குறைத்தலில் எனக்கு மிக்க பயிற்சி உண்டு" என்றனன். எனவே அவள் குறைக்கும்படி கூற, அவன் வாசவதத்தையை நோக்கி, "கத்தரிகையின் இலக்கணங்கள் பலவுள்ளன. நின் கைம் மலர் மயிரைத் தீண்டுதல் தகாது; கருவியைத் தருக" என்று சொல்லி வாங்கி அதன் இலக்கணத்தை விளங்கக் கூறுபவன்போலக் கத்தரிகையின் வேறுபாட்டிலக்கணம் பலவற்றைக் கூறி, "இக் கத்தரிகையால் இவள் மயிரைத் தீண்டின் இவளுக்கு மிகவும் நன்மை உண்டாகும்; ஆதலால் இது வேண்டாம்" என்று அதனைத் தூரத்தில் எறிந்தனன். பின்பு அவளால் கொடுக்கப்பட்ட கத்தரிகை ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு குற்றம் கூறிக் கூறி எறிவானாயினன்.

அவற்றையெல்லாம் உடனுடன் ஒற்றரால் அறிந்து கொண்டே இருந்த உதயணன் [1]யூகியை வருவித்து நிகழ்ந்தவற்றைச் சுருக்கிக் கூறினன். கேட்ட யூகி, "யானும் ஆறேழு நாழிகை அளவு அவள் கூந்தலைப் பாதுகாப்பேன். அதற்குமேலே யாதொன்றும் செய்ய அறிந்திலேன்"

---

[1] உதயணனால் அனுப்பப்பெற்றுப் பிரச்சோதனன்பால் சென்ற யூகி அவனைக் கண்டு உடனே கௌசாம்பிக்கு வந்துவிட்டான் என்பதைக் கூறும் பகுதி இதன் முதனூலில் சிதைந்து போயிருக்க வேண்டுமென்று தெரிகின்றது; உதிதோதயகாவ்யம் முதலியன இக் கருத்தை வலியுறுத்தும்.

என்று இழிந்த பலவகைப்பட்ட பொருள்களையும் தன் உறுப்புக்களின்மேல் தாங்கி நீற்றை உடம்பெங்கும் பூசிக் கொண்டு பித்தர் வடிவம் பூண்டு, கண்டோர் துட்கென்று அஞ்சும்படி அங்கே சென்றனன்.

வாசவதத்தையைச் சூழ்ந்து நின்ற மகளிர்கள் அவனைக் கண்டு அச்சமுற்றுப் பலவிடத்தும் ஓடுவாராய், விழுநரும், எழுநரும், மேல்வர நடுங்கி அழுநரும், தேவியின்பின்னே அணைநரும் ஆயினர். வாசவதத்தை அதனைக் கண்டு சிரித்துக்கொண்டு அக் காட்சியையே விரும்பி நின்றனள். அச் செய்தியைச் சொல்லும்படி வயந்தகன் ஒரு தூதியை மந்தணமாக அரசன்பால் அனுப்பினன். அனுப்பவே அரசன் பதுமையை வருவித்து ஏதோ சொல்லத் தொடங்கித் திகைத்தனன். அத் திகைப்பை அறிந்த பதுமை, "எனக்கு உரையாததான செயல் யாதுளது? சொல்லியருள வேண்டும்" என்று வணங்கிக் கேட்ப அவன், "யான் சொல்லுதற்குக் கூசுகின்றேன். உன் தவ்வையை அடைவாயாயின் அவள் சொல்லுவாள். நீ என் செயிர் காணாத தெய்வமாதலின் அவள் கோபத்தைத் தணித்து என் உயிரைத் தர வேண்டும்" என்று அவளை அனுப்பினன்.

பதுமை வாசவதத்தையை அடைந்து வணங்கினள். வணங்கவே அவள் நிகழ்ந்தவற்றைக் கூறப் பதுமை, "நீர் பொறுத்திடுக. இவ் வரத்தை எனக்குக் கொடுத்தருள வேண்டும்" என்று சொல்லித் தான் வந்த காரியத்தைத் தெரிவித்துப் பின்னும் வணங்கி அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டே நிற்பாளாயினள்.

அப்பொழுது வாயில்காவலன் வந்து உதயணனை வணங்கி, "கோசலத்தரசன் தூதுவர் வாயிலின்கண் வந்து நிற்கின்றனர்" என்று சொல்லக் கேட்டு உதயணன் அவரை வருவித்து, வந்த செய்தியைக் கூறும்படி சொன்ன பொழுது, அவர், "கோசலத்தரசர் உம்முடைய மாபெருந் தேவியார்க்கு ஒரு திருமுகங் கொடுத்தனுப்பினர். அதனை

அங்கே அனுப்ப வேண்டும்'' என்று கொடுத்தனர். அப்போது உதயணன், "இச் சமயத்தில் இது வந்ததும் நலமே" என்று எண்ணி அதனை வாசவதத்தைபால் அனுப்பினன். அவள் அதனை வாங்கி, "இதனைப் படித்துச் சொல்" என்று பதுமையின் கையில் கொடுத்தனள். பதுமை எழுந்து அதனை வாங்கிப் பிரித்து, "கோசலத் தரசன் ஓலையை வாசவதத்தை காண்பாளாக: சோர்விடம் பார்த்து என் ஊரை எறிந்த பாஞ்சால ராசனால் [1]தன் தங்கை வாசவதத்தை ஆபத்துடன் கைக்கொள்ளப் பட்டுப்போயினள். பாஞ்சால ராசனை வென்ற உதயணனால் பல மங்கையருடன் அவள் கவரப்பட்டுப் பின்பு தன்பால் பணிப்பெண்ணாக இருப்பதைக் கேட்டேன். அவள் தன்னை இன்னாளென்றும் தன் பெயர் இன்னதென்றும் உணர்த்தாமல் மானனீகையென்று பெயர் வைத்துக்கொண் டிருப்பதையும் அறிந்தேன். விரைவில் அங்கு வருவேன். யான் வருமளவும் துயரத்தைத் தீர்த்து அவளைப் பாதுகாக்க வேண்டுவது தன் கடமை; இஃது என்னுடைய குறையாகும்" என்று அதில் எழுதிய வாசகங்களைப் படித்து அறிந்து வாசவதத்தையைப் பார்த்து, "இதனிலுள்ள வாசகம் எனக்கு விளங்கவில்லை; நீரே பார்த்தருள்க" என்று அவளிடம் கொடுத்தனள்.

வாசவதத்தை அதனை வாங்கிப் படித்து இடையிடையே ஏங்கி ஏங்கிக் கண்ணீர் உகுத்துக்கொண்டு, "பெண்ணீர்மைக்கு இயல் பிழையே போலும்" என்று சொல்லி மானனீகை பட்ட துன்பத்திற்கு ஆற்றாதவளாகி எழுந்து பதுமையுடன் சென்று மானனீகையின் கட்டை அவிழ்த்துவிட்டு அவளை அணைத்துக்கொண்டு, "குழூஉக் களியானைக் கோசலன் மகளே! அழேற்க என் பாவாய்! அரும்பெறற் றவ்வை செய்தது பொறு" என்று சொல்லி

[1] வாசவதத்தைக்குத் தாய்வருக்கத்தைச் சேர்ந்தவளுடைய மகளாகிப் பிராயத்தால் சிறியவளாகவும் இருந்ததுபற்றி, அவள் 'தங்கை' எனப்பட்டாள்.

அவள் கண்ணீரைத் துடைத்துச் சூழ்ந்திருப்பவர்களைப் புறத்தே போகும்படி செய்துவிட்டு அவளை உடன் இருக்கச்செய்து அவள் கூந்தலைத் தன் கையால் வகிர்ந்து ஆற்றி எண்ணெய் தேய்த்து நீராட்டித் துகிலுடுத்துப் பதுமையும் தானும் நின்று அவளுக்கு இனிய வார்த்தைகள் பலவற்றைச் சொல்லிச் சிறந்த இடத்திலிருந்து மூவரும் ஒரு கலத்தில் உண்பாராயினர். அதனைக் கண்ட வயந்தகன் விரைந்து சென்று உதயணனுக்குக் கூற அவன் கேட்டு மிகவும் மகிழ்ந்து அவனைத் தழுவிக்கொண்டனன்.

அப்பொழுது வாசவதத்தை, "கோசலதேசத்து அரசன் மகளை மணக்கோலஞ் செய்" என்று பதுமைக்குக் கூறிவிட்டு அரசனுக்கு மணச் செய்தியைச் சொல்லிவிடுத்தனள். உடனே மணக்கோலத்துடன் அவன் வந்து மணப்பந்தரில் ஆசனத்தின்மீது இருந்தனன். இருந்தபொழுது வாசவதத்தையும் பதுமையும் விரும்பி அளிக்க அவன் கோசலவரசன் மகளை மணம் செய்துகொண்டனன். அதன்பின்,

> 'முற்றிழை மகளிர் மூவரும் வழிபடக்
> கொற்ற வேந்தர் நற்றிறை யளப்ப
> நல்வளந் தரூஉம் பல்குடி தழைப்பச்
> செல்வ வேந்தன் செங்கோ லோச்சி' (4·14: 182-5)

மகிழ்ந்திருந்தாள்.

உதயணன் இப்படி இருக்கும் காலத்தில், இலாவாண நகரத்தின் அயலிலுள்ள சோலையில் முன்பு உண்டாட்டு நிகழ்ந்தபொழுது இளமைப் பருவத்தில் உதயணனால் கண்ணிமுதலியவை சூட்டப்பெற்ற விரிசிகையென்பவள் அவன் சூட்டிய மாலையையன்றி வேறொன்றையும் அறியாதவளாகி விரதத்துடனிருந்து பருவமுதிர்ச்சி அடைந்து விளங்கினள். அதனை அறிந்த அவள் தந்தையாகிய முனிவர் விரைந்து வந்து கௌசாம்பி நகரம் அடைந்து தமது வரவைத் தெரிவித்து உதயணனைக் கண்டு, "யான் கூறுவனவற்றை அங்கீகரித்துக் கேட்டிடுக: நீ வியாசர் முதலாகிய

பெரியோர்கள் விளங்கப்பெற்ற குருகுலத்தில் பிறந்தோன். யான் வெள்ளியங்கிரியிலுள்ள மந்தரவரசன். அமைச்சரோடு அரசாட்சி செய்துகொண்டிருந்த யான் முத்தியை விரும்பிய முயற்சியை உடையேனாகி என்னுடைய பாரதனைப் புதல்வனிடத்தே ஒப்பித்துவிட்டுக் காசியரசன் புத்திரியும் நீலகேசி என்னும் பெயரினளுமாகிய என் மனைவியோடும் விரிசிகையென்னும் புதல்வியோடும் காடொன்றை அடைந்து தவம் செய்துகொண்டிருந்தேன். இருந்தபொழுது ஒருநாள் யான் புண்ணிய தீர்த்தம் ஆடுவதற்கு அயலிடம் சென்றேன். அச்சமயத்தில் நீ வந்து என் மகள் விரிசிகையை மடியில் வைத்துக்கொண்டு அவளுக்கு மாலைசூட்டிச் சென்றனை. அதனையே தனக்குப் பற்றுக்கோடாகக்கொண்டு உன்னையே விரும்பி அவள் காலம் கழிப்பாளாயினள். உன்னையே விரும்பியிருக்கும் அவளுடைய உள்ளத் தாமரைப்போது வேறொருவர் பொருட்டு மலர்வது அரிது. தம்மிடத்து அன்புள்ள கன்னி மகளிர் யாவராயினும் அவரைத் தாமும் விரும்பி அவரது துயரத்தைத் தீர்த்துப் பாதுகாத்தல் ஆடவர் திறத்தின் கட்பாடென்பது உலகம் அறிந்ததே. 'என் மகளை யான் அளிப்பேன். நீ பெற்றுக்கொள்க' என்று தெரிவித்துக் கொள்ளுதல் மரபு அன்றாயினும் சொல்லுகிறேன். இயல்பாகவே உன்னால் மாலை சூட்டப்பட்டவளாதலின் அவள் உன் மனைவியே. ஆதலால் என் வேண்டுகோளின்படி செந்தீக்கடவுளின் முன்பு அவளை நல்லநாளில் மணஞ்செய்துகொள்ளுதல் நன்று'' என்று தெரிவித்தனர்.

கேட்ட உதயணன் அதனை வாசவதத்தைக்கு அறிவித்தான். இந்நிகழ்ச்சியை இயல்பாகவே முன்னம் அறிந்தவளாதலின், வாசவதத்தை சிறிதும் ஊடாதவளாகி அங்கீகரித்தனள். அவளது உள்ளத்தை அறிந்த உதயணன் பின்பு தன் உடன்பாட்டை அம்முனிவருக்குத் தெரிவித்தான். அம் மகிழ்ச்சியால் அரசன் யாசகர்க்கு அரும் பொருள்களை மிக வழங்கினன். இந்த மணச் செய்தியை நாட்டினரும் நகரத்தினரும் அறிந்து தத்தம்

இடங்களை அலங்கரித்தல் முதலியவற்றைச் செய்யும் வண்ணம் முரசறைவிக்கச் செய்தான். அலங்காரத்தின் மிகுதியால் அந் நகரம் போகபூமியைப்போல விளங்கிற்று. எந்த மருங்கிலும் நகரத்தார் அடையாக் கடையரும், வரையா வண்மையரும், இல்லோர்க்கு உறுபொருள் வீசுபவரும் ஆகி, 'தாபதன் மடமகள் இங்கே வருவதை யாம் பார்க்க வேண்டும்' என்று விரும்பிச் சென்று,

"பூத்தோய் மாடமும் புலிமுக மாடமும்
கூத்தா டிடமுங் கொழுஞ்சுதைக் குன்றமும்
நாயின் மாடமு நகரநன் புரிசையும்
வாயின் மாடமு மணிமண் டபமும்
ஏனைய பிறவும்" (4.15:108-112)

ஏறி நிற்பாராயினர்.

அது தெரிந்த உதயணன், "பிடிகை, சிவிகை முதலியவற்றில் ஊர்தலின்றி நகரினுள்ளே விரிசிகை நடந்தே வருவாளாக" என்று சொல்லிவிடுத்தனன். விடுத்தவன், "வீட்டுவாயில்கள் தோறும் நறுமலர் பரப்புக; யானை முதலியவை வீதியில் சஞ்சரித்தலைத் தவிர்த்திடுக" என்று ஏவலர்முகமாக நகரத்தார்க்குத் தெரிவித்தனன். "அரண்மனையிலிருந்து மங்கலமகளிரும், பெரியோர்களும், நண்பில் திரியாமல் பண்பொடு புணர்ந்த காஞ்சுகிகளும் எதிர் சென்று அழைத்து வருக" என்று கட்டளையிட்டனன். அப்படியே அவர்கள் சென்றார்கள். விரிசிகையைக் காண்பதற்குச் சனங்கள் வழியின் இருபுறத்தும் நெருங்கி நின்றார்கள். தவப்பள்ளியிலிருந்து புறநகரத்திற்கு அவளை அழைத்துவரும்பொருட்டுச் சிவிகையானது பரிவாரங்களுடன் அனுப்பப்பெற்றது.

அழைக்கச் சென்றவர்கள், விரிசிகையைச் சிவிகையில் ஏற்றி அழைத்துவந்து புறநகரத்தின்கண் சோலையிலுள்ள மாடம் ஒன்றில் இறக்குவித்து வாசனைப்பொருள்களை அவள் உடம்பில் பூசி நறுநீரால் ஆட்டுவித்துச் செவ்வென் கூந்தலை மெல்லென வாரி முடித்து அந்த மயிர்முடியில்

உதயணனால் முன்பு சூட்டப்பெற்றதும் வாடியதுமான பிணையலுடன் தளிரினும் போதினும் தொடுத்த புதிய தாமத்தைச் சூட்டிப் பனங்குருத்தோலையைக் காதில் செருகி நெற்சிறு தாலியைக் கழுத்தடியில் சேர்த்தி முத்தைக் கோத்த ஒரு காழ்வடத்தை மார்பில் பூட்டிக் காவி உடையை நீக்கிக் கோடித் துகிலை உடுத்தி ஓர் உத்தரீகத்தை மேலே சேர்த்திக் கையில் பிடித்துக்கொள்ளும்படி ஒரு குவளைப்போதைக் கொடுத்து அவளை அலங்காரஞ் செய்தனர்.

செய்தபின்பு உடன்வந்த முனிவர்மங்கையரிற் சிலர், சாங்கியத்தாய் முதலியவர்களை நோக்கி, "இவளைப் பாதுகாக்க வேண்டுவது உமது கடமை" என்று ஓம்படை கூறி, "இனி இவளுக்குத் தாயும், தந்தையும், தவ்வையரும் உதயணனே" என்று சொல்லிவிட்டு அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு தம்மிடம் சென்றார்கள்.

சென்றவர்கள் விரிசிகையின் தந்தைக்கு நிகழ்ந்தவற்றைச் சொல்ல, அம் முனிவர் தம் மனைவியை அழைத்து, "விரிசிகையை மணம் செய்துகொள்ளும்படி உதயணனிடம் சொல்லிச் சேர்ப்பித்துவிட்டேன். இனி உன்னையும் துறந்து யான் தவம் செய்யச் செல்வேன்" என்று கூறினர். கேட்ட அவள் வருந்திப் புலம்பினள். அதனை அம் முனிவர் ஏற்றுக்கொள்ளாதவராகிக் கடிய தவவொழுக்கத்தை மேற்கொண்டு வேறிடம் சென்றார்.

சென்றபின் அவ் வனத்திலுள்ள மங்கையரில் ஒரு சாரார் விரிசிகையால் வளர்க்கப்பட்டு அவளோடு பழகிய குயில் முதலியவற்றையும் தவச்சாலையிலுள்ள அரிய பொருள்களையும் அருங்கலன்களையும் கைக்கொண்டு உடன்வர, வீதியில் விரிசிகை நடந்து செல்வாளாயினள். கண்டோர், "இவள் முனிவருடைய வேள்வியில் தோன்றிய தெய்வ மங்கை. இவளை மானிட மங்கை என்றல் மெய்ம்மையன்று" என்றும், 'சூடிய தளிர்க்கோதை வாடுதல் முதலிய நிகழ்ச்சிகள் இவள் தெய்வமங்கை அல்லள்

என்பதைத் தெரிவிக்கின்றன" என்றும், "இவள், கயத்தினின்றும் நீங்கிக் குவளைமலர் பிடித்துப் போந்த நீரரமகளாக இருப்பின் இவளுடைய கண்கள் இமைக்குமோ? உதயணனை மணமகனாகப் பெறுதற்குப் பழம்பிறப்பில் தவம் செய்த ஒருத்தி இவள்" என்றும், "உதயணனைச் சார்ந்து போகம் நுகர்தற்கு வந்த இயக்கி" என்றும், "உதயணன் இவளை விட்டு நெடுங்காலம் பிரிந்திருந்தது தவறு" என்றும், "இவளுக்கு உறுப்புக்களே அணிகலன்கள்; ஆபரணங்களை அணிவோர் அறிவில்லாதவர்களே" என்றும், "அழகில் தம்மை ஒப்போர் இல்லையென்று எண்ணியிருக்கும் மகளிர் இவளைக் காண்பார்களாக" என்றும், "உதயணனுக்கு இவளே ஏற்றவள்" என்றும் சொல்லாநிற்ப, விரிசிகை தன் அடிகள் சின்மலர் மிதித்துச் சிவந்து சலிப்புறும்படி மெல்ல மெல்ல வீதியில் நடந்து சென்று கோயில்வாயிலை அடைந்தாள். அடைந்த பொழுது, அரண்மனையிலிருந்து மங்கலப்பொருள்களை ஏந்திக்கொண்டு சிலர் எதிர்கொண்டனர். விரிசிகை கோயிலினுள்ளே சென்றனள். தேவியர் மூவரும் செய்ய வேண்டியவற்றைச் செய்து அவளுடைய குரவர்போலக் கொடுப்ப உதயணன் அவளை மணம் செய்து கொண்டனன்.

அப்பால், தேவியர் நால்வரும் வழிபட, மிக்க செல்வத்தோடு கூடிப் பல்லுயிர்களையும் உதயணன் பாதுகாத்து வருபவனாயினன்.

# 5

## நரவாண காண்டம்

பின்பு ஒருநாள் மந்திரிமார்களோடு உதயணன் பேரத்தாணியில் சென்று வீற்றிருந்தனன். அப்பொழுது ஒழுக்கமுடைய வணிகர் சிலர் நெருங்கி வந்து முறைப்படியே சென்று தமக்குள்ள வழக்கொன்றை உதயணனுக்குத் தெரிவித்தனர். அதனைத் தீர்க்கும்படி உருமண்ணுவாவுக்கு அவன் கட்டளையிட, அவன் அதை நன்கு விசாரித்துத தீர்ப்புச்சொல்லிவிட்டு மீண்டுவந்து அந்த விவரத்தைக் கூறினன்.[1] அந்த வழக்கு, சந்ததியின்மையால் உண்டாகும் குறையையும் அஃது இருத்தலினால் உண்டாகும் பெருமையையும் புலப்படுத்தியதாதலின், உதயணன், "நமக்குச் சந்ததி இல்லையே. மக்கள் இலையெனின் மிக்குயர் சிறப்பின் நம் குலம் இடையறுமே" என்ற வருத்தத்தை அடைந்து வாசவதத்தைபால் சென்றான்.

சென்றபொழுது, அவள் நோன்பிகளுக்கு உணவளித்து அவர்களுடைய ஆசியைப் பெற்று மங்கலக் கோலத்தோடு மாடத்தில் ஓரிடத்தில் இருந்தனள். இருந்தவள், ஒரு புறவு தான் வாய்க்கொண் டிருந்த அரிய இரையைத் தன்னுடைய பார்ப்பின் வாயில் சொரிந்ததைக் கண்டு பார்ப்பின் பசிவருத்தத்தையும் தாய்ப்புறவினது அன்பின் பெருமையையும் நோக்கி, அதன் அன்பைப் பாராட்டிக்கொண் டிருந்ததை அரசன் வினவி அறிந்துகொண்டு, தாகித்தவர்களுக்குத் தண்ணீர்போன்ற அவ

---

[1] ஒரு வழக்கைத் தீர்த்ததிலிருந்து தனக்குச் சந்ததியில்லையே என்ற கவலை துஷ்யந்தனுக்கு உண்டானதாகச் சாகுந்தலத்தின் 6 - ஆம் அங்கத்தால் தெரிகின்றது.

ளுடன் துயின்றான். துயின்றபொழுது, இடையாமத்தில் ஒரு தெய்வமங்கை வந்து, 'எம் இறைவனாகிய குபேரன் உம்மை அழைக்கிறான். வருக'' என்றனள். உதயணன், "வாசவதத்தையையும் உடன் அழைத்துவர என் மனம் விரும்புகின்றது. அதனை நீ அங்கீகரிக்க வேண்டும்" என்றனன். உடனே அவள், இருவரையும் கையில் தாங்கிக்கொண்டு பறந்துசென்று குபேரனை அடைய, அவன் சிங்காதனம் ஒன்றைக் காட்டி அதில் இருக்கும் படி சொல்ல, உதயணன் தேவியோடு அதில் இருந்த பொழுது, குபேரன் கட்டளைப்படி ஒரு மணிமுடியை அத் தெய்வப்பெண் கொணர்ந்து உதயணனுக்குக் கொடுப்ப, அவன் பெற்று வாசவதத்தையுடன் நகர்வந்து அதை அவளுக்கு அளிக்க, அவள் அதைத் தன் மார்பினிற் சேர்த்தினள். சேர்த்தவே, அது சூரியன்போல் தோன்றி அவள் வயிற்றில் புகுந்துவிட்டது. புகவே அவள் அஞ்சித் திடீரென்று எழுந்தாள். தானும் உடனே எழுந்துவிட்டதாக அவன் கனவொன்றைக் கண்டு ஒரு முனிவரை அடைந்து தான் கண்டகனவைக் கூறி அதன் பயனைச் சொல்லவேண்டும் என்று கேட்ப அவர், "வெள்ளிமலையை ஆளும் சக்கரவர்த்தியாகிய ஒரு புதல்வனை நீ பெறுவாய். அவன் வெற்றி பெற்று விளங்குவன்; சிறிதும் ஐயமில்லை" என்றனர். உதயணன் கேட்டு அதை வாசவதத்தைக்குச் சொல்லி மகிழ்வுற்றிருந்தனன்.

இப்படி இருக்கையில் வாசவதத்தை கருவுற்றாள். அதற்குரிய அடையாளங்கள் அவள் தேகத்தில் காணப்பட்டன. மயற்கையடைந்து வருந்தினாள். ஒரு நாள் வருந்தித் துயிலுகையில், விடியற்காலத்தில் ஆகாயத்தில் செல்லும் வெள்ளானை ஒன்று வந்து துதிக்கையைச் சுருட்டிக்கொண்டு தன் வயிற்றில் புகுந்ததாகவும், அப்பொழுது ஆகாயத்தில் துந்துபிகள் முழங்கப் பலர் துதித்ததாகவும், பின்பு அதனை உமிழ்ந்துவிடவே அஃது இறகுகளைப் பெற்றுப் பறந்து சென்று ஒரு வெள்ளி மலையின்மேல் ஏறி அதில் விளங்கிய ஒரு சூரியனை

விழுங்கியதாகவும், அவள் கனவொன்று கண்டு திடீ ரென்று அஞ்சி எழுந்தாள். எழுந்தவள் அதை உதயண னுக்குக் கூற, "வித்தியாதரர் உலகில் சென்று பெரும் பகை வன் ஒருவனை வென்று அங்கே சக்கரம் செலுத்தும் ஒரு புதல்வனைப் பெறுவாய்" என்று மொழிந்தனன்.

வாசவதத்தையின் கருப்பத்திலிருந்த குழந்தை யினிடம் சிறந்த வித்தை ஒன்று இருந்தமையின், மேலே பறந்து சென்று மலைகளையும் பிறவற்றையும் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அதற்கு உண்டாயிற்று. அந்த விருப்பத்தை வாசவதத்தையும் அடைந்தனள். அப்பொழுது கருப்பத்தின் வளர்ச்சியால் அவளுடைய தேகம் மெலிவுற்றது. அதனைக் கண்ணுற்ற உதயணன், "உனக்கு வேண்டுவது யாது?" என்று வினவினன். தான் விரும்பியது கிடைத்தற்கு அரியதாதலின், தன்னுடைய எண்ணத்தை வெளிப்படுத்தாமல் இருந்தனள். அவன், "நீ எதை விரும்பினாலும் அதனை அளித்தற்கு உரியேன்; ஐயம் உறாதே" என்று சூள் அறைந்து வற்புறுத்திக் கேட்க அவள், "என்னுடைய உள்ளம் வித்தியாதரர்களைப்போல ஆகாயத்தில் பறந்து சென்று பல இடங்களைப் பார்ப் பதற்கு விரும்புகின்றது" என்பதை அஞ்சித் தெரிவித் தனள். அவள் விருப்பத்தை முடித்தற்குரிய ஆலோசனை களை மந்திரிகளுடன் அவன் செய்வானாயினன்.

அங்ஙனம் ஆராய்ந்துகொண் டிருக்கையில் இலா வாண நகரத்திலிருந்து வந்த உருமண்ணுவாவுக்கு வாசவதத்தையின் கருத்து இன்னது என்பதையும் அதை அடைதற்குச் செய்யும் உபாயத்தைத் தான் நாடியிருந் தலையும் உதயணன் தெரிவிக்க அவன், "முன்னொரு காலத் தில் வந்து நம்முடைய [1]தாகத்தைப் போக்கிய இயக்கனை நினைப்போமாயின் அவன் வந்து நம்முடைய கருத்தை முடிப்பான்" என்று அவனைத் தியானித்தற்கு உரிய மந்

[1] ஒரு தேவன் வந்து தாகத்தைத் தீர்த்த செய்தியை முன்பு காண்க.

திரத்தை எழுதிக்கொடுத்தான். உதயணன் அதனை அறிந்து தூய்மையோடும் விரதத்தோடும் இருந்து மனத்தை ஒன்றுபடுத்தி அம் மந்திரத்தை ஓதிக்கொண்டிருந்த காலத்தில் அந்த இயக்கன் விண்ணிலிருந்து இறங்கி அங்கே வந்து அவன் முன்னே நின்றான்.

நின்றவன் உதயணனை நோக்கி, "மாய யானையைப் பிடிக்கச் சென்று சிறைப்பட்டபொழுதும், வேடர்களின் இடையே அகப்பட்டபொழுதும், மகதநாட்டில் துயரம் உற்றபொழுதும், ஆருணியோடு போர் செய்தபொழுதும் என்னை நினையாமல் மிக்க செல்வத்தால் இன்பமுற்றிருக்கும் நீ இக்காலத்தில் என்னை நினைத்தற்குக் காரணம் யாது?" என்று கேட்ப உதயணன், "அத் துன்பங்களெல்லாம் யாமே தீர்த்தற்கு உரியனவாக இருந்தமையின் நினைக்கவில்லை. எங்களால் இயலாதவற்றை விரும்பிய வாசவதத்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்விக்க வேண்டியிருந்தமையின் இப்போது நினைத்தேன்" என்றனன். எனவே அந்த இயக்கன், "உன் தேவியின் வயிற்றில் உறைபவன் வித்தியாதர சக்கரவர்த்தியாதற்கு உரியவன். அதற்குரிய காரணத்தைக் கேட்பாயாக. விந்தமலையைச் சார்ந்த நருமதையாற்றின் ஒரு கரையில் உள்ள பருப்பதமென்னும் மலையின்மேல் குபேரன் தன் உரிமைமகளிருடன் இருந்தபொழுது, பத்திரை முதலாகிய தெய்வமகளிர் ஒன்பதின்மருள் ஒருத்தியாகிய பத்திராபதி என்பவளைத் தளிர்முதலியவற்றைக் கொய்து தரும்படி அவன் வெளியே அனுப்பினன். சென்ற பத்திராபதி அங்ஙனம் கொய்த தளிர்முதலியவற்றைக் கையில் ஏந்திக்கொண்டு நின்று, ஓர் ஆண் யானையால் தழுவப்பட்டு நின்ற பெண் யானையை நோக்கி, 'யானைப் பிறப்பும் விரும்பற்பாலது' என்று எண்ணிக்கொண்டு குபேரனை அடைந்தாள். அடைந்தவளுடைய எண்ணத்தை அறிந்த குபேரன் அவளை நோக்கி, 'தெய்வ இன்பத்தை விரும்பாமல் யானையின் இன்பத்தைப் பெரிதாக நினைத்தமையின், மண்ணுலகத்தில் சென்று பெண்

யானையாகப் பிறந்து நீ விரும்பியபடி ஆண் யானையுடன் விளையாடிப் போகம் நுகர்க' என்று சாபமிட்டனன். இடவே அவள் நடுநடுங்கி, 'அப் பிறப் பினின்றும் நான் நீங்குதல் எப்பொழுது?' என்று கேட்டனள். கேட்டவளுக்கு, 'நீ பிரச்சோதனனுடைய நகரில் ஒரு பெண் யானையாகப் பிறந்து இந்தப் பெயரையே பெற்று வளர்ந்து வாழும் காலத்தில் அவ்வரசனால் உதயணனுக்குக் கொடுக்கப்படுவாய். அவன் வாசவதத்தை யை உன்மீது ஏற்றி இருளில் செலுத்தும்பொழுது நீ நெடுந்தூரம் சென்று காலகூடமென்னும் நோயாலும் பெரும்பசியாலும் வீழ்வாய். வீழ்ந்தவுடன் உதயணன் பஞ்சமந்திரத்தை உன் காதில் உபதேசிப்பான். அவ்வுப தேசத்தைப் பெற்று நீ பிறப்பொழிந்து தெய்வ வடிவங் கொண்டு இங்கே வருவாய்' என்று கூறினன். கூறிய படியே நிகழ்ந்தமையின் அவள், உனக்கு மாற்றுபகாரம் ஒன்றைச் செய்ய நினைந்து அதற்குரிய உபாயத்தை நாடிக் குபேரனை அடைந்து வணங்கி, 'எனக்கு ஒரு சிறு வரம் தந்தருளல் வேண்டும்' என்று கேட்டனள். கேட்கவே குபேரன், 'நீ விரும்பியதை மறையாமல் சொல்' என்று கட்டளையிட்டனன். அப்போது அவள், 'யான் பிரச்சோதனனது நாட்டின் எல்லைவரையில் சுமந்து சென்று விழுந்தவுடன் தன் காரியம் முடிந்துவிட்ட தென்று நினையாமல் உதயணன் என்பால் வந்து நான் செய்த உதவியை மிகவும் பாராட்டிக் கண்ணீர்விடுத்து என் உடம்பைத் தைவந்து நான் தெய்வப்பிறப்பை அடைந்து இன்புற்று வாழும்வண்ணம் பஞ்சமந்திரத்தை என் காதில் உபதேசித்துத் தன் கடனைக் கழித்தனன். அவனுக்கு ஒரு மகன் உண்டாகும்படி அருள் செய்யுமாறு வேண்டு கின்றேன்' என்று கேட்கவே குபேரன், அந்த வரத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டு விண்ணுலகத்துள்ள சௌ தர்மேந்திரனை அடைந்து உன் பெருமை முதலியவற்றை அவனுக்குச் சொல்லி, 'உதயணனுக்கு மகிழ்வளிக்கத்தக்க ஒரு புதல்வன் பிறக்க வேண்டும்' என்று கூறினன்;

சௌதர்மேந்திரன், 'வெள்ளியம் பெருமலையில் சக்கர வர்த்தியாக இருக்க வேண்டுமென்ற விருப்பத்தோடு சோதவனென்னும் முனிவன் ஒருவன் தவம் செய்து கொண்டிருக்கின்றனன். அவன் உதயணனுக்குப் புத்திரனாகப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாகி அரசாட்சி செய்துவிட்டு என்பால் வருவான்' என்று விடையளித்து அவனை வருவித்து, 'நீ வாசவதத்தையின் வயிற்றில் தங்கிப் பிறப்பாயாக' என்று கட்டளையிட்டனன். ஆதலால், உனக்குச் சிறந்த குமாரன் உண்டாதல் தப்பாது. அந்தப் பத்திராபதி, இன்னும் உனக்கு ஏதேனும் ஓர் உதவி செய்ய வேண்டும் என்ற விருப்பத்துடன் இருக்கின்றனள். அவளை நினைத்தால் வந்து உன் குறையைத் தீர்ப்பாள். அங்ஙனந் தீராளாயின், யான் திரும்பவும் வந்து தீர்ப்பேன்" என்று சொல்லிப் பத்திராபதியை அழைத்தற்குரிய மந்திரம் ஒன்றை உபதேசித்துவிட்டுப் பல உபசார மொழிகளால் உதயணனைப் பாராட்டித் தழுவி விடை பெற்றுத் தன்னிடம் சென்றனன் செல்லவே உதயணன் அம் மந்திரத்தை ஓதி உருவேற்றிக்கொண் டிருந்தான்.

இருந்தவன் பின்பு, "வாசவதத்தையின் விருப்பத்தைத் தீர்த்தற்கு உபாயம் யாது?" என்று நாடிப் பல இடத்திலிருந்தும் தச்சர்களை வருவித்து, "வாசவதத்தை ஊர்ந்து ஆகாயவழியே சென்று பல இடங்களையும் பார்த்துவருதற்குரிய எந்திர விமானம் ஒன்றைச் செய்வித்திடுக" என்று சொன்னபொழுது அவர்கள், "அஃது எம்மால் செய்தற்கரியது" என்றனர்.

இதனை அறிந்த பத்திராபதி, "நாமே தச்சவடிவங் கொண்டு சென்று இக் காரியத்தை முடிப்போம்" என்று நினைந்து ஒரு தச்சுவினை இளைஞன்போலவே அங்கே வந்து உருமண்ணுவாவால் அரசனை அடைந்து, "இத் தச்சர்கள் அதைச் செய்ய அறியார். யான் அதை எளிதில் செய்வேன்" என்று தெரிவித்தனள். அரசன் உடன்பட்டு அதற்கு வேண்டியவற்றைக் கொடுக்க, அவற்றைக் கொண்டு

சென்று சில தினத்தில் எந்திர விமானம் ஒன்றைச் செய்து முடித்துவிட்டு வந்து அரசனிடம் தெரிவித்தனள்.

உதயணன் சென்று அதனைக் கண்டு உமையொடு புணர்ந்த இமையா நாட்டத்துக் கண்ணணாங் கவின்ராளிக் கடவுளைப்போல வாசவதத்தையோடு அதில் ஏறியிருந்து விளங்கினன். [1]உருமண்ணுவா முதலிய தோழர் நால்வரும், "எங்கள் மனைவியர்களும் கருப்பமுற்றவர்களாதலின், இதில் ஏறிச் செல்லும் விருப்பமுடையார்" என்று சொல்ல உதயணன் பத்திராபதியினுடைய அநுமதியைப் பெற்று யூகி முதலிய தோழர் நால்வரையும் அவர்களுடைய மனைவியர்களையும் அதில் ஏற்றினன். பத்திராபதி அதனை ஆகாயவழியே செலுத்திக்கொண்டு பொன்மலைமுதல் பொதியில்மலை இறுதியாகிய பல மலைகளையும், பல காடுகளையும், பல தேசங்களையும், பல நகரங்களையும், பின்னும் காட்ட வேண்டிய இடங்கள் பலவற்றையும் காட்டிவிட்டு மீட்டும் கௌசாம்பிநகரம் வந்து சேர்ந்தனள்.

சேர்ந்தபின் உதயணன் விமானம் செய்த தச்சுவினை இளைஞன்போல உதவிய பத்திராபதியை அழைத்து மிக்க உபசார மொழிகளைக் கூறி, "எங்களுடைய பெரும் துயரத்தைத் தீர்த்த உனக்கு எம்மால் செய்தற்குரிய கைம்மாறு யாது?" என்று சொல்லித் தன்னுடைய அணிகலங்களைக் கழற்றிக் கொடுக்கத் தொடங்கியபொழுது பத்திராபதி அவற்றைக் கொள்ளாமல் தன் பழைய வரலாறு முழுவதையும் சொல்லி, "நான் பத்திராபதியென்னும் பெண் யானையாக இருந்தபொழுது, என்னுடைய மரணகாலத்தில் நீர் செய்த உதவிக்கு மாறாக என்னால் செய்தற்கு உரியது ஒன்றும் இல்லை. நீரும் நானும் வேறலம்" என்று சொல்லி விடைபெற்றுத் தன்னுடைய பண்டைத் தெய்வப் பெண் வடிவத்தைக் கொண்டனள்.

---

[1] உருமண்ணுவா முதலிய மூவருக்கும் விவாகமான பொழுதே யூகிக்கும் முதல்முறை விவாகம் ஆகியிருக்க வேண்டும் என்பது இதனால் அறியப்படுகிறது.

பின்னர் அவள் ஆகாயவழியே செல்லுதற்குரிய மந்திரம் ஒன்றை அவனுக்கு உபதேசித்துவிட்டுத் தன்னிடம் செல்ல, உதயணன் முதலியோர் அவளை நோக்கிப் புகழ்ந்து வழிபட்டனர்.

உதயணன் வாசவதத்தையை மிகவும் பாதுகாத்து அவளுக்கு வேண்டியவற்றைச் செய்துவந்தபொழுது அவள நல்ல நாளில் ஆண்குழந்தை ஒன்றைப் பெற்றாள். பின்னர் யூகி முதலிய நால்வர்களுடைய மனைவியரும் ஆண்குழந்தைகளைப் பெற்றார்கள். அப்போது உதயணனும், தோழர்களும், மற்றையோரும் மிக்க தான தருமங்களைச் செய்தனர். முரசறைவித்து நாட்டினரும் நகரத்தினரும் சிறப்பு அயருமாறும் தெரிவித்தனர். உதயணன் இச் செய்தியைத் தருசகனுக்கும், பிரச்சோதனனுக்கும், மற்றையோர்க்கும் சொல்லிவிடுத்தான். பன்னிரண்டு தினங்கள் சென்றன. பின்பு நாமகரணம் செய்தனர். உதயணன் புதல்வன் குபேரனால் கொடுக்கப்பட்டவனாதலின், அவனுக்கு நரவாணதத்தன் என்னும் பெயர் இடப்பட்டது. யூகியின் புதல்வனுக்கு மருபூதியென்றும், உருமண்ணுவாவின் புதல்வனுக்கு அரிசிகனென்றும், வயந்தகன் புதல்வனுக்குத் தவந்தகன் என்றும், இடவகன் புதல்வனுக்குக் கோமுகனென்றும் பெயர்கள் முறையே இடப்பட்டன. நகரத்தார் பலவாறு பாராட்டினர். பிள்ளைகள் நாளுக்கு நாள் பிறைபோல வளர்ச்சியடைந்தார்கள்.

அப்பால், [1]பதுமாபதி கருவுற்று ஒரு புதல்வனைப் பெற்றாள். அவனுக்குக் கோமுகன் என்னும் பெயர் இடப்பட்டது.

உதயணனால் அனுப்பப்பட்ட தூதர்கள் யூகியுடன் உச்சைனியை அடைந்து பிரச்சோதனனுக்கு இச் செய்தியைத் தெரிவித்தனர். தெரிவித்தவர்களுக்குப் பிரச்சோதனன் மிக்க சம்மானம் அளித்தான். தன்னுடைய ஆட்சிக்கு உட்பட்ட பதினாயிரம் நகரங்களில் உள்ளவர்

---

[1] இச்செய்தி வேறு நூல்களிலிருந்து அறிந்து எழுதப்பட்டது.

களையெல்லாம் வருவித்து அவர்களுக்கு நன்கொடை அளித்தனன்; விழா எடுப்பித்தனன். அப்பால் அவன் ஒருநாள் பேரத்தாணியிலிருந்து யூகியைக் கௌசாம்பிக்கு அனுப்ப எண்ணித் தன்னுடைய மந்திரிகளுள் மேம்பட்ட சாலங்காயனையும் யூகியையும் வருவித்து எதிரே இருக்கச்செய்து அவர்களுடைய கல்வியை அளத்தற்கு எண்ணி நீதிநூல் வாதம் செய்வித்தனன். அவ்விருவர்க்கும் வாதப்போர் நடந்தது. அப்போரில் யூகி வென்றனன். அப்பொழுது,

> "எற்ற முகத்தி னிறைவனும் விரும்பி
> நண்பின் மாட்சியுங் கல்விய தகலமும்
> பண்பின் ஒழுழிலும் படைத்தொழின் மாண்பும்
> காயு மாந்த ராயினும் யாதும்
> தீயவை கூறப் படாத திண்மையும்
> இவற்கல தில்லை யிவனாற் பெற்ற
> அவற்கல தில்லை யரசின் மாட்சி" (5·7 : 106-112)

என்று யூகியைப் பலபடப் பாராட்டிப் பரதகனென்னும் மந்திரியின் தங்கையாகிய திலகசேனையையும் சாலங்காயன் தங்கை யாப்பியையையும் அவனுக்கு மணம் செய்வித்து,

> "நவில்தொறு மினிய ஞானம் போலப்
> பயில்தொறு மினியநின் பண்புடைக் கிழமை
> உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள மின்புறப்
> பிரிவுறு துன்ப மெம்மாட் டெய்த (5·7 : 148-151)

கௌசாம்பி நகரஞ் செல்வாயாக. உதயணன் உன்னை அனுப்பும்படி தெரிவித்தமையாலேயே இப்பொழுது அனுப்பத் துணிந்தேன். உன்னைப்போன்ற நல்லொழுக்க முடையவர் உலகத்தில் உளரோ?" என்று கூறி உபசரித்து அனுப்பினன். அவன் கொடுத்த அருங்கல முதலியவற்றை முன்னர் அனுப்பிவிட்டு அவன் அளித்த பெருஞ் செல்வத்தோடு யூகி பின்பு புறப்பட்டுக் கௌசாம்பிக்குச் சென்றனன்.

சென்ற யூகி உதயணனைக் கண்டு பிரச்சோதனன் செய்த முகமன்களையும் பிறவற்றையும் கூற, உதயணன் மகிழ்வுற்றுத் தோழர்களோடு அளவளாவி அரசாட்சி செய்துகொண் டிருந்தனன்.

நரவாணதத்தன் நாள்தோறும் பெருகுதலுற்று மருபூதிமுதலிய நான்கு தோழர்களோடும் கூடித் தரும நூல் முதலியவற்றிலும் தனுர் வேதத்திலும் மிக்க பயிற்சியை உடையவனாகிக் காளைப்பருவம் உற்றுக் கொடைக்கடம் பூண்டு மிக்க மேம்பாட்டுடன் விளங்குவா னாயினன்.

அப்பொழுது அந் நகரத்தில் கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாகிய இரண்டாயிரத்தைந்நூறு கணிகையர் களுள் சிறந்தவளான கலிங்கசேனை என்பவளுடைய மகள் [1]மதனமஞ்சிகை என்பவள் தன்னுடைய மாடத் தின்மேல் உள்ள நிலாமுற்றத்தில் தோழிமாரோடு ஆடிய பந்துகளில் ஒன்று சாளரத்தின்வழியே வந்து, வீதியில் தோழர்கள் சூழ யானையின்மேல் செல்லும் நரவாணதத்த னுடைய மெல்லிய துகிலின்மேல் விழுந்தது. அதனை அவன் எடுத்துப் பார்த்து, "இதனை இட்டவள் யார்?" என்று யானையில் இருந்தபடியே எட்டிப் பார்த்தனன். பார்த்தபொழுது அங்கே காணப்பட்ட மதனமஞ்சிகை யின் அழகிய வடிவம் அவன் மனத்தைக் கவர்ந்தது. கவரவே மயங்கிச் செயலற்றிருந்து பின்பு அப் பந்தையே தனக்குத் துணையாகக்கொண்டு சென்று ஒரு சோலையில் இருந்து உடன்வந்த தன் தோழனாகிய கோமுகனை அழைத்து, "இப்பந்தை எறிந்த மங்கையை நீ அறிவாயாயில் சொல்ல வேண்டும்" என்று வினவினன். சித்திரவித்தையில் சிறந்த கோமுகன் அப் பந்தைக் கைக்கொண்டு சந்தனம் பூசிய கையால் அம் மங்கை அழுந்தப் பிடித்திருந்தமையின்

---

[1] மதனமஞ்சிகையென்பவள், கௌசாம்பியிலிருந்த தன மித்திரனென்னும் வணிகனுக்குக் கலிங்கசேனையென்பவள்பால் தோன்றியவளென்று உதிதோதயகாவ்யத்தால் தெரிகின்றது.

விரல் நிரைகளின் சுவடுகள் அதில் அழுந்தியிருந்ததை அறிந்து அவளுடைய வடிவம் முழுவதையும் மனத்தால் உணர்ந்து,

> 'விரலும் விரலிற் கேற்ற வங்கையும்
> அங்கைக் கேற்ற பைந்தொடி முன்கையும்
> முன்கைக் கேற்ற நன்கமை தோளும்
> தோளிற் கேற்ற வாளொளி முகமும்
> மாம்படு வடுவுறழ் மலர்நெடுங் கண்ணும்
> துப்பன வாயு முத்தொளி முறுவலும்
> ஒழுகுகொடி மூக்கு மெழுதுநன் புருவமும்
> சேடமை செவியும் சில்லிருங் கூந்தலும்' (5.8: 100-107)

ஆகியவற்றையுடைய ஒரு பெண்வடிவைப் படத்தினில் எழுதிக் கொணர்ந்து அப் படத்தை நரவாணதத்தனுக்குக் காட்டி, "இவ் வடிவத்தைப் போன்ற வடிவமுடையாள் இந் நகரத்தில் மதனமஞ்சிகை என்பவள்தான்" என்று சொல்லிவிட்டுப் பொற்பரிசங்களோடு அவள் வீட்டிற்குச் சென்று அவளுடைய நற்றாயைக் கண்டு நிகழ்ந்ததைக் கூறினன். கூறவே அவள், "வழிபடுதெய்வம் வரந்தருகின்றது" என்று சொல்லி விரும்பி உடன்பட்டனள். அவளுடைய சுற்றத்தார், "உதயணனுடைய அநுமதியைப் பெறாமல் அரசகுமாரனுக்கு இவளைக் கொடுத்தல் மிக்க தவறாகும்" என்று மறுத்தனர். கோமுகன் அதனை உதயணனுக்குத் தெரிவிக்க, அவன் பெரிதும் உவந்து வாசவதத்தையின் அநுமதி பெற்று நரவாணதத்தனுக்கு மதனமஞ்சிகையை நல்ல நாளில் மணம்புரிவித்தனன்.

அப்பால் கௌசாம்பிநகரத்தில் மிக்க சிறப்புடன் விழாவொன்று நடைபெற்றது. அக் காட்சியை விரும்பி வித்தியாதர நகரத்துள்ள நூற்றுப்பத்து அரசர்களுள் சிறந்தவனாகிய மானசவேகன் என்பவன் வந்து அந் நகரத்துச் சிறப்புக்களையெல்லாம் பார்த்துக்கொண்டு செல்லுகையில் அரண்மனையினுள்ளே செயற்கையாகிய நால்வகை நிலனும் சூழ்ந்த ஒரு சோலையினிடையே உள்ள கட்டுமலை ஒன்றன் சிகரத்தில் நின்று நகரில் நிகழும்

கிழாவணியைப் பார்ப்பவளாகிய மதனமஞ்சிகையைக் கண்டு வியந்து, அவளை எடுத்துக்கொண்டு தன் நகரஞ் செல்லுதற்குச் சமயம் பார்த்துக்கொண்டே இருந்தான். அவன் அப்படி இருக்கையில், நரவாணதத்தனும் மதனமஞ்சிகையும் ஒரு பூஞ்சோலையை அடைந்து அங்கேயுள்ள கொடிவீடொன்றைச் சார்ந்து மெல்லிய மலர்கள் பரப்பிய அணையில் அயர்ந்து நித்திரைசெய்தனர். அதனைக் கண்ட மானசவேகன் தன் மாயையால் நரவாணனை மிக நன்றாகத் துயிலும்படி செய்துவிட்டு மதனமஞ்சிகையை மட்டும் மெல்லத் தூக்கி எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் எழுந்து, "இன்று மிகச் சிறந்த அருமையான பொருள் ஒன்றைப் பெற்றோம்" என்று [1]மகிழ்வுற்றுச் சென்று தன் நகரை அடைந்து அவளைச் சிறந்ததோர் இடத்தில் மெல்ல வைத்தனன். அவள் துயிலுணர்ந்து எழுந்து நாற்புறத்தையும் பார்த்து, "இந்த இடம் மிகப் புதிதாக இருக்கின்றதே. இங்கே நாம் வந்ததற்குக் காரணம் யாது?" என்று கவலையுற்று மயங்கி வருந்துவாளாயினள். அப்பொழுது மானசவேகன் அவளை அடைந்து தன் விருப்பத்தைத் தெரிவித்தனன். அவள் உடன்படாமல் மறுத்தனள். மறுக்கவே அவன் ஏங்கி, "மதனமஞ்சிகையின் மனத்தை எப்படியாவது வேறுபடுத்திவிட்டு வா" என்று தன் தங்கையாகிய வேகவதியென்பவளை அவள்பால் அனுப்பினன். அவள் வந்து மானசவேகனது உயர்வை எடுத்துக் கூறி, "நீ என் தமையனுக்கு உரியவளாக இருப்பாயாயின் மிக்க இன்பத்தை அடைவாய்" என்று காரணங்காட்டிப் பலவாறு வற்புறுத்திக் கூறியபொழுது மதனமஞ்சிகை, 'அழகு, கல்வி, வீரம் முதலிய எல்லாவற்றிலும் மேம்பட்டுச் சிறந்து விளங்கும்என்னுடைய தலைவன் நரவாணதத்தனை இனி அடையேனாயின் யான் உயிரைநீத்தல் ஒருதலை" என்று மறுத்துக் கூறினள்.

---

[1] இதன் பின்னுள்ள கதைக்குரிய மூலப்பகுதி சிதைந்து போனமையின், உதிதோதயகாவ்யம் முதலிய வேறு நூல்களிலிருந்து படித்தறிந்து எழுதலாயிற்று.

அப்பால் வேகவதி தன் தமையனது கட்டளையை மறந்து நரவாணதத்தன்பால் வேட்கை மிகுந்து, "எப்படியும் அவனைக் கணவனாக விரைவில் அடைந்துவிட வேண்டும்" என்ற வேகமுடையவளாய் உடனே விமானம் ஊர்ந்து புறப்பட்டு வந்து கௌசாம்பியை அடைந்தனள். அப்போது நரவாணன் மதனமஞ்சிகையின் பிரிவாற்றாமல் வருந்தி மயங்கிச் சோலையெங்கும் அவளைத் தேடி அலமந்து உழலுதலைக் கண்டாள். கண்டு அவன் வடிவைப் பார்த்து மிக வியந்து விருப்பம் மிகப்பெற்று ஒரு விச்சை வலியால் மதனமஞ்சிகையின் வடிவத்தைத் தான் எடுத்துக் கொண்டு ஒரு கொடிவீட்டில் இருப்ப, அங்கே மதனமஞ்சிகையைத் தேடித் திரிந்துகொண்டிருக்கும் நரவாணன் வந்து கண்டு கவலையொழிந்து மிக்க பரபரப்புடன் அவளைத் தழுவி இன்புற்றான். பின்னர் அவன் ஐயுற்று, "நீ யார்?" என்ன, அவள் தான் இன்னாள் என்பதையும் தன் தமையனாகிய மானசவேகன் மதனமஞ்சிகையை விரும்பிக் கைப்பற்றிச் சென்றதையும் அவள் அவனுக்கு இணங்காமல் ஊணுறக்கமின்றி வருத்தமுற்றிருத்தலையும் தான் வந்ததற்குக் காரணத்தையும் கூறிப் பின்பு தனது உண்மை உருவத்தைக் காட்டினள். கண்ட நரவாணன் மகிழ்ந்து மதனமஞ்சிகையை மறந்து வேகவதிபால் அன்புற்றுக் காமபரவசனாகி அவளுடன் எப்பொழுதும் இருப்பானாயினன்.

இவர்கள் இப்படியிருக்க, மானசவேகன் சென்ற தங்கையைக் காணாகிப் பல இடங்களிலும் தேடிக் கொண்டு வந்து கௌசாம்பியைச் சார்ந்த சோலையில் இருக்கும் அவ்விருவரையுங் கண்டு சினமுற்று அவர்களைப் பற்றிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்றபொழுது இடைவழியில் நரவாணனைத் திடீரென்று கீழே தள்ளிவிட்டான். வேகவதி தன் விச்சைவலியால் அவனுக்கு யாதொரு துன்பமும் தோன்றாதபடி செய்வித்தனள். நரவாணன் வீழ்ந்த இடம் [1]சதானிக முனிவருடைய

[1]இவர் உதயணன் தந்தை.

தவப்பள்ளியாதலின், அம் முனிவருடைய மகிமையைக் கேட்டறிந்த அவன், தன் துன்பத்தை அவர் எப்படியும் தீர்த்துவிடுவார் என்று நிச்சயித்துச் சென்று அவரை அன்புடன் வணங்கினன். அவர் ஞானத்தால் அவனை இன்னனென்று அறிந்து, "உதயணனுடைய புதல்வனே! உனக்கு மங்களமும் அறிவும் உண்டாகுக" என்றனர். 'நம் தந்தையின் பெயரை இவர் எப்படி அறிந்தனர்?' என்று வியப்புற்ற அவன், "தேவரீர் யார்வர்?" என்று கேட்ட பொழுது அவர், "யான் உன்னுடைய தந்தையின் தந்தை" என்றதன்றித் தம் வரலாறு முழுவதையும் கூறினர். அவன், "வித்தியாதரர் உலக ஆட்சியை நான் பெறுதல் கூடுமென்று முன்னம் கேட்டுளேன். அதனைப் பெறுதற்கு உபாயம் யாது?" என்று கேட்ப அவர், "உன்னுடைய நகரம் அடைந்து உதயணன்பால் ஆகாயமார்க்கமாகச் செல்லுதற்குரிய விச்சையைப் பெற்று அதன் மகிமையால் அந்த ஆட்சியைப் பெறுவை" என்றனர். பின்பு நரவாணன் அவரை வணங்கி அவர் சொல்லியபடி கௌசாம்பியைச் சார்ந்து தன்னைக் காணுமல் தேடித் தேடி வருத்தமுற்றிருக்கும் தாய்தந்தையரை அடைந்து வணங்கி நிகழ்ந்தவற்றைக் கூறினன். உதயணன் அவனுக்கு மேற்கூறிய மந்திரத்தை உபதேசித்தனன். பின்பு நரவாணன் விமானம் ஊர்ந்து சென்று [1]விசயார்த்தம் என்னும் மலையின் தென்பாகத்திலுள்ள ஸ்ரீதரமென்னும் நகரத்தை அடைந்து அதன் கோட்டைவாயிலில் தங்கி இருந்தனன்.

அப்பொழுது ஒருவன் வந்து வணங்கி, "கந்தருவபுரத்தின் அரசனாகிய நீலவேகனுக்கு நாகதத்தை என்பவள்பால் தோன்றிய அநங்கவிலாசனி என்பவள், முன்னொரு நாள் துயிலும்பொழுது ஒரு சிங்கக்குட்டி பூமியி

---

[1]இது வித்தியாதரர்களுக்கு உறைவிடமாகிய ஒரு வெள்ளி மலை என்பர்.

லிருந்து வந்து தனக்கு மாலை சூட்டியதாகக் கனவொன் றைக் கண்டு அதனைத் தந்தைக்குத் தெரிவித்தனள். அவன் சுமித்திரரென்னும் முனிவரை அடைந்து வணங்கி அக் கனவைத் தெரிவித்து அதன் பயனை வினவினன். அவர், 'பூமியிலிருந்து தீரனான ஓர் இளைஞன் வந்து உன் மகளுக்கு மாலை சூட்டுவான். சூட்டியபின் அவன் இங்கே சக்கர வர்த்தியுமாகி எல்லா அரசர்களையும் அடக்கி ஆட்சிபுரிந்து விளங்குவான்' என்று விடையளித்தனர். அளிக்கவே உம் முடைய நல்வரவை நாடோறும் நோக்கிக்கொண்டே இருக் கும் அவன் நீர் இங்கே வந்ததை அறிந்து தன்பால் உம்மை அழைத்துவரும்படி கட்டளையிட்டனன்" என்று தெரி விக்க, நரவாணன் மகிழ்ந்து அவனுடன் அவ்வரசனை அடைந்து அவன் வேண்டுகோளின்படி அநங்கவிலாசனியை மணந்தான். மணந்து அங்கே தங்கியிருந்தபொழுது பழம்பிறப்பில் செய்த புண்ணியத்தின் பயன்கள் முறையே அவனை அடைவனவாயின. இந்திரன் கட்டளையால் தேவர்கள் வந்து அவனுக்கு நவநிதிகளையும் அளித்துச் சென்றனர். அவனது விறலை அறிந்த அவ்வுலகத்து அரசர் கள் எல்லோரும் வந்து வணங்கிப் பணிந்து திறைகொடுத்து அவன் கட்டளைப்படி ஒழுகுவாராயினர். அச் செய்திகளை அறிந்த மானசவேகன் மிகவும் அஞ்சித் தன்னிடம் இருந்த மதனமஞ்சிகையை அழைத்துவந்து நரவாணன்பால் சேர்ப் பித்துவிட்டு, "என் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்" என்று வேண்டினன். பின்பு அவன் தன் தங்கை வேக வதியையும் அன்புடன் நரவாணனுக்கு மணம் செய் வித்தனன்.

நரவாணன் தன் பிரிவால் வாட்டமுற்றிருந்த மதன மஞ்சிகையைத் தழுவி இனிய மொழிகளால் மகிழ்வித்து அவளோடும் வேகவதி, அநங்கவிலாசனி என்பவர்க ளோடும் பின்பு அங்கே மணஞ்செய்த எண்ணாயிரந் தேவிமாரோடும் இன்புறபவனாகி ஒற்றைச் செங்கோல் செலுத்திச் சக்கரவர்த்தியாகி அவ்வுலகை ஆண்டு வந்தான்.

அக் காலத்தில் தன்னுடைய இருமுதுகுரவர்களைத் தரிசிக்க வேண்டுமென்ற விருப்பம் அவனுக்கு உண்டாயிற்று. உண்டாகவே அவன் பரிசனங்களோடும் மனைவிமாரோடும் புறப்பட்டுக் கௌசாம்பி நகரம் அடைந்து தாய் தந்தையரை வணங்கினன். அவனுடைய பெருமையைக் கேட்டு அவர்கள் மகிழ்ந்தார்கள்.

அப்பால் நரவாணதத்தன் பதுமையின் புதல்வனை கோமுகனை இளவரசாக நியமிக்கும்படி தந்தையை வேண்டி அவ்வண்ணம் செய்வித்துவிட்டு விடைபெற்றுக்கொண்டு மனைவிமார் முதலியவர்களோடு வித்தியாதர உலகத்தை அடைந்து அரசாட்சி செய்துகொண்டு வாழ்வானுயினன்.

மனிதனுகப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாக விளங்கிய, அவனுடைய புண்ணிய மிகுதியை யாவரும் அறிந்து பாராட்டுவாராயினர்.

## ௬

## துறவுக் காண்டம்

உதயணன், தனக்கு ஒப்பற்ற யூகி மந்திரியானதும், வாசவதத்தை மனைவியானதும், வித்தியாதர சக்கரவர்த்தி யாக விளங்கும் நரவாணதத்தன் புதல்வனானதும், பிற நலன்களும் தவத்தின் பயனே ஆதலால், பின் தான் மேற் கொள்ளற்பாலது தவமே என்று துணிந்து செல்வத்தை வெறுத்தனன். அதனை அறிந்த தேவிமார் நீர் விளையாட்டு முதலியவற்றால் அவன் மனத்தை வேறுபடுத்தித் தம்மையே கருதி ஒழுகச்செய்ய, அவன் மனம் அந்த வழியில், சில நாட்கள் சென்றது. பின்பு ஒரு நாள் அவனுடைய பட்டத்து யானை மதங்கொண்டு புறப்பட்டு நகரை அழிக்கத் தொடங்கி யாருக்கும் அடங்காமல் பாகர் களையும் குத்துக்கோல்காரரையும் பிளந்தெறிந்தது. அதனால் நகரம் நடுங்கியது.

அக் காலத்தில் அந் நகரத்தை அடுத்த சோலை ஒன் றில் தவத்தால் சித்திபெற்ற சாரணர் பலர் வந்து தங்கினார் கள். அவர்களுக்குத் தலைவரான தருமவீரர் என்பவர் தம்மை அடைந்தவர்களுக்கு வழக்கப்படி அங்கே தருமோபதேசஞ் செய்துவருவாராயினர். அவ்வுபதேச மொழிகளை விலங்குகளும் பறவைகளும் கேட்பனவாய்த் தத்தஞ் செயல்களை மறந்து உணவொழிந்து தாம் செய்த பாவங்களை நினைந்து துன்புற்றவண்ணமாய் அடங்கி நின்றன. மேற்கூறிய பட்டத்து யானையும் இயல்பாகவே அங்கே வந்து அந்த அறவுரையைக் கேட்டுக் கோபம் நீங்கித் தன் பாவச்செயல்களுக்கு அஞ்சிக் கண்ணீர் உகுத்துக்கொண்டு யாதொரு கொடுஞ்செயலும் இன்றி அரண்மனை வாயிலில் வந்து நின்றது.

வாயில் காவலர் யானை வந்து அடங்கிநிற்பதை அரசனுக்குத் தெரிவிக்க, அவன் வந்து பார்த்து வியப்புற்று நிற்கையில் யூகி, "ஏதோ அறவுரையைக் கேட்டு இது பக்குவமுற்று அடங்கிநிற்கின்றதுபோலும்; இனி ஊர்ந்து செல்லுதற்கு இது தகுதியுள்ளது" என்றனன். உதயணன் அதன் பிடரியில் ஏறியபொழுது யானை அவனை மிக்க விருப்பத்துடன் தாங்கிக்கொண்டு சென்று மேற்கூறிய வனத்தை அடைந்து நின்றது. அரசன் அவ் வனத்தில் பெரியோர் பலர் வந்திருத்தலை அறிந்து இறங்கி வழிபாட்டுடன் சென்று தருமவீரமுனிவரை வணங்க, அவர் அவனுக்கு ஓர் இருக்கை அளித்துத் தருமோபதேசஞ் செய்தனர். அதனைக் கேட்ட அரசன் இன்புற்று, "இந்த யானையின் பண்டை வரலாறு என்ன?" என்று கேட்ப அவர், "சாலி என்பதொரு நாட்டில் கடகம் என்பதோர் ஊரிலுள்ள இடபகன் என்பவனும் அவன் மனைவி சாலி என்பவளும் இல்லறம் நடத்திக்கொண்டு வருகையில், அவன் பண்டைப் பாவ வசத்தால் அமரிகை என்னும் ஒரு கணிகை வயத்தனாய்க் குலவொழுக்கத்தை விட்டுவிட்டு மிக்க பாவச் செய்கைகளைச் செய்வானாயினன். இறந்த பின்பு அவனே இந்த யானைப் பிறப்பை அடைந்தனன். அதனால் இந்த யானை தருமங்களைக் கேட்டவுடன் கொடுஞ்செய்கைகளைத் துறந்து அடங்கிநின்றது" என்றனர்.

கேட்ட உதயணன் அதை நன்கு பாதுகாக்கும்படி பாகர்களுக்குக் கட்டளையிட்டு அதன் பக்கத்தை அடைந்து, "யானை அரசே! உனக்கு யான் செய்வித்த துன்பங்களைப் பொறுத்துக்கொள்" என்று சொல்லி அதனை அன்புடன் தைவந்து தன்னிடம் அடைந்தனன். அதன் வரலாற்றைக் கேட்ட யாவரும் வியப்புற்றுத் தருமோபதேசத்தின் பெருமையைப் பாராட்டினர்.

அப்பால் அரசனுக்கு வைராக்கியம் உண்டாக அவன் நரவாணதத்தனை வருவித்து, "நீ இந்த அரசாட்சியை

ஒப்புக்கொள். துறந்து தவம் செய்தற்கு என் மனம் விரைகின்றது" என்று சொல்ல, அவன் வணங்கி, "அடியேனுக்கும் அரசாட்சியில் சிறிதும் விருப்பம் இல்லை. துறத்தற்கே என் மனம் விரைகின்றது" என்று தன் கருத்தைத் தெரிவித்தான். பின் உதயணன் பதுமையின் புதல்வனாகிய கோமுகனை அழைத்து அவனுக்கு முடிசூட்டிவிட்டுச் சென்று தேவியருக்குத் தன் கருத்தைத் தெரிவித்தனன். அவர்களும் உடன்வந்து தவம் செய்வதாகக் கூறினர். யூகிமுதலிய மந்திரிகள் நால்வரும் வாசவதத்தை முதலிய தேவிமாரும் பிறரும் புடைசூழ்ந்துவர உதயணன் தவவனம் சென்று அங்கே தவம் செய்துகொண்டிருந்த தருமச்சுருதியென்னும் முனிவரைச் சரணம் அடைந்து துதித்து, "அடிகேள்! தவவழிகளை உபதேசித்து அடியேங்களை உய்வித்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தனன். அவர் சினதருமங்களை விரிவாக உபதேசித்தனர். உபதேசித்தபின்பு அவன் அப்பொழுது செய்ய வேண்டிய நியமங்களை முடித்துக்கொண்டு தியானாதிகளைச் செய்வானாயினன். தவவொழுக்கமும் ஒளியும் அவன்பால் சிறந்து விளங்கின.

பின்பு உதயணமுனிவன் யோகசமாதியைச் செய்து முடித்துச் சித்தபதத்தை அடைந்தான். தேவியரும் மந்திரிகளும் தவம் செய்து கற்பலோகத்தை அடைந்து இன்புற்று வாழ்ந்தார்கள்.

# அபிதான விளக்கம்

(அபிதானம் - பெயர்)

அச்சுவப்பெருமகன்: இவன் கேகயநாட்டின் அரசன்; குற்றமற்ற புகழை உடையவன்; முடியுடை மன்னன்; மிக்க வீரன்; பதுமாபதியை மணஞ்செய்ய விரும்பிக் கொடுத்தற்குரிய பரிசு முதலியவற்றுடன் வந்து அவள் தமையனாகிய தருசகனைக் கண்டு தன் கருத்தைக் கூறி அவனது உடன்பாட்டைப் பெற்று உடனிருந்த காலத்தில் அவனோடு போர்செய்தற்கு வந்த பகைவருடன் யுத்தம் செய்தற்கு வலிந்துபோய்ப் பொருது ஏலிச்செவி அரசனால் கொல்லப்பட்டவன்.

அடவி: இடவகனுக்குச் சீவிதமாக உதயணனால் கொடுக்கப்பட்ட நாடு.

அமரிகை: சாலிநாட்டிலிருந்த ஒரு கணிகை.

அரிசிகன்: உருமண்ணுவாவின் புதல்வன்.

அரிமான்: தருசகனோடு பகைமைகொண்டொழுகிய அரசர்களுள் ஒருவன்.

அருஞ்சுகன்: உச்சைனியில் இருந்த ஓர் அந்தணப் பிரமசாரி; வேத முதலியவற்றை ஓதியுணர்ந்தவன்; யாழ்வகையையும், பிற நூல்களையும் நன்கு அறிந்தவன்; கோடபதியென்னும் யாழைக் கண்டெடுத்து உதயணனிடம் கொடுத்தவன்.

அவந்தி: பிரச்சோதன அரசனுடைய நாடு; இதன் தலைநகர் உச்சைனி.

அனங்கவிலாசனி: கந்தருவபுரத்து அரசனான நீலவேகனது புத்திரி; நரவாணதத்தனால் மணம் செய்து கொள்ளப்பட்டாள்.

**ஆதித்தியதருமன்:** ஒரு வீரன்.

**ஆப்பியாயினி:** பதுமையின் பார்ப்பனத்தோழி; அவளோடு ஒருங்கு வளர்ந்தவள்; அவள் தனியே ஆலோசித்தற்குரிய உயிர்த்துணைவி; தோழமைக்குரிய இயல்புகளிற் சிறந்தவள்; இவளால் பதுமை அடைந்த பயன்கள் பல; உதயணனுடைய பார்ப்பனத் தோழனாகிய இசைச்சனென்பவனால் இவள் மணஞ் செய்து கொள்ளப்பட்டாள்; இப் பெயர் யாப்பியாயினி எனவும் வழங்கும்.

**ஆப்பியை:** சாலங்காயனுடைய தங்கை; பிரச்சோதன அரசன் விரும்பியபடி யூகிக்கு மணம் செய்விக்கப் பட்டாள். யாப்பியை யெனவும் வழங்கப்படுவாள்.

**ஆரியை:** பதுமையின் தோழி; அவளுடைய மனக் குறிப்பறிந்தே ஒழுகுபவள்; மிக்க மேன்மையை உடையவள்; பந்தடித்தலில் மிக்க ஆற்றல் வாய்ந்தவள்.

**ஆருணி அரசன்:** இவன் பாஞ்சாலதேசத்தரசன்: மிக்க பராக்கிரமத்தையும் மிக்க வீரியமுள்ள சேனையையும் உடையவன்; கோசல தேயத்தரசனை வென்று அவனது ஊரை அழித்து அவன் மகள் வாசவதத்தை முதலியவர்களைப் பிடித்துவந்து தன் உரிமைமகளிர்க்குத் தாதியர்களாக அமைத்தனன்; இவனுக்குக் கார்த்தவீரியனை உவமை கூறியிருக்கின்றனர்; இவன் பட்டத்து யானைக்கு மந்தரமென்று பெயர்; ஏயர்குலத்தாரோடு குலப்பகைஞனாதலின், அக் குல அரசாட்சிக்கு உரியனான உதயணன் சிறைப்பட்ட பொழுது, பெரும்படையோடு சென்று கோசம்பி நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டு முரசறைவித்துத் தன் கொற்றத்தை யாவர்க்கும் தெரிவித்து அந் நகரையே தனது இராசதானியாகக்கொண்டு ஆட்சி புரிந்தனன்; காளமயிடனென்னும் ஒற்றனால் பகைப்புலத்தே நிகழும் செய்திகளை அறிந்து

கொண்டே வந்தவன்; பூரணகுண்டலன் என்பவன் இவனுக்கு முக்கியமான மந்திரி; பின்பு உதயணன் வந்து செய்த பெரும் போரில் அவனால் கொல்லப் பட்டான்; அவனால் வெட்டுண்டபோது இவன் பால் அச்சக்குறிகள் சிறிதும் நிகழவே இல்லை; இவன் பாஞ்சால ராசன், பாஞ்சாலராயன் என்றும் வழங்கப் படுவான்.

ஆலங்கானம்: இப் பெயருடையவை இரண்டு: ஒன்று விபுலகிரியின் பக்கத்தில் மிருகாவதியின் தந்தை தவம் செய்துகொண் டிருந்த இடம்; மற்றொன்று, பூக்கொய்தற்கு வந்த பத்திராபதி என்னுந் தெய்வ மகள் யானையின் சேர்க்கையைக் கண்டு மனம் வேறு பட்டுப் பெண் யானையாகப் பிறக்கும்படி குபேரனால் சாபம் பெற்ற இடம்; இது விந்தமலையின் பக்கத்தே நருமதையாற்றங்கரையில் உள்ளது.

இசைச்சன்: இவன் உதயணனுடைய பார்ப்பனத் தோழன்; அவனுடைய அமைச்சனாகவுங் கூறப் படுவன்; இளமையில் இரு முதுகுரவரையும் இழந் தோன்; வாசவதத்தையையும் யூகியையும் இழந்ததனால் மிகுந்த கவலையுற்று மெலிந்த உதயணனைத் தேற்றி அவனை வேற்று வடிவங் கொள்வித்து மற்றைத் தோழர் களோடு இராசகிரியநகர்க்கு அழைத்துச் சென்றவன்; சென்றவிடத்துக் காமன் கோட்டத்தின் வாயிலில் காணப்பட்ட பதுமாபதி தன்னை விரும்பினாளென்று வேட்கையுற்ற உதயணனுக்கு மகததேயத்து பகளிரது நிறையுடைமையைக் கூறி அவனது காமவேகத்தைத் தணிவித்தவன்; அவன் பதுமாபதியின் கன்னிமாடத் தில் "வேற்று வடிவங்கொண்டு மறைந்திருந்த காலத்தில் மற்றத்தோழர்களோடு தானும் வேற்று வடி வங்கொண்டு அயலிடத்தில் இருந்து அவனைப் பாது காத்துவந்தோன்; தருசகனோடு பெரும்போர் புரிதற்கு வந்த பகைவருடன் போர் செய்தற்குச் சென்ற

உதயணனுக்குத் துணையாகச் சென்றவன்; ஒழுக்கினும் குலத்தினும் விழுப்பமிக்க ஆப்பியாயினி என்னும் அந்தணக் கன்னிகையை மணம் செய்து கொண்டவன்; மிக்க வருவாயையுடைய பல ஊர்களைச் சீவிதமாக உதயணன்பால் பெற்றவன்.

இடவகன்: உதயணனுடைய மந்திரிகளில் ஒருவன்; அவனுடைய உயிர்த்தோழன்; சூழ்ச்சி, வாய்மை, நன்றியறிவு, வீரம் இவை இவனுடைய சிறப்புக் குணங்கள்; மனம் குளிர்ந்து உதயணனால் பாராட்டப் பெற்ற பெருமை வாய்ந்தவன்; உஞ்சை நகரத்திலிருந்து பிறர் அறியாதபடி நேரே தனபால் தனியே வந்து வினவிய யூகிக்கு உதயணன் செய்தி முழுவதையும் கூறி மேலே ஆக வேண்டியவற்றை அவன் ஆராய்ந்து செய்யும்படி தூண்டியவன்; தருசகன் பொருட்டுப் பகைவரோடு போர் செய்தற்கு உதயணன் சென்றபொழுது அவனுக்குத் துணையாகப் பல வீரர்களுடன் சென்று போர் செய்து வெற்றி அடையும்படி செய்தவன்; உதயணனால் இவன் சீவிதமாகப் பெற்றவை, புட்பகமென்னும் நகரமும் சிறு நாடுகள் ஐம்பதும் பிற வருவாய்களும்; இவன் புட்பகத்தையே தலைநகராக்கி அரசாட்சி செய்து கொண்டிருந்து அழைத்தபொழுது சென்று உதயணனுக்கு வேண்டியவைகளைச் செய்து வருபவனாக இருந்தான்; பல தேயங்களையும் எளிதில் பார்த்து வருவதற்கு வாசவதத்தையோடு உதயணன் ஏறிச் சென்ற விமானத்தில் சென்றவர்களில் இவனும் ஒருவன்; இவன் பெயர் இடபகன் எனவும் வழங்கும்.

இரத்தினபுரம்: காந்தார நாட்டில் உள்ளதொரு நகரம்.

இராசகிரியம்: இது புகழ்பெற்றதும் மிக்க பழமையானதுமான ஒரு பெரிய நகரம்; பலவ்வகை நுகர்ச்சிகளை உடைமையாலும் அச்சத்தை விளைவித்தலாலும்

பவண லோகத்தையும், செல்வமிகுதியால் அமராவதியையும் ஒப்பது; மகதநாட்டின் தலைநகர்; இதன் புறத்தே யவனச்சேரிகள் நூறும், எறிபடைப்பாடிகள் நூற்றறுபதும், தமிழ்வீரர்களின் சேரிகள் ஆயிரமும், கொல்லர் சேரிகள் பலவும், மிலேச்சச் சேரிகள் பலவும், சித்திரசாலைகள் முதலிய பலவகை இடங்களும், தண்ணீர்ப் பந்தர் முதலிய பல தருமத்தானங்களும், பலவகைத் தேவாலயங்களும் இருந்தன; அழகிய அகழிகளாலும் பல உறுப்புக்கள் வாய்ந்த மதில்களாலும் சூழப்பெற்ற இதன் அகநகரில் பெரும்படைச்சேரி, போகச் சேரி, உழவர் சேரி, அந்தணர் சேரி, அமைச்சர் சேரி முதலியன அமைந்த வீதிகள் பலவற்றுல் சூழப்பெற்று இடையே விளங்கும் இராசமாளிகை, ஒரு தாமரை மலரில் பலவகை இதழ்கள் சூழப்பெற்ற பூம்பொகுட்டைப்போல விளங்கியது; இந் நகரத்தோர் யாவரும் தத்தம் குலவொழுக்கங்களில் சிறிதும் வழுவாமல் இருந்தனர்; இதன் அரசன் தருசகன் என்பவன்; உதயணன் பார்ப்பனப் பிரமசாரி வடிவம் கொண்டு தோழர் முதலியவர்களுடன் சில மாதங்கள் மறைந்திருந்து தருசகனுக்கு உதவி செய்து பின்பு அவனுடைய நட்பைப் பெற்று அவன் தங்கையாகிய பதுமையை மணந்து சில நாள் இதில் தங்கியிருந்தனன்; இஃது இராசகிரியெனவும் வழங்கும்.

இராசனை: பதுமையின் தோழி; மிக்க அழகுடையவள்; உதயணனது விருப்பின்படி இவளை உருமண்ணுவா மணம் செய்துகொண்டான்; பந்தாட்டத்தில் தேர்ச்சியுள்ளவள்.

இலாமயன்: ஓர் அந்தணன்; இனிய மொழியை உடையவன்; மந்திர வித்தையில் சிறந்தவன்; உதயணனுக்கு இவன்பால் நன்கு மதிப்புண்டு; இவன் இருந்த இடம் காளவனம் என்பது; "வாசவதத்தை தீக்கு இரையா

யினளே! இனி யாது செய்வேம்" என்று மிக்க வருத்தம் அடைந்து செயலற்றிருந்த உதயணன் இவன் இருந்த இடமும் தீக்கு இரையாயிற்றென்று தோழர் கூறினமையால் எந்தப் பொருளுக்கும் அழிவுண்டு என்பதை அறிந்து சிறிது ஆறுதலை அடைந்தான்.

இலாவாணகம்: இஃது உதயணனுக்கு உரிய பெரிய நகர்களுள் ஒன்று; பகைவர் வருதற்கு மிக அஞ்சும் பேரரண்கள் முதலியவற்றையும் இடையே மிக அழகியதான ஓர் அரண்மனையையும் உடையது; இதன் பக்கத்தே பலவகை வளமுள்ள ஒரு மலை உண்டு; அதன் சாரல் மிக்க இன்பம் பயப்பதாக இருந்தது; உண்டாட்டுக்கு உரிய பலவகை மரங்களையும் கொடிகளையும் உடைய பூஞ்சோலைகளும், சுனை முதலிய நீர்நிலைகளும், படமாடம் முதலியன அமைத்தற்குரிய இட விசேடங்களும் இச் சாரலில் இருந்தன; முனிவர் ஆச்சிரமங்களும் தேவாலயங்களும் மேற்கூறிய சோலைகளில் உண்டு; தவம் செய்துகொண்டிருந்த ஓர் அரசமுனிவருடைய புத்திரியாகிய விரிசிகை என்னும் கன்னியின் வேண்டுகோட்கு இரங்கி அவள் கொடுத்த பலவகை மலர்களைக் கண்ணி முதலியனவாகக் கட்டி உதயணன் சூட்டியது அச் சோலைகளுள் ஒன்றிலேதான்; அக் கன்னி வேறொன்றையும் அணியாமல் அம் மாலையுடனே இருந்து முயன்று உதயணனுக்குத் தேவியாயினள்: உருமண்ணுவாவிற்கு அவனால் கொடுக்கப்பட்ட சீவிதங்களுள் இந் நகரமும் ஒன்று; இஃது இலாவாணம் என்றும் வழங்கும்.

உஞ்சேனை: உச்சைனி நகரம்; உஞ்சையெனவும் வழங்கும்; இஃது அவந்திநாட்டில் உள்ளது; பிரச்சோதனனுடைய இராசதானி; மதில் முதலிய அரண்களாலும், சேனைகளாலும், பலவகைச் செல்வங்களாலும், சிற்ப அமைதிகளாலும் சிறப்புற்றது; குளிர்ச்சியும்

பலவகை நுகர்ச்சியும் இதில் அதிகம்; அகநகர் புற நகர்களின் பாகுபாடுகளினால் மிக்கது; யாதொரு குற்றமும் இல்லாதது; சத்துரு பயம் இதற்கு இல்லை; இதில் வாழ்வோர் பெரும்பாலும் முருகக்கடவுளை வழிபடுவார் என்று தெரிகிறது; இது பெருநகர், மாநகர் எனவும் வழங்கப்படும்; இதன் அயலில் மகாகாளவனம் அல்லது காளவனம் என்ற ஒரு தவ வனமும், அதில் ஒரு காளிகோயில் முதலியனவும், ஒரு நதியும், அந் நதி பாயப்பெற்று ஒரு யோசனை அளவுள்ளதான ஒரு பொய்கையும் உண்டு; அந் நதியின் இரு கரையிலும் அப் பொய்கைக் கரையிலும் இந் நகரத்தார் வருடத்திற்கு ஒருமுறை நீர்விழா அயராநிற்பர்; உதயணன், வஞ்சனையால் பிடிக்கப்பட்டுச் சிறையில் இருந்தது முதல் வாசவதத்தையை அவன் பிடிமேல் ஏற்றிச்சென்றது இறுதியாகவுள்ள கதைப்பகுதி இந் நகரில் நிகழ்ந்தது. இந் நகரம் அவந்தியென்றும் கூறப்படும்; இது முத்தி நகரம் ஏழனுள் ஒன்று; பழைய நூல்களாலும் சிலாசாசனங்களாலும் இதில் சைன முனிவர் பலர் இருந்ததாகத் தெரிகிறது; வடநூல்கள் பலவற்றிலும் சிலப்பதிகாரம், யசோதரகாவியம் முதலிய தமிழ்நூல்களிலும் மிகப் பாராட்டப்பட்டுள்ளது; உச்சைனிமகாகாளமென்னும் ஒரு சிவக்ஷேத்திரம் இதில் உண்டு.

உதயணன்: இவன் இந் நூல் கதாநாயகன்; குருகுலத்தில் பிறந்தவன்; சதானிகனுக்கு மிருகாவதிபால் தோன்றியவன்; இவன் நாடு வத்தவநாடு; இராசதானி கோசம்பி நகர்; சூரியோதயகாலத்தில் பிறந்தது பற்றி இவனுக்கு இப் பெயர் அமைந்தது; தேவியர் வாசவதத்தை முதலிய நால்வர்; தன்னிகர் இல்லாதவனை தொடர்நிலைச் செய்யுட்குத் தலைவனாக இருத்தல் வேண்டுமென்று ஆன்றோர் கூறியதற்கு ஏற்பக் கல்வி முதலிய சிறப்பியல்புகள் பலவற்றாலும் ஒப்பற்ற

விளங்கியவன் இவன்; அரசர்க்கு அரசனென்றும், ஏகச்செங்கோலினன் என்றும் இவன் வழங்கப்படு வான்; இவனுடைய தாய்மரபு, தந்தைமரபு இரண்டும் மிகப் புகழ் பெற்றவை; தந்தையின் குலம் குருகுலம்; தாயின் குலம் ஏயர் குலம்; இவன் இந்த இரண்டு குலத்திற்கும் உரிமை பூண்டு விளங்கினான்; ஏயர் குடிக்கும் சேதிநாட்டிற்கும் உரியவர் இவன் தாய் மர பினர்; வத்த நாட்டிற்கும் குருகுலத்திற்கும் உரியவர் இவன் தந்தை மரபினர்; இயற்கை அழகிலும் செயற் கை அழகிலும் சிறந்தவன்; மிக்க இளமைப் பருவத்தி லேயே பலவகைக் கலைகளையும் பழம்பிறப்பில் செய்த தவத்தால் முற்றக் கற்றுத் தேர்ந்தோன்; விற்படை முதலியவற்றிலும், யானையேற்றம் முதலியவற்றிலும் யாழ் விச்சையிலும் வல்லுநன்; விற்படை முதலிய வித்தைகளைக் கற்பித்தலிலும் சிறந்தவன்; இது பற் றியே ஆசான், தேசிகன் என்னும் சிறப்புப் பெயர் களுக்கு உரியனாக இவன் விளங்கினான் என்றும், விச்சைவீரன் என்று சிறப்பித்துப் பாராட்டுதற்கு உரியனாக இருந்தான் என்றும் தெரிகின்றன; செல் வத்துள் செல்வமாகிய கேள்விச்செல்வம் இவன்பால் அமைந்திருந்தது; இன்னும் இவன் யானையை அடக் கும் ஆற்றல் உடையான் என்றும், யானை இலக்க ணத்தை நன்கு அறிந்தவன் என்றும், யானைப் பேச்சில் வல்லவன் என்றும் கருதப்படுகிறான்; பிரச்சோதன னுடைய பட்டத்துயானையாகிய நளகிரி என்பது மத வெறி கொண்டு திரிந்து ஒருவருக்கும் அடங்காமல் உஞ்சைனை நகரத்தைப் பாழ்படுத்தியபொழுது அவன் வேண்டுகோட்கு இரங்கிச் சிறையினின்றும் சென்று அதனை மிக எளிதில் அடக்கியதுபற்றியே அவனா லும் மற்றையோராலும் மிக மதிக்கப்பட்டு விளங் கினான்; இதனாலேதான் பிரச்சோதனன் உஞ்சைனை நகரில் குஞ்சரச் சேரியிலுள்ள மாளிகையை இவ னுக்கு இருப்பிடமாய் அமைத்தனன்; இவனுடைய

யாழின் பெயர் கோடபதி என்பது; அஃது எக்காலத்தும் தன் தன்மை திரியாதது; அஃது இந்திரனால் பிரமசுந்தர முனிவருக்கும், அவரால் இவனுக்கும் கொடுக்கப்பட்டது; அதன்பால் இவனுக்கு மிக்க அன்பு உண்டு; யாழிற்குரிய மரங்களின் இயல்பையும் நரம்புகளின் இலக்கணங்களையும் இவன் நன்கு அறிந்தவன்; அதிவிசித்திரமான கண்ணி கட்டுதலிலும், வாழைக் குருத்தில் நகத்தினால் பொய்கை முதலிய பலவகையான சித்திரங்கள் பொறித்தல் முதலியவற்றிலும் வல்லவனாக இருந்தான்; தன்னைச் சுமந்துவந்த பிடி இறக்குந் தருணத்தில் நற்கதி அடையுமாறு பஞ்சமந்திரத்தை அதன் காதில் ஓதினன் என்று தெரிதலாலும், பிறவற்றாலும் இவன் மந்திரவித்தையிலும் வல்லவனென்று தெரிகிறது; ஒவ்வொன்றையும் ஆராய்ந்தே தெளிபவன் இவன்; இடவகன், உருமண்ணுவா, யூகி, வயந்தகன் என்னும் நான்கு முக்கிய மந்திரிகளும், வேறு பல மந்திரிகளும் இவனுக்கு உண்டு; அவர்கள் இவனுக்காகச் செய்த உதவிகள் மிகப்பல; இந் நால்வரும் இவனுடைய தோழர்களாகவும் விளங்கினார்கள்; அவர்களிடத்து இவனுக்கு விசேஷ அன்பு உண்டு; மேற்கூறிய மந்திரிகளாகிய தோழர்களையன்றி இசைச்சன் முதலிய அன்புடைய தோழர்கள் பலர் இவனுக்கு இருந்தார்கள்; அறப்போரிலும் மறப்போரிலும் பேராற்றல் உடையவன்; குறித்த இலக்கை ஊடுருவிக்கொண்டு அப்பால் உள்ளவற்றையும் துளைத்து உருவும்படி எய்யவல்ல இராமன், ஓரி என்பவர்களைப்போல் அம்புகளை எய்யும் வீரருள் வீரனாக இவன் விளங்கியதுபற்றி வல்வில்லியென்றும் பாராட்டப்படுவான்; நன்றியறிவில் சிறந்தவன்.

உதயையோடை: இவள் பதுமாபதியின் நற்றாய்; சிவமதியின் சகோதரி; காசியரசன் மனைவி.

உருமண்ணுவா: இவன் பலவகைப் பெருமையும் வாய்ந்த உயர்குடியில் பிறந்தவன்; உதயணனுடைய மந்திரி

கள் நால்வருள்ளும் அவன் உயிர்த்தோழர்களுள்ளும் ஒருவன்; வயந்தகனுடன் சேர்ந்தே பெரும்பாலும் வழங்கப்படுவான்; யூகிக்கு அடுத்தபடி என்னும் பெருமை வாய்ந்தவன்; சேனைகளைப் போரில் நடத்துவதில் மிக்க ஆற்றல் உள்ளவன்; எந்தச் சமயத்திலும் மனநடுக்கம் கொள்ளாதவன்; மிக்க புகழினன்; நட்பு, ஊக்கம், வீரம், பகைவர்க்கு அஞ்சாமை, காலம், இடம், முதலியவற்றை நன்கு ஆராய்ந்தே ஒவ்வொன்றையும் செய்யத் துணிதல், நன்றியறிவு முதலியவை இவன்பாலுள்ள விசேட குணங்கள்; வாசவதத்தையை வலிந்து கொண்டுவந்த உதயணனை மிக்க உபசாரத்துடன் வரவேற்று அழைத்துச் சென்று சயந்தி நகரில் அவளை அவனுக்கு மணஞ்செய்வித்து வேண்டியவற்றைக் குறிப்பறிந்து அளித்து அவனுக்கு யாதொரு கவலையும் இல்லாதபடி பாதுகாத்து மகிழ்வித்து வந்தோன்; அவளைப் பிரிந்து வருந்திய அவனுக்கு அடிசில், உடை முதலியவற்றைக் கொடுக்கும்படி தோழர்களால் நியமிக்கப்பெற்ற உண்மை அன்பினன்; இராசகிரிய நகரத்தில் உதயணன் மறைந்திருந்தபொழுது தாமும் மறைந்து அவனைப் பாதுகாத்து வந்தவர்களில் இவனும் ஒருவன்; உதயணனுடைய வாழ்வைக் கருதித் தன்னுடைய உயிர்க்குச் சிறிதும் இரங்காமல் போரில் அவனுக்கு முன் சென்று பகைவரால் சிறைப்படுத்தப்பட்டோன்; கோசம்பி நகரத்தைப் பெற்ற பின்பு தன் பிரிவாற்றுமல் வருந்தி, "இருமணமெய்திய இன்பமெல்லா, முருமண்ணுவாவினையுற்றதற் பின்னை" என உதயணனால் கூறப்பெற்ற உத்தம சீலன்; மறைந்திருந்த யூகியின் கருத்தைத் தான் அறிந்துகொள்ளுதற்கும் தன் கருத்தை அவனுக்குத் தெரிவித்தற்குமாகச் சாதகனென்னும் ஓர் அன்பனை இடையே வைத்துக்கொண்டு சில முக்கியமான காரியங்களை முடித்தவன்; மிகவும் சிக்க

லான வழக்கைத் தீர்த்தலில் வல்லவன்; உதயணன் விருப்பத்தின்படி பதுமாபதியின் தோழியாகிய இராசனை என்பவளை மணம் செய்துகொண்டோன்; பல பரிவாரங்களினிடையே உதயணன் தன் கையினால் அலங்கரித்து அளித்த ஏனாதி மோதிரமும் சேனாபதிப் பட்டமும் பெற்றதன்றி, சயந்தி, இலாவாணகம் என்னும் பெரிய நகரங்களையும் அவற்றைச் சூழ்ந்த இடங்களையும் மிக்க வருவாயை உடைய பல ஊர்களையும் சதுரங்கப் படைகளையும் பெற்றவன்; துறவறம் பூண்டு தவம் செய்துகொண்டிருந்த தன் தந்தைக்கு யாதொரு துன்பமும் நேராதபடி வேண்டியவற்றை அளித்து வழிபாடு செய்து ஒழுகியவன்; கருவுற்ற வாசவதத்தையுடன் விமானமேறி ஆகாயவழியே சென்ற உதயணனோடுகூடச் சென்றவர்களில் இவனும் ஒருவன்; இவனுடைய புதல்வன் பூதியென்பான்.

எலிச்செவி: தருசகனோடு பகைமைகொண்ட அரசர்களுள் ஒருவன்.

ஏயர் குலம் (ஏகயர் குலம்): இது மிருகாவதியின் தந்தை குலம்.

ஐராபதி: இவள் பதுமாபதியின் செவிலித்தாயின் மகளும் அவள் உயிர்த்தோழியுமாக உள்ளவள்; கூனிய உருவம் உடையவளாதல்பற்றிக் கூனியெனவும் வழங்கப்படுவாள்; இராசகிரியத்தில் காமன் கோட்டத் தயலில் பதுமாபதியைக் கண்டு மயங்கி வினவிய உதயணனுக்கு அவள் வரலாறுகள் யாவற்றையும் சொல்லி அவனுக்கும் அவளுக்கும் தான் இடையே நின்று இருவர் கருத்தையும் முற்றுவித்தவள்; கூர்த்த மதியினள்; எதையும் மந்தணமாக முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவள்; பந்தடித்தலில் மிக்க வல்லமை உடையவள்; இப் பெயர் அயிராவதி எனவும் வழங்கும்.

கடகன்: உதயணன் தம்பி; பிங்கலகடகர் என்பதைப் பார்க்க.

கருப்டாசம்: ஒரு காட்டாறு.

கலிங்கசேனை: கோசம்பி நகரிலுள்ள தலைக்கோல் பட்டம் பெற்ற இரண்டாயிரத்தைந்நூறு கணிகைமார்களுள் ஒருத்தி; குற்றமற்ற கற்புடையவள்; மதனமஞ்சிகையின் தாய்.

காகதுண்டகன்: இராசகிரிய நகரின் புறத்ததாகிய சோலை ஒன்றிலுள்ள ஒரு பெரியவன்; தோற்றப்பொலிவுள்ளவன்; வாசவதத்தை இறந்துவிட்டாளே என்று கவலைக்கடலில் அழுந்திச் செயலற்றிருந்த உதயணன் கவலையை மாற்றியவன்.

காசியரசன்: இப் பெயரினர் இருவர்; (1) பதுமாபதியின் தந்தை; உதயையோடை என்பவளுடைய கணவன்; மிக்க சேனையை உடையவன் (2) நீலகேசி என்பவளுடைய தந்தை.

காஞ்சனமாலை: வாசவதத்தையின் உயிர்ப்பாங்கி; அவளுடைய கண்மணிபோன்றவள்; பேரழகினள்; சுவை பயக்கும் இனிய மொழியினள்; தலைவியின் குறிப்பறிந்து நடப்பவள்; வாசவதத்தையின் கருத்தை இவள்போல் அறிந்து நடப்பவர்கள் இல்லை; அவளுக்கு மனக்கலக்கம் நேரும்போதெல்லாம் தக்க பரிகார மொழிகளை மெல்லக் கூறித் தெருட்டுபவள்; அவள்பால் உண்மை அன்புடையவள்; அவளுடைய இன்பக்காலத்தும் துன்பக்காலத்தும் பிரியாதவள் இவள்; பந்து விளையாட்டில் மிக்க பயிற்சியுள்ளவள்; இவள் பெயர் காஞ்சனை, கஞ்சனமாலை எனவும் வழங்கும்.

காம்போசம்: சிறந்த குதிரைகள் பிறக்கும் தேயத்துள் இஃது ஒன்று.

காளவனம்: இப் பெயருடைய வனம் இரண்டு; உஞ்சை நகரின் புறத்தே உள்ளது ஒன்று; இது மகாகாள வனம் என்று வேறு நூல்களில் கூறப்படும்; மற்றொன்று உதயணன்பால் மிக்க அன்புடையவனாகிய இலாமயன் என்பவன் இருந்த வனம்.

கும்பன்: இவன் ஆருணியரசனுக்குக் கண்மணிபோன்றவனும் திண்ணிய அறிவை உடையவனுமாகிய ஒரு வீரன்; பஞ்சால ராசன் இறந்த பின்பு கோசம்பி நகரத்தே கொல்லப்பட்டான்.

குருகுலம்: சைன நூல்களில் கூறப்படும் ஐவகைக் குலத்துள் ஒன்று.

கோசம்பி (கௌசாம்பிநகரம்): இஃது ஆதியில் குசாம்பன் என்னும் அரசனால் உண்டாக்கப்பட்டது என்பர்; இது வத்தவநாட்டின் தலைநகர்; யமுனையாற்றைத் தன்பால் உடையது; உதயணனது இராசதானி; இதிலிருந்து அரசாட்சி செய்துவந்த உதயணன் சிறைப்பட்டு உஞ்சை நகர்க்குச் சென்றபொழுது பகைவனாகிய பாஞ்சால தேசத்தரசனால் இது கைக்கொள்ளப்பட்டது; அப்பால் அவனைக் கொன்ற உதயணனால் ஆளப்பட்டது; வாசவதத்தையை உதயணன் மணம் செய்துகொண்ட பின்பு உஞ்சை நகரத்தாரும் இந் நகரத்தாரும் மனக்கலப்புடையவராய்த் தானியங்களையும் நாணயங்களையும் வேறுபாடின்றி வழங்குவாராயினர்; இந் நகரில் சிறந்த விழவொன்று நடந்ததாகத் தெரிகிறது.

கோசலத்தரசன்: இவனது இயற்பெயர் தெரியவில்லை; இவன், பிரச்சோதனனுடைய முதல் மனைவியின் சகோதரி கணவன்; ஒருபொழுது பாஞ்சால வேந்தன் படையெடுத்து வந்து இவனை வென்று இவன் மகள் வாசவதத்தையையும் அவளுடைய ஆயத்தாரையும் கவர்ந்துசென்று தன்னுடைய தேவிமார்களுக்குப் பணிப்பெண்களாக நியமித்தனன்; அவனை

வென்ற உதயணன் அம் மகளிரைத் தன் தேவியர்க்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு வாசவதத்தை (மானனீகை) என்பவளை மணம் செய்துகொண்டனன்.

கோசிகன்: கோசம்பி நகரத்திருந்த ஒரு நிமித்திகன்; யமுனையில் வீழ்த்துவதற்குக் கொண்டுபோகப் பட்ட சாங்கியத்தாயைக் காப்பாற்ற நினைந்த உதயணன் வினவியபொழுது அவளுடைய வருங்காலச் செய்தியை நன்கு கூறியவன்.

கோடபதி: இஃது உதயணனுடைய யாழ்; யாழ்வகையில் பேரியாழின்பால் படும்; பிரமசுந்தரர் என்னும் முனிவரால் உதயணனுக்கு யாழ்வித்தையுடன் கொடுக்கப் பட்டது; தெய்வத்தன்மை வாய்ந்தது; அவன் இதனைக் கற்பிக்கும்பொழுதுதான் வாசவதத்தையின் அன்பைப் பெற்றான்; அவ்விருவருக்கும் இதன்பால் அன்பு அதிகம்.

கோபாலகன்: இவன் பிரச்சோதனன் பட்டத்தேவிமாருள் ஒருத்தியின் புதல்வன்; இவன் வாசவதத்தையின் சகோதரன் அல்லன்; உதயணனுடைய விரோதிகளாகிய இருபதின்மரை வென்றனன்.

கோமுகன்: இப் பெயருடையார் இருவர்; ஒருவன் இடவகனுடைய மகன்; உதயணனுக்குப் பதுமாபதிபால் தோன்றியவன் மற்றொருவன்.

கௌசாம்பி: கோசம்பியைப் பார்க்க.

சங்கமன்னர்: தருசகனோடு போர்செய்தற்கு வந்த எலிச்செவியரசன் முதலியோர்.

சங்கரன்: தருசகனுடன் போர்செய்தற்கு வந்த அரசர்களுள் ஒருவன்.

சண்பைநகர்: அங்கநாட்டில் உள்ளதொரு பெரிய நகரம்; எல்லா வளத்திலும் மிகச் சிறந்து விளங்குவது;

உக்கிரகுலத்தரசனாகிய விசையவரன் என்பவனால் பாதுகாக்கப்பட்டுவந்தது; இந்த நகரத்தில் மித்திர காமன் என்னும் ஒரு வணிகர்பெருமான் வீட்டில் யூகியும், வாசவதத்தை, காஞ்சனமாலை, சாங்கியத்தாய் என்னும் மூவரும் தம்மைப் பிறர் அறியாதபடி வேற்றுவடிவம் கொண்டு அவனால் பாதுகாக்கப்பட்டுத் தங்கியிருந்தனர்.

சத்தியகாயன்: இவன் தருசகன் மந்திரிகளுள் ஒருவன்; ஆருணி அரசனோடு போர்செய்தற்கு உதயணன் புறப்பட்ட காலத்தில் அவனுக்குத் துணையாகத் தருசகனால் அனுப்பப்பட்ட வீரர்களில் ஒருவன்; அப் போரில் இவன் இறந்ததுபற்றி இவன் மக்களுக்கு உதயணன் சீவிதங்கள் அளித்து மிக மேம்படுத்தினன்.

சதாணிகன்: குருகுலத்தில் பிறந்த அரசன்; உதயணன் தந்தை.

சயந்தி: உதயணனுடைய ஆட்சிக்கு உட்பட்டதொரு பெரிய நகரம்; இதனை உருமண்ணுவா பாதுகாத்து வந்தனன்; உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் இந் நகரத்திலேதான் விவாகம் நடந்தது; இது மருத நிலவளத்தால் சிறந்தது; இதன் பக்கத்தே மிக அழகிதான மலை ஒன்று உண்டு; இந் நகரில் வாசவ தத்தையோடு உதயணன் பல நாள் கவலையின்றி வாழ்ந்திருந்தனன்; இந் நகரமும் வேறு சில இடங் களும் உருமண்ணுவாவுக்கு உதயணனால் சீவிதமாக அளிக்கப்பட்டன.

சாங்கியத்தாய்: இவளது இயற்பெயர் தெரியவில்லை! கோசம்பி நகரத்தில் பார்ப்பன குலத்தில் பிறந்த இவளை மணந்த கணவன் இளமையில் நீங்கியதுபற்றி இவளுக்கு ஒழுக்கத் தவறு ஒருபொழுது உண் டாயது; அது தெரிந்த அதிகாரிகளுடைய கட்டளை யால் யமுனையாற்றில் இவளை வீழ்த்திவிடுவதற்குச்

சிலர் கொண்டு செல்வதைக் கண்ட உதயணன் இரங்கி விடுவித்துத் தீர்த்தயாத்திரை செய்யும்படி அனுப்பினன்; அப்பால் இவள் கங்கையாடி இமயமலையில் சென்று இரண்டு வருடம் அங்கே தங்கி ஆண்டுள்ள பெரியோரால் சமய விகற்பங்களை அறிந்து கன்னியாகுமரியில் நீராடுவதற்கு யாத்திரையாளரோடு அங்கிருந்து புறப்பட்டு உஞ்சை நகருக்கு வந்தபொழுது, இவளுடைய கல்வி, அறிவு முதலியவற்றை அறிந்த பிரச்சோதனன் தன் பட்டத்துத் தேவியாகிய ஸ்ரீமதிக்கு நீதிகள் முதலியவற்றைச் சொல்லும்படி இவளை நியமித்தனன்; இவள் அதனைச் செய்துவருகையில் ஒரு பிராயத்தினளாக இருந்த வாசவதத்தை இவளிடத்து அன்பு வைத்ததை அறிந்த பட்டத்தேவி அவளுக்குச் செவிலித்தாயாயிருக்கும்படி வேண்ட இவள் அங்ஙனமே இருந்து வந்தனள்; சாங்கிய சமயத்தை மேற்கொண்டமையாலும் வாசவதத்தைக்குச் செவிலித்தாயாக இருந்தமையாலும் சாங்கியத்தாயென்று இவள் வழங்கப்படுவாள்; வாசவதத்தைபால் இவளுக்கிருந்த அன்பிற்கு எல்லையில்லை; தன் உயிரைக் காப்பாற்றியதுபற்றி உதயணன்பால் இவளுக்கு மிக்க அன்புண்டு; வாசவதத்தையையும் உதயணனையும் அவனைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றுதற்கு அவ்வப்பொழுது தன் வருத்தத்தைப் பாராட்டாமல் இவள் செய்துவந்த முயற்சிகள் மிகப்பல; தாயைக் காட்டிலும் அன்புவைத்து உதயணன் இவளை ஆதரித்து வந்தான்; தாயெனவும், செவிலியெனவும், சாங்கிய முதுமகள் எனவும் இவள் வழங்கப்படுவாள்.

சாங்கியமுனி: இவன் பல மாணாக்கர்களுடன் தீர்த்தயாத்திரை செய்துகொண்டிருந்த ஒரு பண்டிதன்; சாங்கியத்தாய்க்குப் பல சமயக் கொள்கைகளை அறிவுறுத்தி அவளை நல்வழிப்படுத்தியவன்.

சாண்டியன்: காந்தார நாட்டில் இரத்தின புரத்திலிருந்த ஓர் அந்தணன்; இது படைத்துக்கோட் பெயர்; அந்தண வடிவமுற்று மாணகனென்னும் பெயர் கொண்டு இராசகிரியத்தில் இருந்தபொழுது உதயணன் இப் பெயரை உடையவன் மகன் என்று தன்னைக் கூறிக்கொண்டனன்.

சாதகன்: இவனுடைய ஊர் கோசம்பி நகரம். சாதியால் குயவன்; உதயணன் சிறைப்பட்டுச் சென்றபொழுது அது பொருமல் வேறு வடிவங்கொண்டு தானும் கூடன்சென்று உஞ்சைநகரின் பக்கத்தில் உள்ள தோர் ஊரில் ஒரு வீட்டில் இருந்து உதயணனுக்கு வேண்டிய அநுகூலங்களைப் பிறர் அறியாமல் செய்துவந்தவன்; மறைந்திருந்த யூகிக்கு உயிர் நட்பாளர்களாய் அவனுடன் இருந்த வீரர் பதின் மருள் ஒருவனாகவும் இருந்தவன்; இராச விசுவாசத் தில் சிறந்தவன்; வாசவதத்தையைப் பிடிமீது ஏற்றி உதயணன் புறப்பட்ட பின்பு சாங்கியத்தாய் இவன் வீட்டிலே இருந்துதான் யூகியைச் சந்தித்துப் பேசினள்; யூகிக்கும் உருமண்ணுவாவுக்கும் இடையே நின்று பிறர் அறியாமல் ஒருவர் கூறுவன வற்றை மற்றொருவரிடம் சொல்லிக் காரியங்களை நிறைவேற்றியவன்; ஆருணியைக் கொன்று வெற்றி யடைந்த பின்பு உதயணனால் இலாவாண நகரத்தில் பெருங்குயமென்னும் பட்டத்தையும் சீவிதமாக இரண்டு ஊர்களையும் பெற்றான்.

சாலங்காயன்: இவன் பிரச்சோதனனுடைய பதினாறாயிரம் மந்திரிகளுள் முதல் மந்திரி; யாராலும் தணிக்க முடியாத அரசன் கோபம் இவனுடைய சொற்க ளால் தணியும்; பேரமைச்சன் என்றும் வழங்கப்படு வான்; அவனது கட்டளைப்படி மாய யானையைக் காட்டி உதயணனை வஞ்சித்துப் பிடித்துக் கொணர்ந்து உஞ்சை நகரில் சிறை செய்வித்தவன்; தருக்கநூல் முதலியவற்றில் மிக்க தேர்ச்சியை உடையவன்; வாசவ

தத்தையை உதயணன் பிடிமீதேற்றித் தன்னகர் சென்றான் என்பது கேட்டுக் கடுஞ்சினங்கொண்டு அவனைப் பிடித்துவரும்படி சேனைகளை அனுப்பத் தொடங்கிய பிரச்சோதனனை நோக்கிச் சில நியாயங் களை இவன் சொன்னமையால் அவன் அச் செயலை நிறுத்தினன்; யூகியைத் தன் நகருக்கு அழைத்த பிரச் சோதனனுடைய விருப்பத்தின்படி யூகியோடு நூல் களில் வாதம் செய்து தோல்வியுற்றவன்; தன் தங்கை ஆப்பியை என்பவளை அரசன் வேண்டுகோளால் யூகிக்கு மணம் செய்வித்தோன்.

சாலி: இடபகன் மனைவி; ஒரு நாட்டின் பெயராகவும் உள்ளது.

சித்திராங்கதன்: எலிச்செவியரசன் தம்பி; தருசகனுக்குப் பகைவன்; மகத நாட்டில் நடந்த போரில் பிடித்து உதயணனால் சிறையில் வைக்கப்பட்டுச் சில நாள் சென்றபின் தருசகனால் விடுவிக்கப்பட்டான்.

சிந்து: இப் பெயருள்ள நதிகள் இரண்டு; ஒன்று இமயத் திலும் மற்றொன்று மேருவிலும் தோன்றும்.

சிவமதி: இவள் தருசகன் தாய்; உதயையோடையின் சகோதரி; அவள் மகளாகிய பதுமாபதியை அபி மானித்து வளர்த்து வந்தவள்.

சிவேதன்: இவன் பிரச்சோதனனுடைய மந்திரிகளுள் ஒருவன்; ஆலோசனையில் வல்லவன்; நளகிரி என் னும் யானை வெறிகொண்டு நகரை அழித்தபொழுது பிரச்சோதனன் கட்டளைப்படியே சென்று மிக்க செற்றத்தோடு சிறையிலிருந்த உதயணனை மிக இரந்து அவன் மனத்தைக் கனிவித்துச் சிறையினின் றும் நீக்கி அழைத்துவந்து அதனை அடக்குவித்து அவனுக்கும் அரசனுக்கும் பழக்கஞ் செய்வித்தவன்; அவன் குமாரர்களுக்கும் வாசவதத்தைக்கும் உரிய கல்விகளைக் கற்பிக்கும்படி அரசனது அநுமதியால்

சென்று சொல்லி உதயணனை இணங்குவித்தவன்; உதயணனுக்குரிய பணிகளையெல்லாம் பின்னர் அன்புடன் செய்துவந்தவன்; ஐராபதம் என்னும் மலையில் பிறந்த பொன்னின் நாணயங்களில் பதினாறாயிரம் நன்கொடையாக உதயணனால் இவன் பெற்றான்.

சின்னச்சோலை: ஒரு மலை; இதன்மேல் இருந்து உதயணன் சங்கேதமான ஒரு பண்ணைப் பாட அவன் வீரர் எல்லோரும் வந்து கூடினர்.

சுமித்திரர்: ஒரு முனிவர்; நீலவேகனுக்கு அவன் கண்ட கனவின் பயனைத் தெரிவித்தவர்.

சேடகர்: அரசாட்சியைத் துறந்த ஒரு முனிவர்; விக்கிரனுக்கும் மிருகாபதிக்கும் தந்தை.

சேதிநாடு: இது மிருகாபதியின் தந்தைக்குரிய நாடு; இந் நாடு யூகிக்கு உதயணனால் சீவிதமாகப் பின்பு அளிக்கப்பட்டது.

சோதமன்: சௌதர்மேந்திரன்; சௌதர்மமென்பது கற்பலோகம் பதினாறனுள் முதலாவது; இந்த இந்திரன், பத்திராபதியின் வேண்டுகோளால் உதயணனுக்கு மகனாகச் சென்று பிறக்கும்படி சோதவன் என்னும் முனிவனுக்குக் கட்டளையிட்டனன்.

சோதவன்: ஒரு முனிவன்; இவன் சௌதர்மேந்திரனுடைய கட்டளையால் நரவாணனாக வந்து பிறந்தவன்.

தருசகன்: இவன் மகத தேசத்து அரசன்; இவனுடைய இராசதானி இராசகிரியம் என்பது; இவன் பதுமாபதி என்பவளுடைய தமையன்; ஆருணியை வெல்லுவதற்கு இவனுடைய நட்பைப் பெற எண்ணிய உருமண்ணுவா முதலிய மந்திரிகளுடன் உதயணன் மாணகனென்னும் அந்தணப் பிரமசாரி வடிவங்

கொண்டு அந் நகர்ப்புறச் சோலையில் சிலகாலம் மறைந்திருந்தனன்; இவன் தந்தையால் புதைத்துவைக்கப்பட்ட வைப்புத் திரவியங்கள் உதயணனால் அறிந்து எடுத்துக்கொடுக்கப்பட்டன. சில நீரூற்றுக்களும் அவனால் இவனுக்குக் காட்டப்பட்டன. பதுமாபதியைக் கேகய அரசனுக்குக் கொடுத்தற்கு இவன் எண்ணினன் என்பதை அறிந்து போர் செய்தற்கு வந்த அரசர் எழுவரையும் மந்திரிகளுடன் சென்று உதயணன் வென்றான் என்பதுபற்றி அவனுக்குப் பதுமாபதியை மணஞ் செய்வித்தான்; தனக்கு உதயணன் செய்த உதவியை நினைந்து அவனுக்கு உதவியாகத் தன் மந்திரிகளையும் சதுரங்க சேனைகளையும் அனுப்பி வெற்றி உண்டாகும்படி செய்தான்; எலிச்செவி அரசனால் சிறையில் வைக்கப்பட்டிருந்த உருமண்ணுவாவை விடுவித்து உதயணன்பால் அனுப்பினன்; உதயணனுக்கு இவனிடத்தில் மிகுந்த அன்பு உண்டு; ஒவ்வொன்றையும் ஆராய்ந்து செய்பவன்; நன்றியறிவுடையோன்; இவன் தந்தையும் உதயணன் தந்தையும் மிக்க நட்புடையோரென்று தெரிகிறது; இவன் பெயர் மகத மன்னன், தரிசகன், தருசககுமரன் எனவும் வழங்கும்.

தருமச்சுருதி: உதயணனுக்குச் சினதருமங்களை விரிவாக உபதேசித்த முனிவர்.

தருமதத்தன்: தருசகனுடைய மந்திரிகளுள் ஒருவன்; ஆருணியோடு போர் செய்தற்குச் சென்றபொழுது உதயணனுக்கு உதவியாக அனுப்பப்பட்டு முன்படையில் நின்று பொருத வீரன்; அவனை வென்றதற்குக் காரணனாக இருந்ததுபற்றி, நெய்த்தோர்ப் பட்டிகையும் பத்தூரும் உதயணனால் பெற்றவன்.

தருமவீரர்: சித்திபெற்ற சாரணர்களின் தலைவர்; இவருடைய உபதேசமொழிகளைக் கேட்ட விலங்குகளும்

பறவைகளும் தத்தம் செயல்களை மறந்து அடங்கி நின்றன.

தவந்தகன்: வயந்தகனுடைய மகன்.

தனமித்திரன்: சேடகராசன் புதல்வர்களுள் மூத்தோன்.

தாரகாரி: தருசகன் மந்திரிகளுள் ஒருவன்; உதயணன் ஆருணியோடு போர்செய்தற்குச் சென்ற காலத்தில் உதவியாக இருந்தவன்.

திலகசேனை: பரதகனுடைய தங்கை; யூகியின் மனைவி.

நஞ்சுகன்: குபேரனுக்குத் தொண்டு செய்யும் ஓர் இயக்கன்.

நரவாணதத்தன்: உதயணனுக்குப் பிரச்சோதனன் மகளாகிய வாசவதத்தையினிடம் பிறந்த புத்திரன்; குபேரனது அருளினால் உதித்தவனாதலின் இப் பெயர் பெற்றான்; (நரவாகனன் - குபேரன்); வித்தியாதர சக்கரவர்த்தியாகப் பின்பு ஆயினன்.

நருமதை: உஞ்சை நகரிலுள்ள ஐம்பதினாயிரம் நாடகக் கணிகையருள் தலைக்கோல் பட்டம்பெற்ற ஒருத்தியின் மகள்; பிரச்சோதனனால் நன்கு மதிக்கப் பெற்றவள்; வாசவதத்தைபாலுள்ள அன்பின் மிகுதியால் தனக்கு உண்டான வேறுபாடு இவளால் உண்டாயிற்று என்று பிறர் அறிந்துகொள்ளும்படி வயந்தகனைக் கொண்டு உதயணனால் வருவிக்கப் பட்டவள்.

நருமதையாறு: விந்தமலையில் உண்டாவது; பத்திரை என்னும் தெய்வமகள் பெண்யானை ஆகும்படி குபேரனால் சாபம் பெற்றது இதன் கரையிலேதான்.

நளகிரி: இது பிரச்சோதனனது பட்டத்து யானை; மிக்க வீரியம் உடையது; மதவெறிகொண்டு உஞ்சை நகரை அழித்துக் கலக்கிய இதன் கோபத்தை அடக்கி ஊர்ந்தமையாலேதான் உதயணன் சிறைவீடு பெற்றான்.

நாகதத்தை: கந்தருவபுரத்து அரசனாகிய நீலவேகன் மனைவி.

நீலகேசி: காசியரசன் மகள்; மந்தரவரசன் மனைவி; விரிசிகையின் தாய்.

நீலவேகன்: கந்தருவபுரத்து அரசன்.

பத்திராபதி: ஒரு பெண்யானை; பிரச்சோதனனுக்கு உரியது; மிக்க வேகமுடையது; ஊர்ந்துசெல்லும்படி உதயணனுக்குச் பிரச்சோதனனால் கொடுக்கப்பட்டது, நீர் விழவில் இதன்மேலேதான் வாசவதத்தையை ஏற்றிக் கொண்டு உதயணன் தன் நகர் சென்றனன்; செல்லுகையில் காலகூடம் என்னும் வியாதியால் இடையே இது வீழ்ந்து இறந்துவிட்டது; கோசம்பி நகரத்தை அடைந்து வாழ்கையில் உதயணன் இந்த ஞாபகார்த்தமாக இது வீழ்ந்த இடத்திலும் கோசம்பியிலும் கோயில்கள் சமைத்து அவற்றில் இதன் வடிவங்களை அமைப்பித்து நித்திய பூசை முதலியவற்றை நடத்தி வரும்படி செய்வித்தனன்; இப் பெயர் பத்திராவதி யெனவும் வழங்கும்; பத்திராவதி என்னும் தெய்வப் பெண் குபேரன் சாபத்தால் இந்த யானையாகப் பிறந்து இறந்த பின்பு பழைய உருவத்தை அடைந்தாள் என்று ஒரு வரலாறு காணப்படுகிறது.

பத்திரை: இவள் ஒரு தெய்வ மங்கை; குபேரனுக்குப் பல்வகைப் பணி புரிந்தொழுகும் எண்பது நாடக மகளிருள் ஒருத்தி.

பதுமகாரிகை: இவள் பிரச்சோதனனுடைய தேவிமார் பதினாறுயிரவருள் முதல்வி; வாசவதத்தையின் நற்றாய்; இவள் பெயர் வடமொழிநூல் ஒன்றில் ஸ்ரீமதியென வழங்கும்.

பதுமாபதி: தருசக அரசன் தாயின் சகோதரியான உதயையோடையின் மகள்; இவள் தந்தை காசிராசன்; அபிமான புத்திரியாகத் தருசகன் தாய் வளர்த்து

வந்தமையின், இவள் தருசகன் தங்கையென்று கூறப்படுவாள்; இராசகிரியத்தில் நடந்த காமனுடைய விழாவில் வழிபடுவதற்குக் காமன் கோட்டத்திற்குச் சென்றபொழுது அக் கோயிலின் வாயிலில் வேற்று வடிவங்கொண்டு மாணகனென்னும் பெயருடன் நின்ற உதயணனுக்கும் இவளுக்கும் நட்புண்டாகிக் காந்தருவ மணம் முதலில் நடந்தது; பிறகு அவனைத் தன் கன்னிமாடத்திற்கு ஒருவரும் அறியாதபடி அழைத்துவந்து பல நாள் வைத்திருந்தனள்; பகைவர் தருசகனோடு போர் செய்வதற்கு வந்தபோது உதயணன் புறத்தே இருந்து வந்தவன்போல வந்து தன்னை இன்னனென்று பலரும் தெரிந்துகொள்ளச் செய்து தோழர்களோடு சேர்ந்து அப் பகைவரை வென்றனன்; அதனால், பதுமாபதி உதயணனுக்கு மணம் செய்விக்கப்பட்டு இரண்டாம் பட்டத்தேவி ஆயினள்; இவள் வாசவதத்தைபோன்ற தோற்றம் உடையவள்; சிறந்த குணத்தினள்; இனிய சொல்லை உடையவள்; கல்வி கேள்விகளில் சிறந்தவள்; வாசவதத்தைபால் பொறாமைகொள்ளாதவள்; அவளுக்கு அநுகூலத்தையே தேடுபவள்; இராசனை, ஐராவதி, யாப்பியாயினி என்பவர்கள் இவளுடைய உயிர்த் தோழியர்கள்; இவள் பெயர் பதுமாபதி எனவும் வழங்கும்.

பதுமை: இவள் ஒரு தூதி; உதயணன் வெற்றிபெற்றுக் கௌசாம்பியில் வாசவதத்தையுடன் அரசாளுகையில் அவன் அன்பைப் பெற வேண்டி அவனுக்கும் அவளுக்குமாகப் பலவேலைக்காரர்களுடன் பல அரும் பொருள்களை அனுப்பிய பிரச்சோதனனால் சமாதானமாகப் பேசுதற்கு அவனிடம் அனுப்பப்பட்டவள் இவள்; அங்ஙனமே உதயணனைப் பார்த்தபொழுது பேசித் தன் தலைவன்மீது அவனுக்கிருந்த மனவருத்தத்தைப் போக்கினள்.

பரதகன்: பிரச்சோதனனுடைய மந்திரிகள் பதினறுயிரவருள் ஒருவன்; சாலங்காயனுக்கு அடுத்தபடி என்னும் பெருமை வாய்ந்தவன்; சிறந்த நூல்பொருள்களை அறிந்தவன்; உதயணன்பால் மிக்க அன்புடையவன்.

பரதன்: இவன் ஒரு சக்கரவர்த்தி; உதயணனுடைய குலமுதல்வன்.

பரமசுந்தரி: பிரமசுந்தரயோகியின் மனைவி; யூகியின் தாய்; கற்பில் சிறந்தவள்.

பவணம்: இது நாகலோகம்; செல்வத்திலும் போகத்திலும் சிறந்தது.

பாகீரதி: தேவராட்டி வேடம்பூண்ட ஒருத்தி; தன் மக்கள் உதயணன்பால் கற்றுக் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குவதைத் தெரிந்த பிரச்சோதனன், அவனை அழைத்துப் பாராட்டி மறுநாள் சேனைகளுடன் கௌசாம்பிக்கு அனுப்ப எண்ணியது தெரிந்து, அதனால் தன்னுடைய சூழ்ச்சி தவறிவிடுமே என்று எண்ணிய யூகியின் கட்டளையால் தெய்வாவேசங்கொண்டவள்போல் உஞ்சைநகரின் வீதியில் வந்து ஆடிச் சனங்களை அச்சுறுத்தி நீர்விழாச் செய்யும்படி செய்வித்தவள் இவள்.

பாஞ்சால தேயம்: இது மிக்க நீர்வளம் உடையது; ஆருணியரசனுடைய தேசம்.

பாலகன்: இப்பெயருடையார் இருவர். (1) முனிவர் வேடங்கொண்ட ஒரு சமணன் (2) பிரச்சோதனன் புதல்வர்களுள் ஒருவன்; சிறந்த வீரன்.

பாலகுமரன்: பிரச்சோதனன் புதல்வன்; உஞ்சை நகரில் உதயணன் நளகிரியை அடக்கியபின்பு தந்தையின் கட்டளைப்படி அவனுக்கு வேண்டியவைகளை அவ்வப்பொழுது குறிப்பறிந்து செய்துவந்தான்.

பிங்கல கடகர்: உதயணன் தம்பிகள்; அவனுக்கு உயிர் போன்றவர்கள்; உதயணன் மாய யானையால் பிடித்துக்

கொண்டு போகப்பட்டபொழுது யூகியின் வேண்டு கோளால் தாய் மிருகாவதியையும் கோசம்பிநகரத்தை யும் பாதுகாத்தார்கள்; ஆருணியரசன் அந் நகரைக் கைப்பற்றியபொழுது அவனை வெல்லமாட்டாதவர் களாய்த் தம் உருவத்தை மறைத்துக்கொண்டு பல வீரர்களோடு வேறிடஞ் சென்று ஒளித்திருந்தார்கள்; அப்பால் உதயணன் ஆருணியோடு போர்செய்தற்குச் செல்லும்பொழுது அவனைக் கண்டு பணிந்து பல வாறு புலம்பி வழிபடுவார்களாய் உடனிருந்து உதவிசெய்தவர்கள்; கடகபிங்கலரெனவும் வழங்கப் படுவர்.

பிரச்சோதனன்: இவன் ஒரு சக்கரவர்த்தி; வாசவதத்தை யின் தந்தை; இவன் நாடு அவந்தி; இராசதானி உச்சைனி நகர்; உதயணனை வஞ்சத்தால் பிடித்துச் சிறையில் வைக்கும்படி செய்தவன்; இவன் தேவியர் பதினாறாயிரவருள் வாசவதத்தையைப் பெற்ற நற்றா யாகிய பதுமகாரிகை என்பவள் முதன்மை வாய்ந் தவள்; அப் பதினாறாயிரவரும் விரும்பப்பெற்ற கட்ட ழகு வாய்ந்தவன் இவன்; இவனுக்குப் பாலகன், பாலகுமரன், கோபாலகன் என்பவர் முதலிய குமாரர்கள் பலர் உண்டு; மந்திரிகள் பதினாறாயிரவர்; இவனுக்குள்ள முரசம் பதினாறாயிரம்; இவன் பிறர்க்குக் கொடுப்பனவும் பிறர் இவனுக்குக் கொடுக்கும் கையுறைகளும் பதினாறாயிரம்; இவ னுக்கு இப்படியே ஒவ்வொன்றும் பதினாறாயிரம் பதினாறாயிரமாகப் பதினாறு பகுதிகள் இருந்தன; பெருவண்மையன்; இவன் சொல் மிக்க பொருள் சிறப்புப உடையது; ஆற்றலிலும், வெற்றியிலும், அறிவிலும் நிகரற்றவன்; யாவரும் அஞ்சுதற்குரிய கடுங்கோபத்தினன்; ஆணையில் சிறந்தவன்; வீரிய வேந்தன், அவந்தி வேந்தன், ஏதத்திகிரி இறைவன், வெற்றிவேந்தன், மறமாச்சேனன், உஞ்சையர் பெரு

மகன், பெருவேந்தன், ஆற்றல் வேந்தன் எனவும் இவன் பெயர்கள் வழங்கும்.

பிரமசுந்தர முனிவர்: பல பெரிய முனிவர்களுக்குத் தலைவர்; தருமத்தைப் பரிபாலனம் செய்வதே இவர் கோட்பாடு; இவர் மனைவி பரமசுந்தரி என்பாள்! இவர் யூகியின் தந்தை; உதயணனுக்கு யானையின் கோபத்தை அடக்கும் வித்தையையும் கோடவதி யென்னும் யாழையும் இசைநூலையும் மற்றுமுள்ள பல வித்தைகளையும் அளித்தவர்; யூகியை உதயணன் பால் அடைக்கலமாக ஒப்பித்தவர்; யூகியின் பாலுள்ள கல்வி, அறிவு, ஆற்றல் முதலிய விசேட குணங்களுக்கு இவர் தவமே காரணம்.

புட்பகம்: உதயணனுக்குரிய பெரு நகரங்களுள் ஒன்று; சேனைகளுடன் இருந்து இதனைப் பாதுகாத்துவந்த இடவகனுக்கு இது விருத்தியாகக் கொடுக்கப் பெற்றது.

புண்டரன்: இது வாசவதத்தையும், சாங்கியத்தாயும், யூகியும் வேற்று வடிவங்கொண்டு தங்கிய இடங்களுள் ஒன்று.

புன்றுளகம்: இலாவாணக நகரத்திற்கும் மகதத்திற்கும் இடையே உள்ள நாடு.

பூரணகுண்டலன்: இவன் ஆருணி அரசனுடைய அமைச்சன்; உதயணனோடு போர்செய்தற்கு அவன் புறப்பட்டபோது நிமித்தம் நன்றாக இல்லாமையால், அவனுக்குப் புத்தி கூறியவன்.

மகதநாடு: தருசகனுடைய நாடு; மிக்க சிறப்பை உடையது; இதன் வேலைக்காரர்கள் மிக்க புகழை உடையவர்கள்.

மதனமஞ்சிகை: கலிங்கசேனை என்பவளுடைய புதல்வி; நரவாணதத்தன் மனைவி; மிக்க அழகுடையவள்; மானசவேகன் என்னும் வித்தியாதரனால்

விரும்பி எடுத்துச்செல்லப்பட்டுத் தன் கணவனால் மீட்கப்பெற்றவள்.

மதுகாம்பீர வனம்: கோசம்பி நகரத்தின் புறத்ததாகிய ஒரு பூஞ்சோலை.

மந்தரம்: ஆருணி அரசனுடைய பட்டத்து யானை; நளகிரியைப் போல்வது.

மந்தரவரசன்: வெள்ளிமலையில் உள்ள வித்தியாதர அரசருள் ஒருவன்; இவன் வனத்தில் வந்து தவம் செய்கையில், உதயணனால் இளமையில் மாலைசூட்டப் பெற்ற தன் மகளுக்குப் பருவம் வந்தபொழுது அவளை அவனுக்கு மணம் செய்வித்துவிட்டு மனைவியைத் துறந்து தவம் செய்தற்குச் சென்றான்.

மருபூதி: யூகியின் புதல்வன்.

மல்லன்: தருசகனோடு போர் செய்ய வந்த பகையரசர் எழுவர்களுள் ஒருவன்.

மாகளவனம்: உஞ்சை நகரின் புறத்தேயுள்ள ஒரு காடு; இதில் ஒரு துர்க்கை கோயில் உண்டு; அது யூகிக்கும் அவனுடைய நண்பர்களுக்கும் தனியே இருந்து ஆலோசனை செய்தற்குரிய இடமாக இருந்தது; இது மகாகாளவனம் எனவும் வழங்கும்.

மாணகன்: இஃது உதயணன் சில நிமித்தம்பற்றித் தன்னைப் பிறர் அறிந்துகொள்ளாதபடி இராசகிரியத்தில் இருந்த பொழுது கொண்ட வேறு பெயர்.

மானசவேகன்: வெள்ளிமலை ஓரத்திலுள்ள 110 வித்தியாதர அரசர்களுள் ஒருவன்; இவன் மதனமஞ்சிகையை விரும்பி எடுத்துச் சென்று நரவாணதத்தனால் வெல்லப்பட்டனன்.

மானனீகை: இது கோசலத்தரசன் மகளது வேறு பெயர். இவளது இயற்பெயர் வாசவதத்தை என்பது; இவள் தாய் வசுந்தரியென்பாள்; கோசல தேசத்து

அரசனை வென்று அவனது அந்தப்புரத்திலிருந்து பாஞ்சாலராசன் கவர்ந்து சென்ற மங்கையர்களுள் இவளும் ஒருத்தி; பின்பு அவன் பட்டத்தேவியின் பணிப்பெண்ணாக இருந்து அவனைக் கொன்ற உதயணன் கொண்டுவந்த மகளிரோடு இவளும் கொண்டு வரப்பட்டு வாசவதத்தையின் பணிப்பெண்ணாக இருந்து தன் பந்தாட்டத்தைக் கண்டு மோகித்த உதயணனுக்குப் பின்பு மனைவியாயினள்; இவள் யவனபாஷையிலும் சிற்பவேலை முதலியவற்றிலும் மிகத் தேர்ச்சியுற்றவள்.

மித்திரகாமன்: இவன் நற்குண நற்செய்கையை உடைய ஒரு வணிகன்; பெருஞ்செல்வத்தால் மிக்கவன்; வேறு வேடங்கொண்ட வாசவதத்தை முதலிய நால்வரும் இவன் வீட்டிலேதான் சில காலம் மறைந்திருந்தனர்.

மிருகாபதி (மிருகாவதி): உதயணன் நற்றாய்; இவளுடைய சகோதரன் விக்கிரன்; இவள் தந்தை ஏயர் குலத்திற்குத் தலைவன்.

மிலேச்சன்: போதனபுரத்திற்கு அரசன்; தருசகனோடு பகைமைகொண்டு போர் செய்ய வந்த அரசர்களுள் ஒருவன்; மிக்க வீரமுடையவன்.

முனையூர்: இஃது இடவகனுக்கு உதயணன் கொடுத்த நாடுகளுள் ஒரு நாட்டினது தலைநகரப் பெயர்.

யமுனை: யமுனா நதி; இது கோசம்பிநகரத்தின் பக்கத்தே ஓடுவது.

யவனம்: இது தச்சு வினையில் மேம்பட்ட ஒரு தேயம்; இத் தேயத்திற்கென்றே தனியாக ஒரு பாஷை இருந்ததென்றும் அதில் உதயணனும் கோசலதேசத் தரசன் மகள் வாசவதத்தையும் மிக்க பயிற்சியுள்ளவர்களென்றும், தங்கள் கருத்தைப் பிறர் அறியாதபடி ஒருவர்க்கொருவர் அந்தப் பாஷையால் தெரிவித்துக் கொண்டனரென்றும் தெரிகின்றன.

யாப்பியை: இவள் சாலங்காயனுடைய தங்கை; யூகியால் மணம் செய்துகொள்ளப்பட்டவள்.

யூகி: இவன் உதயணனுடைய மந்திரிகளுள் முதன்மை வாய்ந்தவன்; இவனுடைய குணவிசேடங்கள் எழுதி அடங்குவனவல்ல; வில்வித்தை முதலிய எல்லாக் கலைகளையும் உதயணனுடன் கற்றுப் பயின்று உடன் வளர்ந்தவன்; அவனுக்கு உயிர்த்தோழன்; சிறைத் துன்பத்தினின்றும் அவன் நீங்கியது முதலியவற்றிற் கும், இழந்த அரசாட்சியை மீட்டும் பெற்றதற்கும், பிற நலத்திற்கும் காரணம் இவனுடைய பெருமுயற் சியே; பிரச்சோதனன் உதயணனை வஞ்சச் செய்கை யால் பிடிப்பித்து வருவித்துச் சிறைப்படுத்தினன் என்ற செய்தியை வயந்தகன் கூறக் கேட்டவுடன், "என் தலைவனைக் கபடமாகப் பிடிப்பித்து வருவித்த வன் மகள் வாசவதத்தையை அவன் அறியாதபடி கொண்டுவரும்படி செய்வேன்" என்பதுமுதலிய சபதம் செய்துவிட்டுத் தான் இறந்துபோனதாக ஒரு செய்தியை எங்கும் பரவச் செய்து பிறர் அறியாமல் உஞ்சை நகரம் சென்று தான் கருதியதை நிறைவேற் றியவன்; பிரச்சோதனனால் பிற்காலத்தில் வருவித்து நன்கு உபசரிக்கப்பெற்றவன்; அவன் விரும்பிய வண்ணம் சாலங்காயனோடு சொற்போர் புரிந்து அவனை வென்ற கல்வி வீரன்; அவன் தங்கையையும் பரதகன் தங்கையையும் பிரச்சோதனன் விருப்பத் தின்படி மணம் செய்துகொண்டவன்; பெருவிறற் றோழன், இடனறி சூழ்ச்சி யூகி, அரும்பெறற் சூழ்ச் சியவன், ஒழுக்கியல் திரியா யூகி எனப் பாராட்டிக் கூறப்படுவான்; உதயணன் முதலில் பெற்ற சேதி நாட்டின் ஆட்சி அவனால் இவனுக்குச் சீவிதமாகக் கொடுக்கப்பட்டது; ஊகி, யூகந்தராயணன், யூகந் தராயன் எனவும் இவன் பெயர் வழங்கும்.

வசுந்தரி: கோசலநாட்டு அரசன் தேவி; மானனீகை என்று வேறு பெயர்கொண்ட வாசவதத்தையின் தாய்.

வத்தவநாடு (வத்ஸதேசம்) இதன் தலைநகர் கௌசாம்பி; இதற்குத் தலைவன் உதயணன். வச்சமெனவும், வத்தமெனவும் வழங்கும்.

வயந்தகன்: இவன் உதயணனுடைய மந்திரிகளுள் ஒருவன்; உயிர்த்தோழன்; சாதியால் அந்தணன்; வில்வித்தை முதலிய பல கலைகளில் வல்லவன்; அவனுடைய குறிப்பறிந்து நடந்து மதிப்புப் பெற்றவன்; பகைவன் விடுத்த மாய யானையின் உள்ளே இருந்தும் புறத்தே வந்தும் போர் செய்தற்கு வந்த வீரரோடு போர் செய்ததன்றி அவர்கள் கையில் அகப்பட்ட உதயணன் கொடுத்த ஓலையைக் கொண்டுபோய் யூகியிடம் கொடுத்து மேலே நிகழ்த்த வேண்டியவற்றை விரைவில் நிகழ்த்தும்படி அவனை ஊக்கியவன்; உதயணனோடு இடைவிடாமல் இருந்து உதவியவன். அவன் உஞ்சை நகரஞ் சென்றபின் வேறு வேடம் பூண்டு அந் நகர் சென்று பிரச்சோதனனுடைய குமாரர்களுடன் சேர்ந்து வில்வித்தை முதலியவற்றைக் கற்கும் மாணக்கன்போல் இருந்து அங்கே நடப்பனவற்றை அறிந்தறிந்து அவ்வப்பொழுது யூகிக்குச் சொல்லியனுப்பியவன்; உதயணனுக்குப் பணிபுரிந்து ஒழுகும்படி பாலகுமரனால் நியமிக்கப்பெற்றவன்; யூகி சொல்லியனுப்புவனவற்றையும் அவ்வப்பொழுது உதயணனுக்குத் தெரிவித்து நிறைவேற்றியவன்; பிடி வீழ்ந்த பின்பு காட்டில் வாசவதத்தையோடு தனித்துத் தங்கியபோது வேடர்களால் அவனுக்கு உண்டான துன்பத்தைப் போக்கிச் சயந்தி நகரை அடையச் செய்தவன்; வானசாஸ்திரத்திலும் வல்லவன்; நல்ல பயனைத் தரும் நகரங்கள் பதினொன்றை இவனுக்கு விருத்தியாகக் கொடுத்ததன்றி உதயணன் இவனுக்கு நாடோறும் ஆயிரம் பொன்னுங் கொடுப்பானாகி எப்பொழுதும் தன்னுடன் இருக்கும்படியும் செய்தான்.

வராகன்: பிரச்சோதனனுடைய அந்தப்புர ஏவலாளனாகிய ஒரு வில்வீரன்; வாசவதத்தையைப் பிடிமீதேற்றி உதயணன் சென்றபொழுது சில தூரம் தொடர்ந்து சென்று அதனை முதலில் பிரச்சோதனனுக்கு அறிவித்தவன்.

வருடகாரன்: தருசகனுடைய முதல் மந்திரி; மிகக் கபடமான ஆலோசனையையும் தறுகண்மையையும் உடையவன்; பாஞ்சால ராசனை வெல்லுதற்கு இவன் செய்த ஆலோசனைகளும் செயல்களும் மிகப் பல; அந்த அரசனைக் கொன்றபின்பு உதயணன் மனம் உவந்து இவனைத் தழுவித் தான்அணிந்த கலன்களையும் ஏறிய யானையையும் இவனுக்கு அளித்தனன்.

வாசவதத்தை: இவள் உதயணனுடைய தேவியர் நால்வருள் முதல்வி; பட்டத் தேவி; பதுமகாரிகையின் புதல்வி; இந்திரன் அருளால் உதித்தவளாதலின் இவள் இப் பெயர் பெற்றாள்; அழகிலும் குணத்திலும் சிறந்தவள்; பெண்பாலார்க்குரிய கலைகளில் மிகப் பயிற்சியுள்ளவள்; அவற்றுள் இசையையும் யாழையும் உதயணன்பால் கற்றுத் தேர்ந்தவள்; மாலை தொடுத்தல் முதலிய கைத்தொழிலில் சிறந்தவள்; சிற்பவேலையில் இவளுக்கு மிக்க பயிற்சியுண்டு; தந்தை முதலியவர்பால் அன்பு மிக்கவள்; மற்ற மகளிர் பலருள்ளும் பிரச்சோதனனுக்கு இவள்பால் அன்பு அதிகம்; தன்பால் உள்ள காதலால் உதயணன் இராச காரியத்தை மறந்துவிட்டான் என்று பிறர் சொல்லத் தெரிந்தமையால், இவள், தான் இறந்து போய்விட்டதாகப் பெயர்பண்ணிச் சில்காலம் செவிலித்தாய் முதலியவர்களோடு வேற்றுருவங்கொண்டு மறைந்திருந்தனள்; அவனுடைய ஆக்கத்தைக் கருதி இவள் அடைந்த துன்பங்கள் பல; உதயணனுக்கு இவள்பால் அன்பு அதிகம்; இவ்விருவரும் ஒருவரை ஒருவர் அடைந்தது தவப்பயன் என்பர்; இவளுக்குத் தோழியர்

பலர் இருப்பினும் காஞ்சனமாலையிடத்தேதான் மிகுந்த அன்புடையாள்; மிக்க தூய்மையை உடைய வளாயிருந்ததுபற்றியே சோதவன் என்னும் முனி வரன் இவளுடைய கருப்பத்தில் தங்கி நரவாணதத் தனைகப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாக ஆயினன் என்பர்.

வாரணவாசி: அடவியென்னும் அரசனது நகரம்; காசியும் ஆம்.

விக்கிரன்: இவன் உதயணனுடைய அம்மான்; மிருகா பதியின் தமையன்; ஏயர்குலத்தில் பிறந்தவன்; தன் அரசாட்சியை உதயணனிடம் ஒப்பித்துவிட்டுத் தான் தவம் செய்யச் சென்றவன்.

விச்சுவலேகை: இவள் வாசவதத்தையின் தோழிமார் களுள் ஒருத்தி; குறுகிய வடிவம் உடையவள்; பந் தாட்டத்தில் சிறந்தவள்.

விசயவரன்: இவன் உக்கிரகுலத்தில் பிறந்த அரசன்; இவனுடைய இராசதானி அங்க நாட்டிலுள்ள சண்பை நகர்.

விசயார்த்தம்: வித்தியாதரர்களுக்கு உறைவிடமாகிய ஒரு வெள்ளிமலை.

விஞ்சையம்பெருமலை: வெள்ளிமலை; இது வித்தியாதரர் கள் இருத்தற்குரிய இடம்; இதிலுள்ள வெள்ளி மிகச் சிறந்தது.

விண்ணுத்தராயன்: இவன் பிரச்சோதனனால் அழைக்கப் பட்ட யூகி, உஞ்சைநகர் சென்றபொழுது அவனுக் குப் பாதுகாப்பாக உதயணனால் அனுப்பப்பட்டு அவனுடன் சென்றவன்.

விதையம் (விதேகதேசம்): இது விமானத்தில் சென்ற வாசவதத்தையால் பார்க்கப்பட்ட தேயங்களுள் ஒன்று.

விந்தம்: விந்தியமலை; இதிலுள்ள காடு புகழ்பெற்றது; இதிலுள்ள யானைகள் மிக்க வீரியமுடையவைகள்; இது விஞ்சமெனவும் வழங்கும்.

விபுலம்: மிருகாபதியின் தந்தை தவம் செய்துகொண்டிருந்த ஒரு மலை; உதயணன் பிறந்தது இம் மலைச் சாரலிலேதான்.

விரிசிகன்: தருசகனுடைய பகையரசருள் முதல்வன்.

விரிசிகை: இவள் ஒரு ராசரிஷியின் மகள்; தவம் செய்ய வந்த அவருடன் இவளும் வந்து ஒரு வனத்தில் இருந்தபொழுது இளமைப்பருவத்தில் உதயணனால் மாலை சூட்டப்பெற்றுப் பின்பு அவனால் மணம் செய்துகொள்ளப்பட்டவள்; கற்பில் சிறந்தவள்.

வேகவதி: வித்தியாதர அரசனாகிய மானசவேகன் தங்கை; மதனமஞ்சிகையின் மனத்தை வேறுபடுத்தும்படி அவனால் அனுப்பப்பட்ட இவள் நரவாண தத்தனுடைய மேம்பாட்டைக் கேட்டு அவனிடம் விருப்பங்கொண்டு மதனமஞ்சிகையின் வடிவத்தை அடைந்து அவனோடு இன்புற்றாள்.

வேசாலி: தருசகனுடைய பகையரசருள் ஒருவன்.

வைசாலி: விக்கிரனுடைய இராசதானி; உதயணனுக்கு ஒப்பிக்கப்பட்டது.

வையாக்கிரம்: உதயணன் யூகிக்குக் கொடுத்த தேர்.

ஸ்ரீதரர்: விபுலமலையின் சாரலில் தவம் செய்துகொண்டிருந்த முனிவர்.

ஸூவ்ருதர்: முக்கால உணர்ச்சியுள்ள ஒரு முனிவர்; மிருகாபதியைச் சரபப்புள் எடுத்துச்சென்று விபுலகிரியில் வைத்ததுமுதல் உதயணன் வைசாலியில் அரசாட்சி செய்தது வரையிலுள்ள செய்திகளையும், சதாநிகனுடைய பிற்காலச் செய்திகளையும் அவனுக்குத் தெரிவித்தவர்.



# அரும்பத உரை

## பக்கம்—1

உஞ்சைக்காண்டம் - உச்சைனி நகரத்தில் நிகழ்ந்த சரித்திரங்களைக் கூறும் பகுதி; உஞ்சை-உச்சைனி நகரம்.
புதல்வி - குமாரி.
மணம் - கலியாணம்.
மந்திரச்சுற்றத்தார் - மந்திரிகள்.
ஏனையோர் - மற்றவர்.
ஆண்டு - வருஷம்.
சரற்காலம் - கூதிர்காலம்; ஐப்பசி கார்த்திகை மாதங்கள்.
வைராக்கியம் - ஆசையில்லாமை; விரக்தி.
ஞாலங்காவல் - பூமியைக் காத்தல்; அரசாட்சி.
நஞ்சு - விஷம்.
புதல்வர் - புத்திரர்.
அருகு - சமீபம்.
வற்புறுத்தி - உறுதிப்படுத்தி.

## பக்கம்—2

சாரல் - மலைப்பக்கம்.
ஆற்றாமல் - பொறாமல்.
வியந்தான் - அதிசயித்தான்.
ஆறுதல் - தேறுதல்.
மயற்கை - கருப்பமுற்ற மகளிர்க்குச் சிலவற்றின் மேல் உண்டாகும் விருப்பம்.
சாதிலிங்கம் - சிவப்பு நிறத்திற்குக் கருவியான ஒருவகைச் சரக்கு.
அணிகலம் - ஆபரணம்.
மஞ்சம் - கட்டில்.
புலராத - உலராத.

## பக்கம்—3

தொகுதி - திரள்.
பள்ளி - முனிவர் ஆச்சிரமம்; தவச்சாலை.
அச்சம் - பயம்.
கோள் - கிரகம்.
திருமணிவிளக்கம் - இரத்தின தீபம்.
அழல - ஒளிவீச.
பருதி - சூரியன்.
பொன்னனான் - பொன்னைப் போன்றவன்.
மருள் - மயக்கம்.
மம்மர் - மயக்கம்.
புலம்பலொலி - அழுகைக்குரல்.
அபயம் - தயை.
பரமவிருடிகள் - மேற்பட்ட முனிவர்கள்.

## பக்கம்—4

நாமகரணம் செய்தல் - பெயர் வைத்தல்.
அகற்றும் - நீக்கும்.
ஒளி - பிரகாசம்.
இவர்தர - பரக்க.

கொளீஇ - கொளுவி; இட்டு.
நட்புற்றீ - சிநேகங் கொண்டு.
பலவகைக் கலை - பலவகை வித்தை; வில்வித்தை முதலியவைகள்.
கசடற - குற்றமற.
ஆக்கம் - அபிவிருத்தி.
ஆசி - ஆசீர்வாதம்.
இசை - சங்கீதம்.
உவகை - சந்தோஷம்.

பக்கம்—5

ஆற்றல் - சக்தி; வன்மை.
கடந்துளோர் - துறவிகள்.
மக்கள் - பிள்ளைகள்.
காதல் - அன்பு.
பிடி - பெண்யானை.
தியானம் - நினைவு.
பணி - வேலை.
கனவு - சொப்பனம்.
தவறு - பிழை.
பொலிவு - அழகு.

பக்கம்—6

பிராயம் - வயது.
உய்வேன் - பிழைப்பேன்; உஜ்ஜீவிப்பேன்.
நுகர்ந்து - அநுபவித்து.
வயம் - வசம்.

பக்கம்—7

உறங்கிய - தூங்கிய.
முக்கால உணர்ச்சி: மூன்று காலச் செய்திகளையும் அறியும் அறிவு.
செவ்வன் - நன்றாக.

பக்கம்—8

மேம்பாடு - சிறப்பு.
வேட்கை - விருப்பம்.
வெண்டுகில் - வெள்ளையாகிய ஆடை.
பிறைவடம் - சந்திரஹார மென்னும் ஆபரணம்.
குஞ்சி - குடுமி.
இளைஞன் - சிறுவன்.

பக்கம்—9

நன்னீர் - நல்ல ஜலம்.
தொண்டு - வேலை.
இயக்கன் - யக்ஷன்.
கடப்பாடு - கடமை.
நாடக அரங்கு - நாடகசாலை.
கூத்து - ஆட்டம்.

பக்கம்—10

பரிசனங்கள் - சூழ்ந்து நின்று வேலை செய்பவர்கள்.
திறை - கப்பம்.
யாற்று அறல் - ஆற்றிலுள்ள கருமணல்.
நுதல் - நெற்றி.
பிறையின் நிறை - பூர்ண சந்திரன்.
கறை - குற்றம்.
மிழற்றும் - கொஞ்சும்.
கிளவி - சொல்.
உகிர் - நகம்.
வேய் - மூங்கில்.
முறுவல் - பல்.
காந்தட்பூந்துடுப்பு - காந்தட் பூவின் மடல்.

பக்கம்—11

உதித்த - பிறந்த.
சதுரங்கசேனை - தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்

படையென்னும் நால்வகைச் சேனை.

பக்கம்—12

நிருமித்து - உண்டாக்கி.
பிளிறுதல் - முழங்குதல்; இது பெரும்பாலும் யானைச் சாதிக்கே உரியது.
சம்மானம் - வெகுமதி.
வயவன் - ஒரு பறவை: கரிக் குருவி.
நிமித்தம் - சகுனம்.

பக்கம்—13

முழு மதி - பூர்ண சந்திரன்.
சகோரம் - நிலவை உண்ணும் ஒருவகைப் பறவை.
பொறிகள் - எந்திர உறுப்புக்கள்.
புன்முறுவல்-புன்னகை.
மாண்டான் - இறந்தான்.

பக்கம்—14

மேலாடை - மேல்வஸ்திரம்.
சிறை - சிறைச்சாலை.
திருமுகம் - எழுதப்படும் பனை ஓலை; நிருபம்.
சினம் - கோபம்.

பக்கம்—15

அணிகலம் - ஆபரணம்.
புனைந்து - அலங்கரித்து.
குறளர் - மிகக் குட்டையானவர்.
சிந்தர் - குறளரைக்காட்டிலும் சற்றே உயர்ந்தவர்.

பக்கம்—16

மகாகளவனம் - மாகாளவனம்.

பக்கம்—17

ஆண்டு - அவ்விடம்.
செல்வார்கள்-போவாராயினர்.
குறிப்பு - சந்தேகம்.
வைரம் - தணியாக்கோபம்.
கரகம் - ஒருவகைப் பாத்திரம்.

பக்கம்—18

வேய்ங்குழல் - புல்லாங்குழல்; மூங்கிலால் செய்யப்படுவது.
ஐயுறுதல் - சந்தேகித்தல்.

பக்கம்—19

கூர்த்த - கூர்மையுற்ற.
ஒற்றன் - பிறர்பால் நிகழ்ந்தனவற்றை ஒன்றி ஒன்றி ஆராய்ந்தறிபவன்.

பக்கம் - 20

நள்ளிரவு - நடுராத்திரி.
உச்சாடன மந்திரம் - ஒன்றை ஏவும் மந்திரம்.
செவி - காது.
முழக்கம் - சத்தம்.
சுழன்று - சுற்றி.
நாவாய் - கப்பல்.
ஓவா - ஒழியாத.
அவலம் - சோர்வு.
சூளிகை - மாளிகையின் உச்சியிலுள்ள அறை.
பாடி - வீரர்கள் தங்கும் பெருந்தெருக்கள்.
உய்யானம் - பூஞ்சோலை.

பக்கம்—21

உடன்படுவித்து - சம்மதிக்கச் செய்து.
சிவிகை - ஒருவகையான பல்லக்கு.

பக்கம்—22

வட்டமிட - சுற்ற.
ஆசாற்கு - ஆசிரியனுக்கு.
அடியுறை செய்யும்-ஏவல் செய்யும்.
மாணி - பிரமசாரி.
மருப்பு - கொம்பு.
வயவன் - வெற்றியை உடையவன்.
புலிமுக மாடம் - புலியின் முகம் போன்றவடிவத்தை உடைய மாளிகை; அஃதாவது அரண்மனையின் முகப்பு.

பக்கம்—23

வலியை - வன்மை உள்ளாய்.
ஆரம் - இரத்தினமாலை.
அவாவுகின்றது - விரும்புகின்றது.
புடை - பக்கம்.
குற்றேவல் - அற்பவேலை.
களிறு - ஆண்யானை.

பக்கம்—24

கைவிதிர்த்து - கை அசைத்து.
வரைந்து - எழுதி.
அடைப்பை - வெற்றிலைப்பை.
பேழை - பெட்டி.
மஞ்சிகை - பெட்டி.
நன்கனம் - நன்றாக.
புரைவுற - மேன்மையுற.
புணர்த்த - இயற்றிச்சேர்த்த.
மடையர் - சோறுசமைப்போர்.
கடையர் - வாயில்காப்போர்.
நீறிஇ - நிறுத்தி.

பக்கம்—25

ஊர்தி-வாகனம் (ஏறப்படுவது.)
குஞ்சரச்சேரி - யானைச்சேரி.
அந்தக்கேணி - மறைந்த கிணறு.
கா - சோலை.
வெண்சுதைக்குன்று - வெள்ளிய சுண்ணச்சாந்தாற் கட்டப்பட்ட மலை; கட்டுமலை.
வித்தகம் - வியப்பு.
முட்டு - வழி சென்ற பின்பு இல்லையான இடம்.
முடுக்கு - வளைந்த இடங்களையுடைய சந்து.
இட்டிடைகழி - மிகவுஞ் சிறிய ரேழி.
கரப்பு அறை வீதி-மறைந்திருத்தற்குரிய அறைகளையுடைய வீதி; சுருங்கையுமாம்.
இழுக்கம் - தளர்வு.

பக்கம்—26

மதர் - களிப்பு.
கான்ற - வீழ்த்திய.
செறுநர் - பகைவர்.
உடுக்கள் - நக்ஷத்திரங்கள்.
முலைப்பால்...குழவி - மிக்க இளமையில் அரச உரிமையை அடைந்த சோழன் கரிகாற் பெருவளத்தானும் சோழன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் இங்கே கருதற்பாலர்.
இயன்றனவோ - செய்யப்பட்டனவோ.

பொறியற்ற - எந்திரப்பிணிப் பற்ற.
பிணித்தது - கட்டியது.

பக்கம் - 27

கொய்தல் - பறித்தல்.
மலரணை - மலர்ப்படுக்கை.
கங்குல் - விடியற்காலம்.
துயிலுணர்ந்து - விழித்து.
மகடூஉத் துறந்த - பெண்ணாசையை நீக்கிய.
மாசு - குற்றம்.
படிவம் - விரதம்; வடிவமுமாம்.
பேரத்தாணி - பெரிய அரசிருக்கை மண்டபம்.
உழையர் - பக்கத்திலுள்ள வேலைக்காரர்கள்.
இரட்டைத்தவிசு - இருவர் இருத்தற்குரிய ஆசனம்.

பக்கம் - 28

முகவாசம் - ஏலம் முதலியன.
செயிரறு - குற்றமற்ற.
பெதும்பைப் பருவம் - மகளிர்க்குரிய ஏழு பருவங்களுள் இரண்டாவது.

பக்கம் - 29

செவிலித்தாயர் - வளர்த்த தாய்மார்.
பளிக்கறை - பளிங்காலாகிய அறை.
மணிக்கயிறு - முத்துவடமாகிய கயிறு.
உத்தியர் - சீதேவியென்னுந் தலைக்கோலத்தினர்.
மும்மணிக் காசினர் - புருடராகம், வைடூரியம், கோமேதகம் என்னும் மூன்று மணிகள் அழுத்திய பொற்காசால் ஆகிய ஆபரணத்தை உடையவர்.
சில்கலம் - சிலவாகிய ஆபரணம்.
ஒண்மை - இயற்கை அழகு.
ஒளி - செயற்கை அழகு.
பையென - மெல்ல.
பொற்றாதை - பொன்னாலாகிய சிறு பானை.
கந்து - தூண்.
கரந்துறை - மறைந்து தங்குகின்ற.
முற்றில் - சிறு சுளகு.
சிப்பம் - சிற்பம்.
வட்டிகை - எழுதுகோல்.
வரைப்பு - எழுதுதல்.

பக்கம் - 30

தத்தை - வாசவதத்தை.
நறுநீர் - மணமுள்ள நீர்.
ஆட்டி - ஸ்நானம் செய்வித்து.
நாண் - கயிறு.
கடிப்பிணை - ஒருவகைக் காதணி.
முத்தவள்ளி - முத்துக்கோத்த கொடிபோன்றதோர் ஆபரணம்.
பொற்றோரை - பொன்வடம்.
மட்டஞ்செய்த - செப்பஞ்செய்த.
கீதசாலை - சங்கீத சாலை.
வேதி - மேடை, திண்ணை.

பக்கம் - 31

சிலதர் - ஏவலாளர்.
வம்பமாக்கள் - அன்னிய தேசத்திலிருந்து வந்த புதிய சனங்கள்.

பக்கம் - 32

உடுப்பன - உடுத்திக்கொள்வன.
செப்பம் - செம்மை.

பக்கம் - 33

மெழுகின் - மெழுகைப்போல.
கன்றின - கன்றைப்போல.
தலைக்கோற் பெண்டிர் - தலைக்கோலென்னும் பட்டம்பெற்ற கணிகையர்: இவர் பரத்தையருள் ஆடி முதிர்ந்தோர்.
மறுகு - நெடுந்தெரு.

பக்கம் - 34

படிறு - வஞ்சனை.
அரற்றுகின்ற - முழங்குகின்ற.

பக்கம் - 35

செவ்வி - சமயம்.
தமனியம் - பொன்.
மருப்பு - யானைக்கொம்பு.
பாண்டிலெருது - ஒருவகை எருது.

பக்கம் - 36

ஏனை - மற்ற.
தைவந்து - தடவி.
தறுகண் - அஞ்சாமை.

பக்கம் - 37

நொடி - நொடிப்பேச்சுக்கள்.
அறங்கூறவையத்தார் - தரும நியாயம் சொல்லும் சபையோர்.

பக்கம் - 38

பம்மை - ஒருவகைப் பறை.
தண்டம் - தண்டனை.
குறிகோளாளன் - நிமித்திகன்; குறி சொல்பவன்.
சேனைக்கணிமகன் - சேனையிலுள்ள நிமித்திகன்.
அந்தணி - பார்ப்பனி; இங்கே சாங்கியத்தாய்.
தவத்துறை - தவவழி.
செவியறிவுறுத்தும் - போதிக்கும்.

பக்கம் - 39

பூதி - விபூதி.
பொத்தகக் கட்டு - புத்தகங்களின் தொகுதி.
மானுரி மடி - மான்தோலால் ஆகிய ஆடை.
கலப்பை - கலங்கள் வைத்திருக்கும் பை.
கூறை - ஆடை.
காவினர் - தோள் சுமையை உடையவர்.
பரிபு - வருந்தி.
சாங்கியம் நுனித்த - சாங்கிய நூலைக் கூர்த்து அறிந்த.
சாறு - விழா.
சமயம் - மதம்.
தாபித்தான் - நிலை நிறுத்தினான்.
பாங்கி - தோழி.
நற்றாய் - பெற்ற தாய்.

பக்கம் - 40

வேணவா - மிகுந்த விருப்பம்.
அரங்கு - கற்றோர் கூடிய சபை.

பக்கம் - 41

கோலவர் - கைக்கோலை உடையவர்.
குறும்புழை - சிறிய வாயில்; ஓரிடத்தின் பின்புற வழி.
சந்தனப் பீடிகை - சந்தன மரத்தால் செய்யப்பட்ட பீடம்.
சார்வணை - சார்ந்திருத்தற்குரிய அணை.
படைக்கலம் - ஆயுதம்.
கைம்மாறு - பிரதியுபகாரம்.
பண்டஞ்செய்யான் - பொருட்படுத்தான்.
முகமன் - உபசார வார்த்தை.

பக்கம் - 42

அவை - சபை.
வத்தவ நாடன் - உதயணன்.
இறைசெழு குமரர் - தலைமை பொருந்திய இராசகுமாரர்.
நிலம் கொடை - நிலத்தைக் கொடுத்தல்.
கலம் கொடை - ஆபரணத்தைக் கொடுத்தல்.
ஆயிரம் குஞ்சரத்து அண்ணல் - பரதேசுவர சக்கரவர்த்தி; இவர் சைன நூல்களில் கூறப்படும் சக்கரவர்த்திகளுள் ஒருவர்.
இகந்தன்று - நீங்கியது.
மரமுதல்...கொண்டாஅங்கு - மரம் சாயும்படி உலகத்தார் மருந்து கொண்டாற்போல.
வலித்தல் - வன்மையை உடையதாகச் செய்தல்.

பக்கம் - 43

உஞ்சேனை - உச்சைனி நகரம்.
முருக்கல் - அழித்தல்.
பெருக்கல் - பெருகச் செய்தல்.
எமரன் - என்னைச் சார்ந்தவர்களுக்கு நண்பன்.
அகல்க - (கோசம்பியை விட்டு) நீங்குக.
அமரன் - போர்செய்தற்கு உரியவன்.
அமைவு - அமைதி.
யாண்டு - வருடம்.

பக்கம் - 44

விழா - திருவிழா.
பிணக்குறை படுத்தீ - குறைப் பிணங்கள் உண்டாகும்படி செய்து.
குஞ்சரம் - யானை.
புகுவல் - புகுவேன்.
நீரியல் மாடம்-நீரிற் செல்லும் மாட வடிவமான ஓடம்.
சூட்டு - மாலை
தேறல் - கள்ளின் தெளிவு.
செண்ணச்சிவிகை - வடிவமைந்த சிவிகை.
வையம் - வண்டி.
பிடிகை - ஒருவர் இருத்தற்குரிய ஊர்தி.
மறலி - பகைத்து.
கொம்பு - ஒருவகை வாத்தியம்.
மா - குதிரை.
துகள் - தூசி.

பக்கம் - 45

நகர நம்பியார் - நகரத்திலுள்ள செல்வக்குமாரர்.

ஆணை - ஆக்கினை; கட்டளை.
கச்சணி மாடம் - கச்சுக்களால் அணியப்பட்ட மாடச் சிவிகை.
செற்றுபு - நெருங்கி.
செற்றுபு செறிந்தவை - மிக நெருங்கியவை.
இவர்ந்து - பரந்து.
நுகர்பொருள் - அநுபவித்தற்கு ஏற்ற பொருள்.
உரிமை மகளிர் - அந்தப்புர மகளிர்.
வினைவர் - தொழிலையுடையவர்.
செறுநர் - தண்டிக்கப்படுவோர்.
கலம் - அணிகலம்.
தொகுதந்து ஈண்டி - கூடி நெருங்கி.
புகுதந்தீக - புகுக.

பக்கம் - 46

தாரை - நீர்வீசு கருவிகளுள் ஒன்று.
நாழிகைத் தூம்பு முதலியன: நீர்வீசு கருவிகளுள் ஒவ்வொன்றன் பெயர்.
மலர்ப்பந்து - மலர்வடிவமாகவுள்ள மட்டத்துருத்தி; நீர் வீசு கருவிகளுள் ஒன்று.
சுண்ணவட்டு - சுண்ணநீர் பொதிந்த வட்டு.
கோடு — கொம்பு.
ஊர்தி - வாகனம்.
கடைப்பகச் செப்பு - உட்புறத்தில் கடைந்திருக்கும் செப்பு.
குஞ்சம் - ஈயோட்டி.
வட்டி — கடகப்பெட்டி.
அறை - துண்டம்.
சிக்கம் - உறி.
காப்பியக் கோசம் - காப்பியமெழுதிய புத்தகங்கள்.
பள்ளி - படுக்கை.
குற்றி - குறுகிய வாயையுடைய பாத்திரம்.
வட்டிகை - சித்திரம்.
வட்டு - உருண்டை வடிவமாக உள்ளது.
முட்டிணை வட்டு - ஒன்றை ஒன்று சேர்ந்த இரட்டை வட்டு.
நக்கிரப் பலகை - முதலை வடிவமாகச் செய்த பலகை.
கழங்கு - கழற்காய் வடிவமாகச் செய்த உருக்களையுடைய ஓர் அணிகலம்.
கவறு - சூதாடுதற்கு உரிய கருவி.

பக்கம் - 47

தாழ முழவம் - மெல்லிய ஓசையையுடைய முழவம்.
தண்ணுமை - ஒருவகைப் பறை.
புடை - பக்கம்.
விரற்கவியலுள் - விரல்களின் கவித்தற்குக் கீழே.
கண்ணிணை - இரண்டு கண்கள்.
வையம் - வண்டி.
மல்லர் - ஒருவகைச் சாதியார்; இவர்கள் அரசரிடத்துப் பலவகையான பணிகள் செய்தற்கு உரியவராக இருந்தனர்.
யாக்கை — சரீரம்.

நிகர் - ஒப்பு.

பக்கம் - 48

மங்கலக் கணி - மங்கல நாளைக் கூறும் சோதிடன்.
புரவி - குதிரை.
மாசை - ஒருவகை நாணயம்; பொன்.
இரணிய கர்ப்பம் - அரசன் பொன்னிலாடுதல்; இஃது ஒருவகைப் புண்ணியக் கிரியை.
பயில்வனர் கூஉய் - கூவி அழைத்து.
உய்த்து - கொடுத்து.
இழைக்கலம் - ஆபரணம்.
இல் - வீடு. [யான.
அரியுறு - அறுத்தற்குத் தகுதி
கமுகின் படு - பாக்கு மரத்தில் உண்டாகிய பயன்; பாக்கு மரங்களையுடைய படுகையுமாம்.
நாகு - பாலுண்ணுதலைவிட்ட கிடாரி.

பக்கம் - 49

தளை - பசுவின் பின்காலைக் கட்டும் கயிறு.
அளை - தயிர்.
கழை - மூங்கிற் பிளப்பின் கோப்பு.
கோடி - பல.
படிவம் - விரதக்கோலம்.
கொடை - கொடுத்தல்.
வேழக்குழவி - யானைக் கன்று.
படை - சேணம்.
பரி - வேகம்.
பண்டி - வண்டி.
உழிதந்து - சுழன்று திரிந்து.
நிதி - பொற்றிரள்.
பணிவு - தாழ்வு.
பொய்கை - மானிடர் ஆக்காத நீர்நிலை.

பக்கம் - 50

எழுபருவமகளிர் - பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகையோர்.
ஏந்தல் - ஆண்மையில் சிறந்தவன்.
என்மரும் - என்பாரும்.
படிமை - ஒழுக்கம்.
பிழையாது - தவறாமல்.
தண்டம் - பிராயச்சித்தம்.
வென்வேல் - வெற்றியையுடைய வேல்.
காவிதிமகளிர் - காவிதிப் பட்டம் பெற்ற மகளிர்.
பெருங்குடி - வணிகருள் ஒருவகைக் குடி.
கோதை - ஒருவகை மாலை.
புறத்தோச்சியும் - முதுகில் அடித்தும்.
சாந்தம் - சந்தனம்.
தாரை - நீர்வீசு கருவிகளுள் ஒன்று.
நுதல் - நெற்றி.
ஒசிந்த - துவண்ட.

பக்கம் - 51

முனைஇ - வெறுத்து.
கயம் - பொய்கை.

பாடு அவிய - ஒலி அடங்க.
போது - பூ.
கோசிகம் - பட்டாடை.
வங்கச்சாதர் - வங்கதேசத்திலிருந்து வந்த சாதர் என்னும் உடை; ஸாதர்ா.
கொங்கு - தேன்.
கேழ் - நிறம்.
கலிங்கம் - ஒருவகை ஆடை.
உலண்டு - பட்டு நூல்.
மேவன: மேவுவன - விரும்புவன.

பக்கம் - 52

பாணித்தல் - தாமதித்தல்.
தமக்கு - உனக்கு.
தான் - நீ.

பக்கம் - 53

தன்னிடம் - உன்னிடம்.
வறியவன் - தரித்திரன்.
கொட்டினன் - அடித்தனன்.
மந்தரம் - மேரு.
அந்தணன் - இறைவன்.
எயில் - முப்புரம்.

பக்கம் - 54

வேள்வி - யாகசாலை.
கிரிசை - கிரியை.
தெய்வத்தானம் - தேவாலயம்.
மடல் - பனையோலை முதலியன.
பாடிக்கொட்டில் - சேனை வீரர் தங்கும் சிறு குடில்.
மூட்டிகைச்சேரி - கொல்லர் சேரி.
கம்மவாலயம் - கம்மியர்களின் தொழிற்சாலை.
கடுகுபு - விரைந்து.
அரணாக - காவலாக.
வரம்பு - எல்லை.

பக்கம் - 55

தளைபரிந்து - கட்டறுத்து.
சீற்றம் - கோபம்.
களம் - போர்க்களம்.
கூற்றம் - யமன்.
உழக்க - கலக்க.
அதிரநூறி - நடுங்க அழித்து.
ஏவலிளையர் - ஏவல் கேட்கும் வீரர்.
உவகை - உவத்தல்; மகிழ்தல்.
குடங்கை - வளைந்த கை.

பக்கம் - 56

மந்தணமாக - இரகசியமாக.

பக்கம் - 57

கூற்றவாணை - யமனுடைய ஆஞ்ஞை போன்ற ஆஞ்ஞை.
சுறாக்கள் - சுறாமீன்கள்.
திட்டிவிடம் - கண்களால் தீயை உமிழும் பாம்பு; நஞ்சுவிழி அரவு.
அருத்தி - உண்ணச்செய்து.

பக்கம் - 58

ஓம்படை - பாதுகாத்தற்குரிய மொழி.
பொறித்த - எழுதிய.
நிருமித்து - சிருட்டித்து; உண்டாக்கி.
வெய்துயிர்த்து - வெம்மையாக மூச்சுவிட்டு.

பக்கம் - 59

குரவை - ஒருவகைக் கூத்து.
வளி - வருங்காற்று.

கடைஇ - செலுத்தி.
என் வலித்தனையோ - என்ன நினைத்தாயோ.
இராசமாதேவி - பட்டத்தேவி.

பக்கம் - 60

இறைஞ்சினன் - வணங்கினன்.
எம்பெருமான் - பெருமாட்டி: இங்கே னகரஒற்று பெண்பாலை உணர்த்தி நின்றது; "தம்பெருமான் பாதமுடி தீண்டி" (சீவகசிந்தாமணி, 2608) என்றாற்போல.
வல்வில் இளைஞன் - விற்றொழில் சிறந்த இளைய வீரன்.
முளைக்கோல் பெருந்திரை - முளைகளையுடைய கோல்களில் மாட்டிய பெரிய திரைச் சீலை.

பக்கம் - 61

அணுகுதற்கு - நெருங்குதற்கு.
மாயிருஞாலம் - மிகப் பெரிய பூமி.

பக்கம் - 62

உறுதிச்சுற்றத்தார் - நட்பினர் முதலிய ஐவகையார்.
பால் - ஊழ்.
முதுமகன் - வயோதிகன்.
நீர்த்துறை நகரத்தார் - நீர்த்துறையில் அமைக்கப்பெற்ற புதிய பாடி நகரத்திலுள்ள பரிசனத்தார்.
முதற்பெருந்தேவி - பட்டமகிஷி.

பள்ளிகொள்ளாளுகி - துயில்கொள்ளாமல்.
நாராசம் - இருப்புக்கம்பி.
அசுணநன்மா - இசையை அறிவதொரு விலங்கு.
படிமறத்தல் - மெய்ம்மறத்தல்.
திங்கள் - சந்திரன்.
விண்மீன் - நக்ஷத்திரம்.
பொலிவு - அழகு.
விலாவித்து - பிரலாபித்து; அழுது.

பக்கம் - 64

மதி - சந்திரன்.
அணிமுடியண்ணல் - அழகிய கிரீடத்தையுடைய தலைவன்.
சுழலுவன - சுற்றுவன.
பஞ்சி - பஞ்சு.
பணை - மூங்கில்.
பயின் - ஒருவகை மரம்.
ஞாழல் - புலிநகக்கொன்றை.
படிமம் - வடிவம்.

பக்கம் - 65

அயிர்மணலடுக்கம் - நுண்மணற் குவியல்.
கணை - திரட்சி.
சாலி - நெல்.
விடை - எருது.
கம்பல் - முழக்கம்.
களமர் கம்பல் - களத்தில் வேலை செய்வோரது முழக்கம்.
நிரம்பு அணி - நிரம்புதலைப் பெற்ற.
களைகளை - களைகளைக் களைகின்ற.

பதலையரியல் - பத்தரில் உள்ளன கள்.
தடாரி - கிணைப்பறை.
சும்மை - ஒலி.
இரையாறு - முழங்குகின்ற நதி.
இறங்கு குரல் - விளைந்த கதிர்.
இறடி - தினை.
இறுங்கு - சோளம்.
புகர்ப்பூ - சிவப்பையுடைய பூ.
சுறுய் - கடலை.
தோரை - ஒருவகை நெல்.
விளையுள் - விளைச்சல்.
செருத்தல் - மடி.
செதும்பு - சேறு.
முசுண்டை - முசுட்டைக் கொடி.
குழை - தளிர்.
பிணை - பெண்மான்.
திரிமருப்பு இரலை - முறுக்கிய கொம்பையுடைய கலைமான்.
செறியிலை - நெருங்கிய இலை.
காயா - ஒருவகை மரம்.
உறைப்ப - சிந்த.
தடவு நிலை - பெரிய நிலையை உடைய.
பிடவு - பிடா.

பக்கம் - 66

ஈரம் - அன்பு.
இதண் - பரண்.
பொத்திய - மூட்டிய.
ஆரத்துணி - சந்தனத்துண்டு.
வெள்ளி - வெள்ளை நிறம்.
தகரம் - ஒருவகை மரம்.
நறை - ஒருவகைக் கொடி.
நாகம் - ஒருவகை மரம்.
வழை - சுரபுன்னை மரம்.
அருப்பிடை - அரிய வழியின் இடையே.
ஆசினி - ஈரப்பலா.
பிண்டி - அசோக மரம்.
கடிநாள் வேங்கை - தான் மலர்ந்து மணநாளைப் புலப் படுத்தும் வேங்கைமரம்.
சுள்ளி - ஆச்சாமரம்.
சூரல் - ஒருவகைப் பிரம்பு.
பால்வெள் - மிக வெள்ளிய.
பனிச்சை - ஒருவகை மரம்.
வேய், வெதிரம் - மூங்கில் விசேடம்.
குளவி - மலை மல்லிகை.
மாரோடம் - செங்கருங்காலி.
ஆரம், சந்து - சந்தன மர விசேடம்.
தமாலம் - பச்சிலை மரம்.
விஞ்சையம் பெருமலை - விந்த மலை.
நெஞ்சகம் - மூங்கில்.
மருப்பு - யானைத்தந்தம்.
மூடந்தாள் - விளைந்த அடி.
குடம்புரை - குடத்தைப் போன்ற.
நெய் - தேன்.
தேன்தொடையல் - தேனடை.
நறவம் - குங்குமமரம்.
பரீஇய - அறுத்த.
ஐவன நெல் - மலை நெல்.
பிறங்கல் - திரட்சி.
பாவையிஞ்சி - இஞ்சிக்கிழங்கு.

பக்கம் - 67

நாகத்தல்லி - நாகப்பூவின் உள்ளிதழ்.
இணர் - கொத்து.
சாலேகம் - சிறு தேக்கு.
உட்காழ் - உள்ளே வைரத்தை யுடைய.
கறி - மிளகு.
கடு - கடுமரம்.
அரக்கின்கோல் - கொம்பரக்கு.
அதிரல் - மோசிமல்லிகை.
மணிச்சை - ஒருவகை மரம்.
மயிலை - இருள்வாசி (இருவாட்சி.)
மௌவல் - செம்முல்லை.
ஞாழல் - குங்குமமரம்; புலிநகக் கொன்றையுமாம்.
தடவு - தடா (மரவிசேடம்.)
பிடவு - பிடா.
முளவு - முள்.
புய்த்து - பெயர்த்து.
சே - ஒரு மரம்.
கோடல் - வெண்காந்தள்.
கொய்யல், அனிச்சம், பனிச்சை: இவை ஒவ்வொரு மரச் சாதி.
பயின் - ஒரு மரம்.
ஆமா - காட்டுப்பசு.
தாமாறு - தாவும்படி.

பக்கம் - 68

மூரம்பு - பருக்கைக் கற்களாலாகிய மேடு.
கற்சிறை - கல்மதில்.
சார் - பக்கம்.
உழலை - இரண்டுபக்கத்துமுள்ள கற்களில் துவாரஞ் செய்த விடத்து மூங்கில் முதலியவற்றைச் செலுத்தி வைத்திருக்கும் ஒருவகைவாயில்.
தூறு - செடிகளின் தொகுதி.
ஓமை முதலியன: மரவிசேடம்.
அரவு - நாகமரம்.
இரவு - இருள்மரம்.
காலவேகம் - யானையை வருத்துவதாகிய ஒருவகை வியாதி.
கனற்ற - வருத்த.
கண்ணணங் கவிரொளி - காண்போர் கண்களை வருத்துகின்ற மிக்க ஒளி.
கடவுள் - சிவபெருமான்.
நிமித்த நூல் - சோதிட நூல்.
புரோசைக் கயிறு - யானைக் கழுத்தில் கட்டும் கயிறு.
தவிசு - யானையின் முதுகில் போடப்பட்டுள்ள மெத்தை.
கடித்தகம் - யானையின் பின்புறத்தே கட்டப்பட்டிருக்கும் கேடசம்போன்ற ஒருவகைப் படை.

பக்கம் - 70

துயில - நீங்க.
நீர்க்கடன் - உதகக்கிரியை.
புட்கரணி - குளம்.
வெள்ளி - சுக்கிரன்.
இன்றியமையாதது - அவசியமானது.
பொறை - பாரம்.

பக்கம் - 71

கொடிப்படை - முன்படை.

கூழை - பின்படை.
கடித்தகப்பூம்படை - கேடகம் போல்வதோர் ஆயுதம்.
புரிசைச்சுற்றம் - சுற்றுப்படை.
புரிசை - மதில்.
அனித்தம் — அனிச்சமலர்.
பனித்தல் - நடுங்குதல்.
புள் - பறவை.
தூத்து - விளக்கி.

பக்கம் - 72

புணை - தெப்பம்.
கணை - பாணம்.

பக்கம் - 73

சவரர், புளிஞர் - ஒருவகை வேடர்கள்.
புட்குரல் - பறவையின் குரல்.
பொதும்பு - செறிவு.
கடறு - அருநெறி.
பயம்பு - பள்ளம்.
பாழி - குகை.
முதுமரப்பொந்து - ஆலமரப் பொந்து.
குரக்கினம் - குரங்கின் கூட்டம்.

பக்கம் - 74

காலன் - யமன்.

பக்கம் - 75

அத்தியாளி - ஒரு வகை விலங்கு; இது யானையை வருத்துவது.
பொருது - யுத்தஞ்செய்து.
வாணிகர் - வியாபாரம் செய்வோர்.
ஈட்டி - சம்பாதித்து.
ஒழிமின் - விட்டுவிடுங்கள்.

பக்கம் - 76

அழல் - நெருப்பு.
தயரம் - துக்கம்.
தைவர - தடவ.

பக்கம் - 77

செருக்கு - கர்வம்.
புகைப் படலம் - புகையின் தொகுதி.
இறைவன் - தலைவன்.

பக்கம் - 78

முதுமகன் - வயோதிகன்.
துத்தரிக்கொம்பு - ஒரு வகை வாத்தியம்.
விண்மீன் - நக்ஷத்திரம்.

பக்கம் - 79

பணித்த — கட்டளையிட்ட.
பாடிநகரம் — பலவகைச் சேனைகள் தங்குமிடம்.
கவறு - சூதாடு கருவி.
பளிக்கு நாய் - பளிங்காற் செய்த காய்.
பேழை - பெட்டி.
சிக்கம் - சிப்பு; உறியுமாம்.
காண்டம் - கரண்டகம்.
பட்டு அமளி - பட்டாலாகிய படுக்கை.
ஆலவட்டம், சாந்தாற்றி : விசிறி விசேடங்கள்.
மாலைப் பந்து - மாலையாலாகிய பந்து.
படவம் - ஒருவகைப் பறை.
விதானம் - மேற்கட்டி.

சிலதர் - ஏவல் செய்வோர்.
இயவர் - வாத்தியக்காரர்.
நலிவு - வருத்தம்.

பக்கம் - 80

மருத்துவர் - வைத்திய நூலோர்.
வண்ண மகளிர்-அலங்கரிக்கும் மகளிர்.
படமாடம் - கூடாரம்.
உத்தர குரு - மேருவின் வடக்கேயுள்ள போகபூமி.
கடாரம் - காழகம் (பர்மா.)
பாடல் - பாடலிபுத்திர நகரம்.
ஓவியத் தொழிலர் - சித்திர வேலைக்காரர்.
வண்ணக் கம்மர்-வர்ண வேலைக்காரர்.

பக்கம் - 81

பன்றியின் எறி - பன்றிப் பல்; பன்றி முள்ளுமாம்.
ஊகம் - கருங்குரங்கு.
அற்றகாலம் - வறுமையுற்ற காலம்.
அடியுறை செய்தொழில் - அடிமைத் தொழில்.
சிற்றரண் - சிறிய காவலிடங்கள்.

பக்கம் - 82

இலாவாண காண்டம் - இலாவாண நகரத்தில் உதயணன் இருந்தபோது நிகழ்ந்த செய்திகளைக் கூறும் பகுதி.
காவணம் - பந்தல்.
தாரோய் - மாலையை உடையோய்.

பக்கம் - 83

திருமால் - விஷ்ணு.
திருமகள் - இலக்குமி.
மன்னுக - நிலைபெற்றிடுக.
தருக்கி - செருக்குற்று.

பக்கம் - 84

பெருங்கணி - கணித நூலில் வல்லவர்களில் பெரியவன்.
ஏற்றுரி - இடபத்தின் தோல்.
பணைக்கொட்டில் - முரசு இருத்தற்குரிய இடம்.
கொற்றவை - துர்க்கை.
அணை - ஆசனம்.

பக்கம் - 85

குறுந்தடி - சிறிய தடி.
சுண்ணப் பெருங்குடம் - வாசனைப் பொடிகளையுடைய பெரிய குடங்கள்.
முரண் - மாறுபாடு.
அறச்சோறு - தருமத்திற்காகப் போடப்படும் அன்னம்.
சமிதைகள் - சமித்துக்கள்.
புலந்த - ஊடிய.
கண்ணி - மாலை.
தூத்து - விளக்கி.
துகள் - தூசி.
போது - மலரும் பருவமுள்ள அரும்பு.
சந்திராதித்தம் - அருகதேவனுடைய குடைகளுள் ஒன்று.

பக்கம் - 86

தீர்த்தங்கரர் - சைனாகமங்களை இயம்பிய ஆசிரியர்கள்; அவர்கள் இருபத்துநால்வர்.
நூல்வினைக் கம்மியர் - பஞ்சு நூலால் செய்யப்படும் தொழிலையுடைய வேலைக் காரர்.
அரிவைமார் - மகளிர்.
வள்ளம் - கிண்ணம்.

பக்கம் - 87

மண்ணு நீர் - மஞ்சன நீர்.
பாடகம் - மகளிருடைய ஒரு வகைக் காலணி.
கடிமணம் - புதிய விவாகம்.
அறுதொழில் - ஓதல், ஓது வித்தல், வேட்டல், வேட்பித் தல், ஈதல், ஏற்றல் என்பன.
முத்தீ - ஆகவனியம், காருக பத்தியம், தக்ஷிணக்கினி என்பன.
போகிய - முற்றச்சென்ற.
பிரதிட்டை - பிரதிஷ்டை.
பெருங்கணிச் சங்கத்தார் - உயர்ந்த சோதிடர்களின் கூட்டத்தார்.
திணைகள் - ஒருவகை உத்தியோகஸ்தர்.

பக்கம் - 88

ஐம்பெருங்குழு - அமைச்சர், புரோகிதர், சேனுபதியர், தூதவ சாரணர் என்பார்.
எண்பேராயம் - கணக்கர், கரும காரர், கனகச்சுற்றம், கடை காப்பாளர், நகரமாந்தர், படைத் தலைவர், யானைவீரர், குதிரை வீரர்.
முக்குடை - சந்திராதித்தம், நித்திய விநோதம், சகல பாசனம்; இவை அருகதேவ னுக்கு உரியவை.

பக்கம் - 89

ஆன்பால் - பசுவின்பால்.
வம்பலர் - அயல்தேசத்தார்.
பாடை - பாஷை.
தேசிகச்சேரி - பல நாட்டு வாணிகர் இருக்கும் தெரு.
கழகம் - சூதாடும் இடம்.
அருகலும் - சமீபமான இடத்தும்.
மட்டுமகிழ் - கள்ளை உண்டு களிக் கின்ற.
காரிகை பகரும் - (தம்) அழகை விற்கும்.
மகளிர் - இங்கே பரத்தையர்.
கோடிகர் - ஆடை நெய்வோர்.
மறுகு - வீதி.
கூத்துறை சேரி - கூத்தர் இருக்கும் இடம்.

பக்கம் - 90

நாடினன் - ஆராய்ந்து யோசித் தான்.
துறந்தோர்கள் - துறவிகள்.
வேற்ருேன் - அயலான்.
ஆண்டுள்ள - அவ்விடத்துள்ள.
சமயவிகற்பம் - மத வேறுபாடு.
இல்லம் - வீடு.
கிழி - ஆடைத்துண்டு.
யவனப்பாடி - யவனதேசத்து வேலைக்காரர் தங்கிய தெரு.

பூணி - வண்டி இழுக்கும் எருது.
ஈண்டு - இவ்விடம்.
எஞ்சியுள்ள - மிகுந்துள்ள.

பக்கம் - 91

வெந்திறல் மிலேச்சர் - மிக்க பராக்கிரமத்தை உடைய மலேச்சாதியார்.
மந்திர மாடம் - ஆலோசனை செய்தற்குரிய மாளிகை.

பக்கம் - 92

காஞ்சனை - காஞ்சனமாலை.
தமர் - உறவினர்.
கவன்று - கவலையடைந்து.
சைத்தியோபசாரம் - குளிர்ச்சியான பொருள்களால் செய்யும் உபசாரம்.
ஊர்கோள் - ஒரு கிரகம்; இக்காலத்து அது கோட்டையென்று வழங்கப்படும்.

பக்கம் - 93

கருடராசன் - இந்திர பதவியை அடையச் செல்லுகையில் இந்திராணி இன்பம் ஒன்றையே விரும்பியிருந்த காலத்து மலைப்பாம்பாகும்படி அகத்திய முனிவரால் சபிக்கப்பட்டான் என்பது புராண வரலாறு.
நுகர்வது - அநுபவிப்பது.
அற்றம் காத்தல் - சோர்வு வாராமல் பாதுகாத்தல்.
குரவர் - பெரியோர்.

உண்டாடல் - சோலையில் சென்று பலவகைப் பொருள்களையும் நுகர்ந்து விளையாடல்.

பக்கம் - 94

சுருங்கை - நிலவறையாக அமைந்திருக்கும் நுழைவழி.

பக்கம் - 95

உறைவிடம் - தங்குமிடம்.
உவகைக் கண்ணீர் - ஆனந்த பாஷ்பம்.
பாவையே - பாவைபோல்வாய்.
அவலம் - சோர்வு.

பக்கம் - 96

அழற்கருமம் - தீமூட்டுதலாகிய காரியம்.
திண்ணறிவாளன் - உறுதியான அறிவை உடையவன்.
பிற்பயமுடைமை - பின்னாலே பிரயோஜனத்தை உடையதாதல்.
ஓவியம் - சித்திரம்.
பொறித்து - எழுதி.
இருமுதுகுரவர் - தாய் தந்தையர்.

பக்கம் - 97

வேழவேட்டம் - யானை மேலுள்ள விருப்பம்.
செல்சார்வறுத்தபின் - பற்றுக் கோட்டை இழந்தபின்பு.
மறைகொள் மாயம் - இரகசியமாகிய வஞ்சச் செயல்.
துறைநகர் விழவு - நீர் விளையாட்டு.

மாதரை - வாசவதத்தையை.
போதுவல் - பின்வருவேன்.
வாழ்தலாற்றேன் - வாழேன்.
விலாவித்தனன் - பிரலாபித்துப் புலம்பினன்.
இறைமை - அரசர்க்குரிய தலைமை.
அவரபக்கம் - கிருஷ்ணபக்ஷம்.

பக்கம் - 98

கருவுற்று - கருப்பமுற்று.

பக்கம் - 99

வள்ளுவமுதுமகன் - வருங்காலச் செய்தியை முரசறைந்து நகரத்தார்க்குத் தெரிவிப்போன்.
வறுவிது - பொருளில்லாதது.
தாபதப்பள்ளி - தவத்தினருடைய இடம்.
கடவுட்டானம் - தேவாலயம்.
சுனை - மலையிலுள்ள நீர்நிலை.
குரம்பை - சிறுவீடு.
செறிந்தது - நெருங்கியது.
தூசக்குடிஞை - வெள்ளிய ஆடையாலாகிய சிறு குடிசை.
துலாம் - தூணின் மேலுள்ள ஓர் உறுப்பு.
பல்காழ்த்திரை - பல குத்துக் கோல்களுடனே செய்யப்பட்ட திரைச்சீலை.
படாகை - பெருங்கொடி.
வீறெய்தி - வேறொன்றிற்கு இல்லாத அழகைப் பெற்று.
நந்தனவனம் - பூஞ்சோலை.
உரிமை - அந்தப்புரமகளிர்; இங்கே இந்திராணி.
குற்றும் - பறித்தும்.
சுள்ளி - மராமரம்.
வழுத்தி - போற்றி.
திளைத்தல் - இடைவிடாமல் அநுபவித்தல்.

பக்கம் - 100

உரிமைச்சுற்றம் - அந்தப்புர மங்கையர்.
ஐந்திணைமரங்கள் - குறிஞ்சி, முல்லை, பாலை, நெய்தல், மருதம் என்னும் ஐந்து நிலங்களுக்குரிய மரங்கள்.
மிஞிறு, தும்பி, சுரும்பு: வண்டின் சாதி விசேடங்கள்.

பக்கம் - 101

இயற்றுத் தவிசு - இயற்கையாகவே அமைந்த ஆசனம்.
சாரணர் - இங்கே சைன முனிவர்.
கான்யாறு - காட்டாறு.

பக்கம் - 102

குறுவாய் - சிறிய வாய்.
அரமகளிர் - தெய்வமங்கையர்.
குழையர் - தளிர்களை ஏந்தியவர்.
கோதையர் - மாலையை அணிந்தவர்.
இழையர் - ஆபரணங்களை உடையோர்.
இணர்த்தழையர் - பலவகைப் பூங்கொத்தாலாகிய தழையென்னும் உடையை உடையோர்.
ஐயர் - தலைவர்.

பாசவல் - பச்சை அவல்; வருது இடிக்கப்படும் அவல்.
அம்மனை வள்ளைப்பாட்டு - உலக்கைப் பாட்டு.
இருதலைப்புள் - இரண்டு தலையையுடைய ஒருவகைப் பறவை.
சுத்திகை, பித்திகை: மாலை விசேடம்.
மறலி - மாறுபட்டு.

பக்கம் - 103

நறுவிய - நல்ல மணமுள்ள.
செறிவு - தொகுதி.
நலிவோர் - வருத்துவோர்.
பொலிவு - அழகு.
மரவுரி உடுக்கை - மரத்தோலாலாகிய உடை.
குடங்கை - உள்ளங்கை.
பிணையல் - மாலை.

பக்கம் - 104

தெய்வத் திகிரி - தெய்வத் தன்மையுள்ள சக்கரம்.
கண்கூடாக - பிரத்தியக்ஷமாக.
சிதைத்து - கலைத்து.

பக்கம் - 105

முடியணி - தலைக்குரிய ஆபரணம்.
துகள் - தூசி.
புறம் - முதுகு.
தைவந்தும் - தடவியும்.
இயற்றுவித்து - உண்டாக்கி.

பக்கம் - 106

பரிமாவூர்ந்து - குதிரையேறி.
கருமக் கள்வர் - ஒரு காரியத்தைக் கருதித் திருடர் வேடம் பூண்டோர்.
வெய்துயிர்த்து - வெம்மையாகிய பெருமூச்சு விட்டு.
சூழ்ச்சி - ஆலோசனை.

பக்கம் - 107

மறமாச்சேனன் - பிரச்சோதன அரசன்.
சிறுசொல் - பழிச்சொல்.
விசும்பு - ஆகாயம்.
பயப்பது - கொடுப்பது.
மாயவிறுதிவல்லையாகிய - வஞ்சனையாகிய மரணத்தில் வல்லமையுடையாயாகிய.

பக்கம் - 108

உயிர்க்கிழத்தி - மனைவி.
ஊக்கம் - உற்சாகம்.
காவலன் - இங்கே பிரச்சோதனன்.
அன்னே - தாயே.
கரி - யானை.

பக்கம் - 110

இதயவாசனை - ஓர் ஆபரணம்.
களிகை - கழுத்தில் அணியப்படும் ஓர் ஆபரணம்.
உத்தி - சீதேவியென்னும் ஆபரணம்.

பக்கம் - 111

பிணிப்புண்ட - கூட்டுண்ட.
அணுகாமல் - நெருங்காமல்.
அகலாமல் - பிரியாமல்.

பக்கம் - 112

மகதகாண்டம் - உதயணன் மகத நாட்டில் இருந்தபோது

நிகழ்ந்தவற்றைக் கூறும் பகுதி.
நட்பு - சிநேகம்.
விலக்கற்பாலதன்று - ஒழிக்கும் பகுதியை உடையதன்று.
உரித்தான - உரியதான.

பக்கம் - 113

பார்ப்பன வடிவம் - பிராமண வடிவம்.
மருண்டு - மயக்கத்தை அடைந்து.
பிணை - பெண்மான்.
தேசிகம் - ஒளி; கௌரவம்.
மறம் - வீரம்.
வீரியம் - இங்கே நிலவளம்.
அலகை வேந்தன் - மற்ற அரசர்க்கு உவமையாகவுள்ள அரசன்.

பக்கம் - 114

அரம்பு - குறும்பு செய்யும் கூட்டம்.
கரம்பு - பாழ்நிலம்.
சேரிகள் - தெருக்கள்.
எறிபடைப்பாடி - ஈட்டி, வேல் முதலிய படைகளையுடைய வீரர்சேரி.
தமிழச்சேரி - தமிழவீரர் தெரு.
மிலேச்சச்சேரி - மிலேச்சநாட்டு வீரர் தெரு.
வித்தக வினைஞர் - சிற்பவேலை செய்வோர்.
குயிற்றிய - செய்த.
ஒட்டுவினை மாடம் - செங்கற்களை ஒன்றோடொன்று பொருந்த ஒட்டிய மாடம் - வௌவால் நத்தி.
கொட்டு வினைக்கொட்டில் - செம்பு முதலியவைகளைக் கொட்டி வேலை செய்யும் இடம்.
அறத்தியல் கொட்டில் - தருமோபதேசம் செய்யும் இடம்.
அம்பலம் - பொதுவிடம்.
கோழிகளை மரபில் பொரச் செய்தல் - கோழிகளை அவற்றின் இயல்பறிந்து சண்டைக்கு விடுதல்.
யானை வடிக்கும் வட்டம்-யானைகளை வயமாக்கிப் பயிற்றும் வட்டமான இடங்கள்.

பக்கம் - 115

அரங்கம் - நாடகசாலை.
கழகம்-சூதாடும் இடம்; படைக்கலம் பயிலும் இடமுமாம்.
கடிசெல் புரவி - வேகமாகச் செல்லுகின்ற குதிரை.
அறாஅ - நீங்காத.
அறச்சோற்று அட்டில் - தருமச்சோறு சமைக்கும் மடைப்பள்ளி.
இளமரக்கா - இளமரச் சோலை.
தாபதப்பள்ளி - முனிவர் ஆசிரமம்.
ஈமம் - மயானம்.
சாதனை - விரதங்கொண்டு பயிலல்.
ஒருதலை - நிச்சயம்.

பக்கம் - 116

காமதேவன் - மன்மதன்.

காஞ்சுகியர் - சட்டையிட்ட முதிய சேவகர்கள்.
வேற்றுமை - வேறுபாடு.

பக்கம் - 117

சிலதியர் - ஏவலாட்டியர்.
பொருள் நசை - திரவியத்திலுள்ள விருப்பம்.

பக்கம் - 118

மறையாகிய கஞ்சிகை - மூடு திரை.
மஞ்சு - வெண்மேகம்.
அமளி - படுக்கை.
தாள் முதல் - அடி.
பருகுவன்ன நோக்கமொடு - கண்ணாற் பருகும் தன்மையையொத்த பார்வையோடு.
பையாந்து - துன்பமுற்று.

பக்கம் - 119

இருவயின் - இரண்டிடம்; தலைவன் தலைவிகளின் உள்ளம்.
ஏழிருள் - ஏழ் இராத்திரி.
விழைவு - விருப்பம்.

பக்கம் - 122

சென்னி - தலை; கூந்தல்.
சாந்தம் - சந்தனம்.

பக்கம் - 123

மாசு - குற்றம்.
புன்கண் - துன்பம்.

பக்கம் - 124

கடியறை - மணவறை.
காந்தருவமணம் - ஒரு கன்னியும் தலைமகனும் ஒருவரை ஒருவர் விரும்பி மனமொத்துக் கூடும் மணம்.
ஈட்டிய - சம்பாதித்த.

பக்கம் - 125

அகழ்வித்து - தோண்டி.

பக்கம் - 126

மாசை - பொன்.
ஈண்ட வீசி - விரையக் கொடுத்து.
கஞ்சிகைச் சிவிகை - திரையால் மூடிய பல்லக்கு.

பக்கம் - 127

சிலதமாக்கள் - வேலைக்காரர்கள்.
உசும்புதல் - எழுப்புதல்.
கா - சோலை.
பொலிவில - அழகில்லாதன.
வெப்பம் - வெம்மை.
செறிந்து - நெருங்கி.
பள்ளியறை - படுக்கையறை.
பயிலுதல் - நன்றாகக் கற்றல்.

பக்கம் - 128

புடைபெயர்ந்தனள் - நகர்ந்தனள்.
சூலம் - மாடத்தின்மேலுள்ள இடிதாங்கி என்னும் உறுப்பு.
அச்சமுயக்கம் - அச்சத்தால் உண்டாகிய தழுவுகை.
கூகை - கோட்டான்.
வேள்வி - யாகம்.
குடமுழவு - குட வடிவமாக உள்ள ஒருவகை வாத்தியம்.
பயிற்றுதல் - கற்பித்தல்.
சுவைத்தொழில் முகன் - ரஸக்ஞன்.
செப்பஞ்செய்து - செவ்வை செய்து.

பக்கம் - 129

தானம் - இடம்.
திவவு - நரம்புகளை இறுக்கும் யாழின் வலிக்கட்டு.

சாளரம் - பல்கணி.
செவிச்சுவை அமிர்தம்-செவிக்கு உணவாகிய சுவையை உடைய அமிழ்தம்; என்றது இசையை.
கொடுமுடி - மாடத்தின் மேல் உள்ளதோர் உறுப்பு.
பயிர் - ஒருவகைப் பறவை.
சோர - மெய்ம்மறந்துவிட.
குறிஞ்சி - குறிஞ்சிமரம்.
குரங்க - வளைய.
மைம்மலர்க் கண்ணி - நீலமலர் போன்ற கண்ணையுடைய பதுமாபதி.
ஏனோர் - ஏனையோர், மற்றையோர்.

பக்கம் - 130

பேணுவாளாய் - மிகவிரும்பிப் பாதுகாப்பாளாகி.
இசைவிலவாக - பொருத்தமில்லாதனவாக.

பக்கம் - 131

நாறியும் - மோந்தும்.
உற்றும் - தழுவியும்.
அற்றம் - சமயம்.
ஐம்புலவாயில் - மெய், வாய், கண், மூக்கு, செவி.
வைகல்தோறும் -நாள்தோறும்.
பரிசங்கள் - பெண்ணுக்காகக் கொடுக்கப்படும் பொருள்கள்.

பக்கம் - 132

தெருமரல் - மனஞ்சுழன்று வருந்துதல்.
சங்கேதம் - உத்தேசமாகிய குறிப்பு.
பாடி - படைவீடு.

பக்கம் - 133

அரண் - காவல்.
ஆக்கம் - விருத்தி.

பக்கம் -134

கையுறை - காணிக்கை.
அத்தாணி - அரசிருக்கை.
நட்டோர் - சிநேகிதர்கள்.
நன்னராளன் - நன்மையை உடையவன்; இங்கே உதயணன்.
சூளுறவு - சபதம்.

பக்கம் - 135

படையொற்றாளர் - சேனைக்குரிய ஒற்றர்கள்.
புறங்காத்து - பாதுகாத்து.
கூறுபடுத்து - வகைப்படுத்து; பிரித்து.

பக்கம் - 136

உப்பணை - உப்பாலாகிய கரை.
புறம்போந்து-வெளியே வந்து.
புல்லி - தழுவி.
தமர் - தம்மைச் சேர்ந்தவர்.
எமர் - எம்மைச் சேர்ந்தவர்.
ஆற்றினன் - செய்தனன்.

பக்கம் - 137

விறல் - பிரதாபம்.
முதுமகன் - வயோதிகன்.
கேண்மை - சிநேகம்.
குறைகொள்ளும் - குறையிரந்து விரும்பும்.
கோடல் - கொள்ளுதல்.

பக்கம் - 138

விழுப்பம் - சிறப்பு.

## பக்கம் - 139

வம்மின் - வாருங்கள்.
இயல் - இயல்பு.
வழா - வழுவாத; தவருத.
பெருமூதாளர் - முதியோர்.
உண்மலி உவகையளாய் - உள்ளே மிக்க மகிழ்ச்சியை யுடையவளாகி.
நீங்கு திறன் - நீங்கும் விதம்.
வதுவை - கல்யாணம்.
உழைக்கலம் - பக்கத்தில் வைத்துக்கொள்ளும் பாத்திரங்கள்.

## பக்கம் - 140

யாப்புடை நெஞ்சம் - உறுதியான மனம்.
சொற்றனள் - சொன்னாள்.

## பக்கம் - 141

கூற்றுவன் - யமன்.
கணி - நிமித்திகன்.
அடல் - வலி.
பொருவினைப் படாகை - போர் செய்தற்கு எடுக்கும் பெருங் கொடி.
படாஅக்கொட்டில் - கூடாரம்.
கடாஅக்களியானை - மதத்தால் களிக்கின்ற யானை.

## பக்கம் - 142

பணைத்தோள் - பருத்த தோள்.
பரியாளம் - பரிவாரம்.
வடுத்தொழில் - குற்றச் செய்கை.
ஓம்படுத்து - பாதுகாக்கும்படி ஒப்பித்து.

## பக்கம் - 143

அலங்குதல் - அசைதல்.
படைக்கூழ் - சேனைகளுக்கு உரிய உணவு.
பள்ளி வையம் - படுத்தற்குரிய வண்டி.
கோட்டேர்இ - யானைத் தந்தத்தால் செய்த வாகனம்.
கொடிப்படை - முன்படை.
படிப்படை - கூலிப்படை.
புடைப்படை - சுற்றுப்படை.

## பக்கம் - 144

புல்லறிவினை உடையேன் - அற்பமான அறிவை உடையேன்.
எரிவாய்ப்பட்ட பஞ்சி - அக்கினியில் பட்ட பஞ்சு.
சிலைத்தன - ஒலித்தன.
தூசி - முன்படை.
மலைத்தன - போர்செய்தன.

## பக்கம் - 145

விலங்கின - குறுக்கிட்டன.
குந்தம் - கைவேல்.
தோமரம் - எறியும் ஒருவகை ஆயுதம்.
தடக்கை - வளைந்த கை.
அழிந்தன - மிகுந்தன.

## பக்கம் - 147

வத்தவ காண்டம் - உதயணன் வத்தவ தேசத்தில் இருக்கையில் நிகழ்ந்த செய்திகளைக் கூறும் பகுதி.
நெய்த்தோர்ப் பட்டிகை - போர்க்களத்தில் வெற்றி பெற்றோர்க்குத் தலைவனால்

கொடுக்கப்படும் ஒரு விருதோலை.
கவரி - சாமரம்.
இயம்ப - ஒலிக்க.
பொழியாநிற்ப - பொழிய.
அமைச்சர்கள் - மந்திரிகள்.

### பக்கம் - 148

அகற்றி - நீக்கி.
நாற்சந்தி - நான்கு தெருக்கள் கூடுமிடம்.
மூச்சந்தி - மூன்று தெருக்கள் கூடுமிடம்.
மூப்பு - முதுமை.
மூடங்கினீர் - வளர்ந்து மெலிவை அடைந்தீர்.
உறுப்பு - அவயவம்.
மன்றம் - சபை.
போரின்வாழ்நர் - வீரர்.
புலத்தின்வாழ்நர் - குடிமக்கள்.
தாரின்வாழ்நர் - நெய்தற் றொழில் செய்பவர்.
பண்டத்துப் பயத்தின்வாழ்நர் - வாணிகஞ்செய்பவர்.
படியிற்றிரியா ஓத்தின் வாழ்நர் - அந்தணர்.
ஒழுக்கின் வாழ்நர் - நல்லொழுக்கத்தவர்.
சிற்பக் கயிற்றின் வாழ்நர் - சிற்பநூலால் வாழ்பவர்.
கயிறு - நூல்.
உயர்ந்தோர் தலையா இழிந்தோர் ஈறா - பெரியோர்கள் முதல் இழிந்தவர்கள் எல்லையாக.
அறம் - தருமம்.
கூற்று - யமன்.
கவர்ந்து - கொள்ளைகொண்டு.
நானிலங்கள் - நால்வகையான நிலங்கள்.
அருவிலை நன்கலம் - அரியவிலை பெற்ற நல்ல ஆபரணம்.
செங்கதிர்ச்செல்வன் - சூரியன்.
பாடு - அத்தமித்தல்.
திங்கள் - மாதம்.

### பக்கம் - 149

ஓச்சி - செலுத்தி.
குறும்பர் - குறுநிலமன்னர்.
கைம்மாறு - பிரதியுபகாரம்.
மாட்சிமை - பெருமை.
மாடம் - மாளிகை வடிவமாகிய கோயில்.
வழிபடல் - வணங்குதல்.
அடிசிற்சாலை - அன்னசத்திரம்.
நுகர்பொருள் - அநுபவித்தற் கேற்ற பொருள்.
கொணர்ந்தவர் - கொண்டு வந்தவர்.
சேமித்து - பாதுகாத்து.

### பக்கம் - 150

கூத்தியர் இருக்கை - கோயிற்குரிய பணிசெய்யும் பெண்டிர்களின் தெரு.
கடப்பாடு - கடமை.
வருடும்பொழுது - தடவும் பொழுது.
இடப்பட்டது - போடப்பட்டது.

பக்கம் - 151

விம்மிதமுற்று - ஆச்சரிய மடைந்து.
மெய்காப்பாளர் - சரீரத்தைப் பாதுகாப்பவர்.
தாங்கா உவகை - அடங்கா மகிழ்ச்சி.
உலவாவிருப்பொடு - கெடாத ஆசையோடு.
புலர்தலைகாறும் - பொழுது விடியுமளவும்.
உள்ளி - நினைந்து.

பக்கம் - 152

கருமமாக்கள் - காரியக்காரர்.
இழிந்த ...... இனிது - இழிந்த ஜனங்களுடைய உறவைக் காட்டிலும் உயர்ந்தோர்களுடைய விரோதம் சிறந்தது.

பக்கம் 153

அஞ்சலி செய்ய - கைகுவித்து வணங்க.
விடை - உத்தரம்.

பக்கம் 154

அரற்றி - அடிக்கடி கூறி.
அருகன் - அருகதேவன்.
உரிமைப்பள்ளி - அந்தப்புரம்.

பக்கம் - 155

மணமறுக்குதல் - மனஞ்சுழலுதல்.
தூயையாகியிருத்தல் - பரிசுத்தமுடைமையாய் இருத்தல்.

பக்கம் - 156

வெள்ளுடை - வெள்ளை ஆடை.
வெவ்விய - வெம்மையான.
இயைவதாக - பொருந்துவதாக.

பக்கம் - 157

பூம்புறம் நீவி - அழகிய முதுகைத் தடவி.
எங்ஙனம் - எவ்வாறு.
ஆற்றினை - பொறுத்தாய்.
இலங்கிழை - விளங்குகின்ற ஆபரணம்.
பிறள் - அயலாள்.
தீண்டி - பரிசித்து; தொட்டு.
அணை - படுக்கை.
வறியவன் - தரித்திரன்.

பக்கம் - 158

கண்படை - தூங்குதல்.
நியமங்கள் - நித்திய கருமங்கள்.
வீசி - கொடுத்து.
விரகம் - தலைவன் தலைவிகள் தம்முள் பிரியும் பிரிவு.

பக்கம் - 159

ஊறு - இடையூறு.
யுகந்தராய - யூகியே.
முனிவனை - முனிவனாக உள்ளாய்!
இனி - இப்பொழுது.
யாணர் - புதியது.
உருத்து - தோன்றி.
கயத்தியேன் - தாழ்வையுடையேன்.

பக்கம் - 160

இயைந்து - உடன்பட்டு.
கைவிடாது - தளரவிடாமல்.
மீக்கூரிய = மீக்கூர்ந்த - அதிகரித்த.

வற்றல் செல்லாத-குறையாத.
ஆலவித்து - ஆலவிதை.
ஞாலம் - பூமி.
சால - மிகுதியாக.
விழவயர்ந்தனர் - திருவிழாச் செய்தனர்.
பஞ்சவண்ணப்படாகை - பஞ்ச வர்ணப் பெருங்கொடி.
வரம்பு - எல்லை.
வீறு - வேறொன்றற்கு இல்லாத அழகு.
முகமன் - உபசார வார்த்தை.
தவ்வை - தமக்கை.

பக்கம் - 161

மேம்படுதல் - சிறப்புற்று விளங்குதல்.
மாயச்சாக்காடு - பொய் மரணம்.
அகத்தொற்றாளர் - அக ஒற்றர்.
உன்திறத்தும் - உன்னிடத்தும்.

பக்கம் - 162

திண்ணியவாய் - உறுதியை உடையனவாய்.
கலம் - பாத்திரம்.
அருளித்தருதல் - அருள்புரிதல்.
என்குற்றை - எனக்கு ஆக வேண்டிய காரியம்.
ஊடினள் - பிணங்கினள்.
தோற்றப் பொலிவு - இயற்கை அழகு.
பெண்மை - பெண்தன்மை.
தெருட்டி - அறிவுறுத்தி.
மருட்டி - மயங்கச்செய்து.

பக்கம் - 163

துனி - தணியா ஊடல்.
வியக்கும்படி - அதிசயிக்கும்படி.
ஏனாதி மோதிரம் - ஏனாதிப் பட்டத்தார்க்கு உரிய மோதிரம்.
செறித்தல் - சேர்த்தல்.
இலக்கம் - லக்ஷம்.
வருவாய் - வரும்படி.
வேதனம் - சம்பளம்.

பக்கம் - 164

நல்கினன் - கொடுத்தனன்.
விருத்தி - சீவிதம் (மானியம்).
சேடிமார் - வேலைக்காரிகள்.
கூறு - பிரிவு.
வாயில் காவலன் - வாயில்காப்போன்.
கடைத்தலையில் - தலைவாசலில்.
செற்றம் - தணியாக் கோபம்.

பக்கம் - 165

குறிப்பினெச்ச நெறிப்படநாடி - குறிப்பினாலே ஒழிந்தவற்றை வழிப்பட ஆராய்ந்து.
கிளவி - சொற்கள்.
கறுத்து - கோபித்து.
திரிந்து - வேறுபட்டு.
பிறைப்பூண் - சந்திர ஹாரம்.
பெருமகன் அவன் மாட்டு - அரசன்பால்.
கூறுதல் செல்லா - கூறாத.
செய்கென் - செய்க என.
மனத்தது - மனத்தில் உள்ளது.
முன்னி - முற்பட்டு.
ஒன்னார் - பகைவர்.
புல்லோர் - அற்பர்; புன்மையை உடையோர்.

ஓரீஇ - நீக்கி.
கெழீஇ - கொண்டு.
கட்டுரை மகள் - பொருள் பொதிந்த சொற்களைக் கூறுபவள்.

பக்கம் - 166

தன்னுடைய - உன்னுடைய.
தன்னை - உன்னை.
குழவி - குழந்தை.
இத்துணை - இவ்வளவு.

பக்கம் - 167

சொற்றனன் - சொன்னான்.
காடு கெழு குறும்பு - காடுகள் நெருங்கிய குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த பாலைநிலம்.
கனமலை வட்டம் - பெரிய மலைகளை உடைய இடம்.
பொன்னணி - பொன் ஆபரணம்.

பக்கம் - 169

குறளி - மிகக் குறிய வடிவம் உடையவள்.
போகட்டுவிட்டு - போட்டு விட்டு.
தாமம் - மாலை.
குழன்றது - வளைந்தது.
அழன்றது - வெம்மையுற்றது.
வியர் - வேர்வை.
நித்திலம் - முத்து.
கந்துகம் - பந்து.
இழை - ஆபரணம்.
திறத்திறம் - வகைவகையாக.

பக்கம் - 170

சிம்புளித்து - கண்ணை மூடிக் கொண்டு.
கம்பிதம் - நடுக்கமுள்ள பாட்டு.
பள்ளியம்பலம் - படுத்தற்குரிய பொதுவிடம்.

பக்கம் - 171

சீற்றம் - கோபம்.
பணி - வேலை.
வண்ண மகள் - அலங்காரஞ் செய்பவள்.

பக்கம் - 172

பூந்தாது - பூவிலுள்ள மகரந்தப்பொடி.

பக்கம் - 173

அவ்வணியை - அந்த அலங்காரத்தை.
கூத்தப் பள்ளி - நாடகசாலை.
குச்சரக்குடிகை - கூச்சர தேசத்துச் சிற்பம் அமைந்த குடிகை.
வேதிகை - திண்ணை.

பக்கம் - 174

ஆடல்பேரறை - ஆடுதற்குரிய பெரிய அறை; மேற்கூறிய குடிகை.
சார்ந்தபின் - அடைந்த பின்பு.
அளவளாவி - கலந்து.

பக்கம் - 175

தானை - சேனை.
தருகுவல் - தருவேன்.
பருவரல் - துன்பம்.

மானே தேனே - மான்போன்ற பார்வையை உடையாய்; தேன்போன்ற சொல்லை யுடையாய்.

பக்கம் - 177

தூர்த்தக் கள்வன் - காமபரவச னாகிய திருடன்.
கேசம் - மயிர்.
பயிற்சி - வழக்கம்.
கத்தரிகை - கத்தரிக்கோல்.
கைம்மலர் - கையாகிய பூ.
தீண்டுதல் - தொடுதல்.

பக்கம் - 178

நீற்றை - விபூதியை.
தட்கென்று - அஞ்சி.
விழுநர் - விழுபவர்.
எழுநர் - எழுபவர்.
அழுநர் - அழுபவர்.
அணைநர் - அணைபவர்.
செயிர் - குற்றம்.
மாபெருந் தேவி - பட்டமகிஷி.

பக்கம் - 179

சோர்விடம் - தளர்ந்த சமயம்.
ஆயம் - கூட்டம்.
பணிப்பெண் - வேலைக்காரி.
தன் கடமை - உன் கடமை.
குறை - வேண்டுகோள்.
பெண்ணீர்மைக்கு இயல் - பெண் தன்மைக்குரிய இயல்பு.
அழேற்க - அழாதே.
பாவாய் - பிரதிமை போல்வாய்.
அரும்பெறற்றவ்வை - பெறுதற் கரிய தமக்கை (வாசவ தத்தை).

பக்கம் - 180

மகளிர் மூவர் - வாசவதத்தை, பதுமை, மானனீகை என்று பெயர் வைத்துக்கொண் டிருந்த வேறொரு வாசவ தத்தை.
திறை அளப்ப - கப்பஞ் செலுத்த.
தரூஉம் - கொடுக்கும்.
தழைப்ப - செழிக்க.
பருவ முதிர்ச்சி - பிராய முதிர்ச்சி.

பக்கம் - 181

வெள்ளியங்கிரி - வெள்ளிமலை.
மந்தர அரசன் - வித்தியாதர அரசன்.
பற்றுக்கோடு - ஆதாரம்.
ஆடவர் திலகம் - ஆண்மக்களில் சிறந்தவன்.
கடப்பாடு - கடமை.
வேண்டுகோள் - பிரார்த்தனை.

பக்கம் - 182

போக பூமி - போகத்தை மட்டும் நுகருதற்குரிய இடங்கள்; ஆதியரிவஞ்சம் முதலியன.
மருங்கு - பக்கம்.
இல்லோர்க்கு - வறுமையுற் றோர்களுக்கு.
உறுபொருள் - மிக்க பொருள்.
வீசுபவர் - கொடுப்பவர்.
சில்லென் கூந்தல் - சிலவாகிய கூந்தலை.
பிணையல் - மாலை.
நெற்சிறுதாலி - நெல்லாலாகிய சிறிய தாலி.

பக்கம் - 183

போது - மலரும் பருவமுள்ள பேரரும்பு.
ஒருகாழ்வடம் - ஒற்றைச் சரட்டாலாகிய வடமென்னும் ஆபரணம்.
கோடித்துகில் - புதிய ஆடை.
உத்தரீகம் - உத்தரியம்; மேலாடை.
குவளைப்போது - நீலமலர்.

பக்கம் - 184

கயம் - குளம்.
நீரமகள் - நீரிலுள்ள தெய்வ மங்கை.
ஏற்றவள் - தகுதியானவள்.
சின்மலர் - சிலவாகிய பூ.
சலிப்பு - மன இளைப்பு.

பக்கம் - 185

நரவாண காண்டம் - உதயணன் குமாரனாகிய நரவாணனுடைய பிறப்பு முதலிய வற்றைக் கூறும் பகுதி.
ஆசி - ஆசீர்வாதம்.
புறவு - புறா.
பார்ப்பு - குஞ்சு.

பக்கம் - 186

இறைவன் - தலைவன்.
புதல்வன் - புத்திரன்.
துயிலுகையில் - தூங்குகையில்.
வெள்ளானை - வெள்ளை யானை.

பக்கம் - 187

கண்ணுற்ற - பார்த்த.
சூளுறைந்து - சபதம் செய்து.
தியானித்தல் - நினைத்தல்.

பக்கம் - 188

விண் - ஆகாயம்.

பக்கம் - 189

காலகூடம் - யானையை வருத்துவதாகிய ஒரு நோய்.
பஞ்ச மந்திரம்-ஐந்து மந்திரம்; அவை பஞ்ச நமஸ்காரமென்றும் வழங்கப்படும்; சைனமதத்திற்கு உரியவை.

பக்கம் - 190

தப்பாது - தவறாது.
உருவேற்றுதல் - பல முறை ஜபித்தல்.

பக்கம் - 191

உமை - உமாதேவி.
நாட்டம் - கண்.
தச்சுவினை இளைஞன் - இளம் பருவத்தை உடைய தச்சன்.
மாறாக - பிரதியுபகாரமாக.

பக்கம் - 192

சிறப்பயர்தல்-சிறப்புச் செய்தல்.
சம்மானம் - வெகுமதி.

பக்கம் - 193

யாப்பியை - யாப்பியாயினியை.
உள்ளுதோறுள்ளுதோறும் - நினைக்குந்தோறும் நினைக்குந் தோறும்.

பக்கம் - 194

பெருகுதலுற்று - வளர்ச்சி யடைந்து.
இட்டவள் - போகட்டவள்; எறிந்தவள்.
கவர்ந்தது - கொள்ளை கொண்டது.

பக்கம் - 195

விரல் நிரை - விரல்களின் வரிசை.
ஒழுகு கொடி மூக்கு - நீண்ட கொடி போலும் மூக்கு.

பக்கம் - 196

விழாவணி - திருவிழாவின் அலங்காரம்.
கொடிவீடு - பூங்கொடியாலாகிய வீடு; லதாக்கிருகம்.
துயிலுணர்ந்தெழுந்து - தூங்கியெழுந்து.
ஒருதலை - நிச்சயம்.

பக்கம் - 197

வேட்கை - விருப்பம்.
விச்சை - வித்தை.

பக்கம் - 199

நவநிதி - ஒன்பது வகையான பொருள்களின் தொகுதி ஒன்பது வகையான நாணய முமாம்.

பக்கம் - 200

துறவுக்காண்டம் - உதயணன் முதலியோர் துறவறம் பூண்டது முதலியவற்றைக் கூறும் பகுதி.
குத்துக்கோற்காரர் - குத்துக் கோலைக் கையிலே தாங்கி யானையின் முன் நின்று அது வெறிகொண்ட பொழுது முகத்தில் குத்தி அதனை அடக்கும் ஒருவகை வேலைக் காரர்.
சாரணர் - சைன முனிவர்.
அறவுரை - தருமோபதேசம்.

பக்கம் - 202

இருக்கை - ஆசனம்.
துறந்து - நீங்கி.

பக்கம் - 203

விரைகின்றது - விரைந்து செல்கின்றது.